உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# திருப்புத்தூர்ப் புராணம்.

---

இரண்டாம் பதிப்பு.

இது.

ஸ்ரீ வன்றெண்டரவர்கள் மாணாக்கருளொருவராகிய

காரைக்குடி.

ராம. சொ. சொக்கலிங்கச் செட்டியாரவர்களால்

இயற்றப்பெற்று

ஷை௸ர் மெ. பெரி. ராம. மெ.

ஞானசம்பந்தச் செட்டியாரவர்களால்

குமரன் அச்சியந்திரசாலையில் அச்சிடப்பெற்றது.

ருதிரோத்காரி௵ கார்த்திகை௴.



திருப்புத்தூர்ப்புராணம்.

முதலில் சிவபாகம் ஞானாம்பிகாப் பிரசிலும்
மத்தியில் சிவபாகம் ஞானசம்பந்த விலாசப் பிரசிலும்
முடிவில் குமரன் பிரசிலும் அச்சிடப்பெற்றது.



# முகவுரை.

ஸ்ரீமந் மணிவாசகப் பெருமான் "பாண்டிநாடே பழம் பதி" என்பது முதலிய பற்பல திப்பிய வாக்கியங்களால் விதந் தெடுத் தோதப்பெற்ற பாண்டிநாட்டிலே பரமசிவாபேதர்களாகிய சுத்தாத்துவித சித்தாந்தசைவ சமயாசாரியர்கள் திருவாய் மலர்ந்தருளிய திராவிட சுருதிகளாகிய தேவார திருவாசகாதி திருவருட் பாடல்பெற்ற திருத்தலங்களின் ஒன்றுய்த் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் திருநாவுக்கரசு நாயனார் தேவாரப்பதிக மிரண்டு பெற்று விளங்குவது திருப்புத்தூரென்னும் சிவஸ்தலம்.

இத் தலமகிமை, பதினென் புராணங்களுட் சிறந்த காந்த மகா புராணத்தின் ஆறு சங்கிதைகளிற் சிறந்த சங்கர சங்கிதையிலே ஸ்ரீ தலமான்மியம் நவபுரி மான்மியமென விளங்குவதாம். இம்மகிமை வடமொழியி லிருத்தலால் இது தமிழுலகர்க் குபயோகமாகும்படி பெரியாராஞ்ஞை சிரமேற்கொண்டு திருவருள் விளக்கியவாறு தென்மொழியாகிய தமிழ்மொழி பெயர்த்துத் திருப்புத்தூர்ப் புராணம் என்று பெயர்தந்து இற்றைக்கு முப்பது வருடங்களுக்கு முன் அச்சிட்டு வெளியிடப் பெற்று நாளடைவிலே செலவாகி விட்டபடியால் மேலும் பல அறிஞர் விருப்பம் நோக்கிச் சிற்சில குறிப்புரைகளும் விளக்கி மெ. பெரி. ராம. மெ. ஞானசம்பந்தச் செட்டியாரவர்கள் பொருள்கொண்டு அச்சிடப்பெற்றது.

இதில், சிற்சில இடங்களில் எதுகை முதலியன நோக்கி நகரத்துக்கு னகரம் சேர்த்துள்ளது.

ராம. சோ.



உ

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.

---

ஸ்ரீ வீணாகாந புரஸ்த நல்லூராக்கிய நகரநிவாஸ

சுத்தாத்துவித சித்தாந்தசைவ வியவஸ்தாபக

ஸ்ரீமந் நாவலர் பெருமான் பாததூளி சிரமேற்கொண்ட

## ஸ்ரீ அம்பலவாண நாவல சுவாமிகள் இயற்றியது.

---

திருவளரு மலர்ச்சும்மைச் செழும்பொழில்கள் சூழ்ந்திலங்கு
மருவளர்செந் தமிழ்ப்பாண்டி மண்டலத்துப் பன்னான்கா
முருவளர்வான் மதிச்சடையார்க் குகந்ததல மவற்றொன்று
புருவளர்விற் றிருவளர்மா புரிதிருப்புத் தூராமால். (௧)

அன்னதல மதுகௌரி யரியலர்மின் காரிசுரர்
மன்னவன்சே யிவர்முதலோர் தொழுதுவரம் வாய்ந்ததெனி
வின்னதென விதன்பெருமை யியம்புநர்யா ரிவ்வுலகின்
முன்னாபல மொழியுள்ளு முதன்மொழியாம் வடமொழியில். (௨)

சூதமுனி யொருவாறு சொற்றதனைத் தூய்மைமிகு
மாதவத்தோர் வழுத்துமருள் வளஞ்சால்செந் தமிழ்மொழியி
லோதுகென வானன்பர் பலர்வேண்ட வுவந்துரைத்தான்
போதமலி நூல்கள்பல புரைதபக்கற் றுணர்புனிதன. (௩)

அருளடக்கம் பொறைவாய்மை யன்புநடு நிலையின்சொற்
பொருண்மிகுமெய்க் கொடையாதி பொருந்துகுணக் குன்றனையான்
திருவருளே யுருக்கொளுஞ் சீமானா வலர்பெருமான்
குருபதத்தன் பாலுரிமை யெனக்கிசைந்த கொள்கையினான். (௪)

சைவசிகா மணியெங்கள் சாதுசிகா மணிபாசத்
தெவ்வைமுனிந் திடுதீர சிகாமணிநா வலர்செம்மல்
செவ்விதருட் டொடர்புகிகழ் சிறப்பதனு லென்ஞான்று
மெவ்வழியுந் திறம்பாம லென்பாலு மன்புடையான். (௫)

வேதவா கமங்கஎெலாம் விளம்புபொருள் சிவமென்றே
போதமலி தாவரசங் கமமிவற்றிற் பொருந்தநெறி
யாதரவின் வழிபடுவோ னக்கமணி வெண்ணீறு
மோதுதிரு வெழுத்தைந்து முறுதனமாக் கொண்டுயர்ந்தோன். (௬)

பாடுபுகழ் நால்வருரை முதன்முறைகள் பன்னிரண்டுந்
தேடுமியன் மெய்கண்ட சித்தாந்தம் பதினன்கும்
வீடுறுமெய்ச் சிவாநுபவம் விளைநிலமா வதுவேட்டு
நாடுமருட் டாளாண்மை வழுவாத நன்மையினன். (௭)

அரியயற்கு மரிதாய வசிதாரா விரதமென்ப
பார்மனையை நயவாமை யங்கதையிப் பார்மீதே
திரமுறுதன் செயலதனுற் றெருட்டுமுயர் சீலனெனத்
தரியலரும் வியந்துரைக்கத் தகுமிதரி சனமானோன். (௮)

என்போல்வார்க் குற்றதுணை யியல்காரைக் குடியதனி
லின்பால்செய் வணிகர்குலத் திராமநா தக்குரிசி
றன்பான்மெய்த் தவத்துதித்தோன் சைவநெறி தகவளர்க்கு
மன்பானன் னெறிநின்ற சொக்கலிங்க மாநிதியே. (௯)



# சூசிபத்திரம்


| பக்கம். | சருக்கம். | பாடற்றொகை. |
|---|---|---|
| ௧ | காப்புநூற்பயன் வாழ்த்து | ௪ |
| ௨ | கடவுள் வாழ்த்து | ௩௦ |
| ௭ | பாயிரம் | ௧௧ |
| ௮ | திருநாட்டுச்சிறப்பு | ௧௧௩ |
| ௨௩ | திருநகரச்சிறப்பு | ௧௫௧ |
| ௪௩ | புராணவரலாறு | ௩௩ |
| ௪௭ | தலவிசேடச்சருக்கம் | ௧௮ |
| ௪௯ | தீர்த்தவிசேடச்சருக்கம் | ௧௮ |
| ௫௧ | மூர்த்திவிசேடச்சருக்கம் | ௨௩ |
| ௫௪ | திருக்கைலாயச்சருக்கம் | ௮௫ |
| ௯௯ | கௌரிதாண்டவச்சருக்கம் | ௨௩௦ |
| ௧௫ | இலக்குமிதாண்டவச்சருக்கம் | ௧௪௨ |
| ௧௧௭ | வைரவச்சருக்கம் | ௧௫௪ |
| ௧௩௭ | சிதளிதீர்த்தச்சருக்கம் | ௯௧ |
| ௧௫௧ | ஆதிசந்திரபாண்டியச்சருக்கம் | ௨௩௨ |
| | | ஆ ௲௩௱௩௰௫ |




# பிழைத்திருத்தம்.

—o—

## தேவாரம்.

| பக்கம், | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| க | க | உ | ளொடு | ளோடு |
| உ | அ | ங | வல்லி | வல்ல |

## புராணம்.

| | | | | |
|---|---|---|---|---|
| ங | அ | உ | வந்தருளு | வுவந்தளு |
| ,, | ,, | ,, | கண்ட | கண்டங் |
| ச | கஅ | உ | சொல | சொல் |
| சா | உசா | உ | நீத்த | கோதுநீத்த |
| கஉ | ஙக | உ | வம்பணி | வெம்பணி |
| கங | ஙஉ | ச | காற்றினி | காற்றனி |
| ,, | ஙசா | க | கோணு | கொணு |
| ,, | ஙஎ | க | மெய்தரு | பெய்தரு |
| கச | சரு | ங | ரிடைபுண | ரிடைப்புண |
| கஅ | எங. | ங | யார்போ | யாற்போ |
| உ0 | அஅ | ச | றிறள் | றிரள் |
| உக | கூஎ | க | படாக்குப் | படாக் |
| ,, | க0க | க | தொன்ரூர் | தொன்ரூ |
| ,, | க0உ | ச | புறப்ப | புரப்ப |
| உஉ | க0ரு | ங | உணந்தி | உணர்ந்தி |
| உஉ | க0அ | க | நிலத்தில | நித்தில |
| உங | ககங | ச | பெனர் | பெனற் |
| உச | சா | க | மேதலாய் | மேலதாய் |
| ,, | கூ | க | மகுசங் | மிகுசங் |
| உரு | கரு | க | கவிகைச் | கவிகைக் |
| உசா | | உகூ | சல்பன் | கல்பன் |
| உஎ | உசா | ங | மெய்யார் | மெய்யார் |
| உகூ | சரு | ங | ரூழிசெய் | ரூழில்செய் |
| ஙஉ | எக | ச | கவாவர் | கவர்வர் |
| ஙங | எச | உ | யுயர்த்திய | யுயர்த்தியு |
| ,, | எஎ | ச | ருமிவர் | ரும்மிவர் |
| ஙரு | கூரு | ச | வோடும் | வொடும் |
| ஙசா | கூகூ | ங | பசுபடு | பசுப்படு |
| ,, | க00 | ச | வினபுரி | வினப்புரி |

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை | திருத்தம். |
|---|---|---|---|---|
| ,, | க0௫ | ௪ | கமந்து | கமர்ந்து |
| ௩அ | ககச | ௩ | முட்பொ | முப்பொ |
| ,, | கக௫ | ௨ | யரியமுத | யரிமுத |
| ,, | கக௬ | ௩ | நியைநத | நியைந்த |
| ,, | க௨உ | ௪ | ரன்பார்காசி | ரன்பரற்காசி |
| ௪0 | க௩க | ௪ | லுலகி | னுலகி |
| ,, | க௩௪ | க | களினிடை | களிடை |
| ,, | க௩எ | ௪ | வேவு | மேவு |
| ௪௨ | க௪அ | ௪ | செல்வன | செல்வவள |
| ௪௩ | க | ௪ | மேதியின் | மேதினியின் |
| ௪௪ | க0 | ௪ | துண்ண | திண்ண |
| ௫௨ | ௬ | ௨ | ரேனு | ரேனும் |
| ௫௩ | கக | ,, | பாட்டு | இரட்டித்துவிட்டது |
| ௫௬ | கக | ௪ | டகையை | டகைய |
| ,, | க௪ | ௨ | காத்தி | கரத்தி |
| ௫அ | ௨௫ | க | சிளர் | கிளர் |
| ,, | ௩0 | ௨ | சநது | சந்து |
| ௬0 | ௪௫ | க | முதல் | முதல |
| ௬க | ௪எ | க | மூன்றும் | மூன்றும் |
| ௬௩ | ௬௬ | க | திகழ | திகழ் |
| ௬௪ | எக | ௪ | மராக | மராக் |
| ,, | எ௫ | ௪ | பங்ச | பங்க |
| ௬எ | ௫ | ௩ | மன்றி | மன்றின |
| எக | ௪0 | ௨ | பால | பால் |
| எ௨ | ௪௪ | ௩ | கரச | கரசு |
| ,, | ௪௬ | க | நகவே | நகவேத |

புட்நோட் * ஆதம்—விருப்பம்

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை | திருத்தம். |
|---|---|---|---|---|
| ,, | ௪௬ | க | கனியி | கணியி |
| எ௩ | ௫க | ௨ | பிறாற | பிறாற் |
| ,, | ௫௩ | ௩ | யானரேர் | யான்ரேர் |
| ,, | ௫௫ | ௪ | கிதழ | கிதழ் |
| ,, | ,, | ,, | ணரந்து | ணர்ந்து |
| எ௪ | ௬௨ | ௨ | கைகெங்கை | கைக்கொங்கை |
| ,, | ௬௩ | ௪ | தொழவிரு | தொழவிரு |
| எஎ | ௬0 | ௪ | பெருாவ | பொருவ |
| அக | க௨௨ | ௨ | திப்பய | திப்பிய |
| அ௨ | க௩க | ௩ | துகிலொடுக் | துகிலொடு |
| அ௪ | க௪க | ௪ | கண்ட | கண்டை |
| அ௬ | க௫௬ | ௪ | மஞ்சுனம் | மஞ்சனம் |

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| கூ0 | ககக | க | மாதவரா | மாதவனு |
| கூங | உகரு | உ | ள்வேயருான் | யருள்வோன் |
| கூரு | உஉகூ | உ | தகமை | தகைமை |
| கூஅ | புட்நோ | ட் | தத்தம் | தந்தம் |
| க0உ | ருஉ | ங | வுந்தம் | வுந்தச் |
| க0ரு | எச | ங | பருகு | பிருகு |
| ,, | அக | ச | பிதிவுற | பதியுற |
| க0கூ | ககஉ | க | யதிகேட் | யதுகேட் |
| ககஅ | உஅ | ச | தன்ட | தண்ட |
| கஉ0 | சஉ | ங. | கழுவு | கழ்வு |
| கஉஉ | ருச | ச | புரிந்தியி | புரிந்திய |
| கஉச | சாசா | ச | சிவனிருத் | சிவநிறுத் |
| கஉச | சாஎ | க | ருமவி | மருவி |
| ,, | ,, | ச | திருவு | திருவ |
| ,, | எக | ங | சமா | சமாச |
| கஉரு | எங | ங | பசு | பேசு |
| ,, | எஎ | ங | தம்பா | தம்பவ |
| கஉசா | எகூ | ங | திடுச | திடுகு |
| ,, | அ0 | ங | வித்தகு | வித்தகு |
| கஉஎ | கூஉ | ச | தரிவனவாய் | தறிவனவாய்ச் |
| கஉஅ | கூச | ங | யெனசிவா | யெனச்சிவா |
| கஉகூ | ச0உ | க | ஞானி | ஞாளி |
| கங0 | க0சா | ச | யலக | யலக்க |
| கஙக | ககச | ச | கொள் | கொல் |
| கஙஉ | கஉரு | ங | மிக்குய | மிக்குப |
| ,, | கஉசா | ங. | சிரமிகை | சிரமிசை |
| கஙசா | கசஎ | உ | வில்சார் | வில்வார் |
| கச0 | கசா | ங | விலங்க | விலிங்க |
| ,, | கஎ | க | நெறி | னெறி |
| கசஉ | ஙச | ச | ணிமிரிய | ணிமிரிம |
| கசசா | ருஎ | க | மலாடி | மலாடி |
| ,, | ,, | ங | நேர்கின் | நேர்நின் |
| ,, | சா0 | க | அயனைபெருமு | அனையபெரும் |
| ,, | சாச | க | புரிந்து | புரிந்த |
| கசஎ | சாஅ | உ | பதிபுகழு | பதிபுகலு |
| கஎங | கருஉ | ச | மார்ட்பி | மார்ப்பி |

சிவமயம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

திருவாய்மலர்ந்தருளிய

# தேவாரத்திருப்பதிகம்.

---

### பண்—தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

வெங்கள்விம்முவெறியார்பொழிற்சோலை
திங்களொடுதிளைக்குந் திருப்புத்தூர்க்
கங்கைதங்குமுடியாரவர்போலு
மெங்களுச்சியுறையு மிறையாரே. (௧)

வேனல்விம்முவெறியார்பொழிற்சோலைத்
தேனும்வண்டுந்திளைக்குந்திருப்புத்தூ
ரூனமின்றியுறைவாரவர்போலு
மேனமுள்ளுமெயிறும்புனைவாரே. (௨)

பாங்குநல்லவரிவண்டிசைபாடத்
தேங்கொள்கொன்றைதிளைக்குந்திருப்புத்தூ
ரோங்குகோயிலுறைவாரவர்போலுந்
தாங்குதிங்கடவழ்புன்சடையாரே. (௩)

நாறவிண்டநறுமாமலர்கவ்வித்
தேறல்வண்டுதிளைக்குந்திருப்புத்தூ
ரூறல்வாழ்க்கையுடையாரவர்போலு
மேறுகொண்டகொடியெம்மிறையாரே. (௪)

இசைவிளங்குமெழில்சூழ்ந்தியல்பாகத்
திசைவிளங்குபொழில்சூழ் திருப்புத்தூர்ப்
பசைவிளங்கப்படித்தாரவர்போலும்
வசைவிளங்கும்வடிசேர்நுதலாரே. (௫)

வெண்ணிறத்தவிரையோடலருந்தித்
தெண்ணிறத்தபுனல்பாய்திருப்புத்தூ
ரொண்ணிறத்தவொளியாரவர்போலும்
வெண்ணிறத்தவிடைசேர்கொடியாரே. (௬)

நெய்தலாம்பல்கெழுநீர்மலர்ந்தெங்குஞ்
செய்கண்மல்குசிவனார்திருப்புத்தூர்த்
தையல்பாகமகிழ்ந்தாரவர்போலு
மையுணஞ்சமருவுமிடற்றாரே. (௭)

கருக்கமெல்லாங்கமழும்பொழிற்சோலைத்
திருக்கொள்செம்மைவிழவார்திருப்புத்தூ
ரிருக்கவல்லிவிறைவரவர்போலு
மரக்கனொல்கவிரலாலடர்த்தாரே. (௮)

மருவியெங்கும்வளருமடமஞ்ஞை
தெருவுதோறுந்திளைக்குந்திருப்புத்தூர்ப்
பெருகிவாழும்பெருமானவன்போலும்
பிரமன்மாலுமறியாப்பெரியோனே. (௯)

கூறைபோர்க்குந்தொழிலாரமண்கூற
றேறல்வேண்டாதெளிமின்றிருப்புத்தூ
ராறுநான்குமமர்ந்தாரவர்போலு
மேறுகொண்டகொடியெம்மிறையாரே. (௧௦)

நல்லகேள்விஞானசம்பந்தன்
செல்வர்சேடருறையுந்திருப்புத்தூர்ச்
சொல்லல்பாடல்வல்லார்தமக்கென்று
மல்லறீருமவலமடையாவே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

## திருநாவுக்கரசுநாயனார்

திருவாய்மலர்ந்தருளிய

# தேவாரத்திருப்பதிகம்.

---

## திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

புரிந்தமரர்தொழுதேத்தும்புகழ்தக்கான்காண்போர்விடையின்பாகன்காண்புவனமேழும், விரிந்துபலவுயிராகிவிளங்கினான்காண்விரைக்கொன்றைக்கண்ணியன்காண்வேதந்தானுந், தெரிந்துமுதல்படைத்தோனைச்சிரங்கொண்டோன்காண்டீர்த்தன்காண்டிருமாலோர்பங்கத்தான்காண், டிருந்துவயல்புடைதழுவுதிருப்புத்தூரிற்றிருத்தளியான்காணவனென்சிந்தையானே (௧)

வாராருமுலைமங்கைபங்கத்தான்காண்மாமறைகளாயவன்காண்மண்ணும்விண்ணுங், கூரார்வெந்தழலவனுங்காற்றுநீருங்குலவரையுமாயவன்காண்கொடுநஞ்சுண்ட, காராருங்கண்டன்காணெண்டோளன்காண்கயிலைமலைப்பொருப்பன்காண்விருப்போடென்றுந், தேராருநெடுவீதித்திருப்புத்தூரிற்றிருத்தளியான்காணவனென்சிந்தையானே. (௨)

மின்காட்டுங்கொடிமருங்குலுமையாட்கென்றும்விருப்பவன்காண் பொருப்புவலிச்சிலைக்கையோன்கா,ணன்பாட்டுப்புலவனாய்ச்சங்கமேறிநற்கனகக்கிழிதருமிக்கருளினோன்காண், பொன்காட்டக்கடிக்கொன்றைமருங்கேநின்றபுனக்காந்தள்கைகாட்டக்கண்டுவண்டு,தென்காட்டுஞ்செழும்புறவிற்றிருப்புத்தூரிற்றிருத்தளியான்காணவனென்சிந்தையானே. (௩)

ஏடேறுமலர்க்கமலத்தயனுமாலுமிந்திரனும்பணிந்தேத்தவிருக்கின்றான்காண், டோடேறுமலர்க்கடுக்கைவன்னிமத்தந்துன்னியசெஞ்சடையான்காண்டுகளர்சங்க, மாடேறிமுத்தீனுங்கானல்வேலிமறைக்காட்டுமாமணிகாண்வளங்கொண்மேதி, சேடேறிமடுப்படியுந்திருப்புத்தூரிற்றிருத்தளியான்காணவனென்சிந்தையானே. (௪)

கருமருவுவல்வினைநோயகற்றினான்காண்காமருபூங்கச்சியேகம்பத்தான்காண், பெருமருவுபேருலகிற்பிணிகடீர்க்கும்பெரும்பற்றத்தண்புலியூர்மன்றுளான்காண், டருமருவுகொடைத்தடக்கையளகைக்கோன்றன்சங்காத்தியாரூரிற்றனியானைகாண், டிருமருவுபொழில்புடைசூழ்திருப்புத்தூரிற்றிருத்தளியான்காணவனென்சிந்தையானே. (௫)

காம்பாடுதோளுமையாள்காணநட்டங்கலந்தாடல்புரிந்தவன்காண்கை யில்வெய்ய, பாம்பாடப்படுதலையிற்பலிகொள்வோன்காண்பவளத்தின்பருவ ரைபோற்படிமத்தான்காண், டாம்பாடுசினவிடையேபகடாக்கொண்டசங்க ரன்காண்பொங்கரவக்கச்சையோன்காண், சேம்பாடுவயல்புடைசூழ்திருப்பு த்தூரிற்றிருத்தளியான்காணவனென்சிந்தையானே. (சு)

வெறிவிரவுமலர்க்கொன்றைவிளங்குதிங்கள்வன்னியொடுவிரிசடை யேன்மிலைச்சினன்காண், பொறிவிரவுகதநாகமக்கினோடுபூண்டவன்காண் பொருபுலித்தோலாடையான்கா, ணறிவரியநுண்பொருள்களாயினான்காணு யிரம்பேருடையவன்காணந்தண்கானற், செறிபொழில்சூழ்மணிமாடத்திரு ப்புத்தூரிற்றிருத்தளியான்காணவனென்சிந்தையானே. (எ)

புக்கடைந்தவேதியற்காக்காலற்காய்ந்தபுண்ணியன்காண்வெண்ணகை வெள்வளையாளஞ்ச, மிக்கெதிர்ந்தகரிவெருவவுரித்தகோன்காண்வெண்மதி யைக்கலைசேர்த்ததண்மையோன்கா, ணக்கரும்புபெரும்புன்னைநெருங்கு சோலையாருருக்கதிபதிகாணந்தண்டென்ற, றிக்கணைந்துவருமருங்கிற்றிரு ப்புத்தூரிற்றிருத்தளியான்காணவனென்சிந்தையானே. (அ)

பற்றவன்காணேனோர்க்கும் வானோருக்கும் பராபரன்காண்டக்கன்றன் வேள்விசெற்ற, கொற்றவன்காண்கொடுஞ்சினத்தையடங்கச்செற்றுஞானத் தைமேன்மிகுத்தல்கோளாக்கொண்ட, பெற்றியன்காண்பிறங்கருவிக்கழுக் குன்றத்தெம்பிஞ்ஞகன்காண்பேரெழிலார்காமவேளைச், செற்றவன்காண்சீர் மருவுதிருப்புத்தூரிற்றிருத்தளியான்காணவனென்சிந்தையானே. (கூ)

உரமதித்தசலந்தரன்றனாகங்கீண்டவோராழிப்படைத்தவன்காணுலகுகு ழும், வரமதித்தகதிரவனைப்பற்கொண்டோன்காண்வானவர்கோன்புயநெரி த்தவல்லாளன்கா, ணரமதித்துச்செம்பொன்னிறாரம்பூணுமணிந்தவன்கா ணலைகடல்சூழிலங்கைவேந்தன், சிரநெரித்தசேவடிகாண்டிருப்புத்தூரிற்றி ருத்தளியான்காணவனென்சிந்தையானே. (க0)

திருச்சிற்றம்பலம்.

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# திருப்புத்தூர்ப்புராணம்.

## விநாயகர்.

காப்பு.

திருத்த லம்புக ழாரியந் தென்மொழிப்
பொருத்த லம்புனை சொற்பொருள் பொற்புறக்
கருத்த லம்புணர் காட்சியர் காமுறு
மொருத்த லம்புயச் சேவடி யுன்னுவாம். (௧)

### வேறு.

திருவாக்குக் கிறைவனெனுந் தேவகுரு முதலெவருஞ் செயலா ரம்பத்
தொருவாக்கும் பிடுதலையெப் பொருட்கியற்றிக் கருமசித்தி யுறுகின் றாரப்
பொருவாக்குன் றலில்பொருளாங் கைவலிய பத*நிபனைப் புரையி லூனத்
தருவாக்குங் கருணைமழை யும்பன்முக நம்பனையெம் முளத்திற் சேர்ப்பாம்.

### நூற்பயன்.

திருவாழூர் திருப்புத்தூர்ச் சிவசரிதம் படனவிதி சிறப்பச் செய்து
ஒருசார்வத்துடன் கேட்போருரைப்போர் நன்மகவுபொருளுலப்பில் போகந்
தருவாழ்வு பெற்றுநெடு நாளமர்ந்து நரேந்திராய்த் தகுபொன் னாட்டின்
மருவாகின் றின்பமுறீஇ மறைமுதல்வ னறைகழற்கீழ் மன்னி வாழ்வார்.()

### வாழ்த்து.

வேதநெறி மகம்வளர்க விண்மாரி முறைபொழிக விரிநீர் வையத்
தோதுவள மறம்பொருளின் போகங்களை மிகசைவ முயர்க வென்று
மீதுறுக கண்மணியு வெண்ணீறு மைந்தெழுத்தும் விமல ஞான
பூதபரம் பரைபொலிக புரவலன்செங் கோல்வாழ்க புவன மெல்லாம். (௪)

---

* நிபம்-காரணம்

## கடவுள்வாழ்த்து

### சீதளிநாதர்

திருமாத வன்புவனி பெருகுதவப் பிருகுதன திருத்தாள் சென்றே
திருமாத§ வன்புவளர் சிந்தையராய்த் தினம்போற்றுஞ் சீத ளீசன்
றிருமாத வன்புவன மதியிதழி பொதிவேணிச் செம்மல் பாற்க
திருமாத†வன்புவனந் தருபாமன் றிருவடிகள் சென்னி சேர்ப்பாம். (க)

பிறந்தைபல புக்கொழிந்தும் பிரமமெனத் தமைமான்ற பிரமன் மாற்குச்
சிறந்தவய னச்சுதனுந் திருப்பெயரீந் தவர்க்குயர்வு திகழ வேதத்
தறைந்தருளுநிறைந்ததனியருட்கடல்பொற்றிருத்தலத்தினளவாச்செல்வத்
திறந்தழையுஞ் சிதளியிற் சீதளிநா யகன்மலர்த்தாள் சிந்தை சேர்ப்பாம். (உ)

### சிவகாமியம்மை.

காத்தாளைத் தோட்டெழின்ம காத்தாளை யறம்வளர்த்த கமல நாண்செங்
காத்தாளை யருணிறைசா காத்தாளைத் திருத்தலமென் கவிஞர் மாந
காத்தாளை ஞானபஞ்சாக் காத்தாளை யிலங்குசிவ காமி யைச்சே
காத்தாளை மதிமறைச்சி காத்தாளை மலர்த்தாளைக் கருதிவாழ்வாம். (ங)

### நடேசர்.

பைதூக்கி வருமாவப் பணிதூக்கிச் சடையின்மிசைப் பயங்கொளுவு
மைதூக்கிக் காத்திளமான் மறிதூக்கி மதிதூக்கி மதியந் தூக்கிப்
பொய்தூக்கித் தனருமிடைச் சிவகாமி காணவெமைப் போல்வார் தம்மைக்
கைதூக்கி யாளுகைக்கோர் காறூக்கி நடித்தவரைக் கருத்துள் வைப்பாம்.()

### சிவகாமியம்மை. (வேறு.)

தத்துவரோர் கண்டுசுத்தி கண்டு தன்னைத் தான்கண்டு தற்சுத்தி தனையுங் கண்டாங், கொத்தசிவங் கண்டுலவ் துரிய போகத் துற்றிடுபே ரின்பதனை யுணர்வி லேமுங், கைத்தலநெல் லியிற்கண்டு கலப்பவெம்மான் சௌரிடங் கண்மெனக் களிப்பா ளாகிச், சித்தமகிழ்ந் தெமையளிக்கு மன்னை யெங்கள் சிவகாம சுந்தரிதாள் சென்னி சேர்ப்பாம். (ஞ)

### தட்சிணாமூர்த்தி. (வேறு.)

தடவிருக்கம்* மறைமுடிவு தாமுழுதுங் கேட்டுணர்ந்துந் தம்முளையப்
படவிருக்க நால்வருக் குஞ் சித்தாந்தத் தனிப்பொருளைப் பகர்ந்து தேறக்
கடவிருக்க வின்பொருளென் றருட்குறிச்சின் முத்திரைக்கை காட்டிஞான
வடவிருக்கத்தமர்ந்தருளுமறைப்பொருளினறைப்பதுமமலர்த்தாள்போற்றி.

---

§ திருமாத-திரும்பாத † பால்கதிர்-உமாதவன் * தட இருக்கு

## வன்னியடிவிநாயகர்.

எவரெனினு நினைப்பவர்விக் கினந்தீர்த்தல் லார்க்கதனை யியற்றும் வாய்மை திவள்பெயர்தன் றனக்கேயாய்ச் சிறப்பவொளிர் மறைப்பொருளா,த்தெய்வ வானம், புவிதொழுமன் னவபுரியிற் புண்ணியனை வன்னியடிப் புனிதவாழ் வைக், கவளமத களிற்றினையெங் கற்பகத்தை யற்பகத்திற் கண்டுவாழ்வாம்.

## சுப்பிரமணியர்.

அருகுமாற்†றெறுகனற்க ணவதரித்தெம் பவமிரித்தற் கனுதி தொட்டே
திருகுமரந் தையையகற்றிச் சிவந்தழைப்ப வந்தருளுஞ் சேய்தன் கண்ட
கருகுமான் குமரனென னிருபபத மாத்திரத்திற் காண மேவு
மொருகுமரனிருசரணமுளத்திலுஞ்சிரத்திலும்வைத்துவந்துவாழ்வாம்.

## வீரபத்திரர்.

அருமறைமுற்றுணர்ந்தாலுமருளினடங்கார்கெடுவாதுமெய்யென்ற [மும்
றெருளமுற்றுங்கோரமதேதிருவுருவாப்போந்து மகந்தெறன்மேற்கொண்
வருமுறைமற்றடங்கினர்க்காங்கருளறெளிவுறவயற்குவலவனுகும்,
திருவளித்தமறக்கருணையறக்கருணைப்பெருங்கடருள்சென்னிசேர்ப்பாம்.

### வைரவர். (வேறு.)

துயர‡ வந்தனை யருள்கெனத் துதித்தவர் சுகமார்ந்
துயர வந்தனை வகற்றியவ் வூறுசெய் தவர்பாற்
பயர வந்§தனைப் புரிந்தவன் சயந்தனைப் படரு
மயர வந்தனைக் காண்டலு மாற்றினேற் பணிவாம். (௧௦)

### திருநந்திதேவர். (வேறு.)

ஆயுமான் கயிலைமுதல் வாயிலமர்ந் தகம்புறமு மவனே தானே, யாயுமடை வார்தமைத்தன் னடியுறவைத் துட்புகுத்து மரிய காவற், றாயபணி தலைக் கொண்டோன் மெய்ப்போத முணர்த்தருருத் துவமுங் கொண்டு, சேயரை யுமண்ணியராச் சேர்த்தருளு நந்தீசன் றிருத்தாள் போற்றி. (௧௧)

## விட்டுணு.

பாயும்விடை யாயொருபாற்பைங்கொடியாய்ப்பாணமாய்ப் பான்மேற் கொள் ளுந், தூயவரம் பெற்றானைத் துலங்குமவன் றிருநடமே தொழுமுன் னோ னை, மாயவனை மாயவனை மாயவனை யாண்முலையுண் மாண்பி னானை, யாய வரன் சிதளியி னமர்ந்தருளெம் பெருமானை யடியிற் றாழ்வாம். (௧௨)

---

† அருந்தும் மரன் ‡ துயர—துயருருறுதலால். §ரவம். ஒலி.

## இலக்குமி. (வேறு.)

வேரி சத்தி னருளின் விரியுஞ்செவ்*
வாரி சத்தின் மருவு மடந்தைமு
ராரி சத்தித னல்லரு ளேக்கம்
பாரி சத்தின் வளரப் பரசுவாம். (கங)

## சரசுவதி. (வேறு)

ஆலிய கமண்ட லத்தோன் ருலுவி னமர்ந்திட் டன்பர்
சாலிய கமல வேணித் தற்பர னருள்பெற் றுய்வான்
கோலிய கமமெய்ந் நூல்கள் குறித்துண ரறிவு கூட்டும்
வாலிய கமலத் தன்னை மலரடி மனத்துள் வைப்பாம். (கச)

## தமிழாசிரியர். (வேறு.)

அகத்தியல வருந்தமிழ்மா மறைமுதனூ லாய்ந்துதமி ழுவனி மாக்க
ளகத்தியங்கும்பிறப்பொழிந்தின்படைவுறச்சந்திளந்தெ ற லளாவும்வெற்பி
னகத்தியனூ லகத்தியந்தந் தமர்ந்தருளுந் தமிழ்க்குரவ னகிலம்போற்று
மகத்தியனை யகத்தியனை வகலவறி வகலகினைந் தடியிற் றூழ்வாம். (கரு)

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

நாதனுமை நாப்பணின்று நாருருவிற் காழிவந்து நயந்த ஞான்று
மாதியவன் பொருள்பிதாரர்ச் சிதந்தனக்கா தலையுணர்த்து மமைதிவாய்ப்பச்
சிதாறுக் காறுருவ சித்திதந்த புத்சமுதைத் தியே னுள்ள
கீதமொளிர் மணிவிளக்கை வித்தகனை நித்தலுமுள் விரும்பி வாழ்வாம். ()

## திருநாவுக்கரசுநாயனார்.

பார்த்தனவேமனஞ்சோர்ந்துபறைநந்துநளன்வருணன்முதற்பற்பலோரைக்
கூர்த்ததுணைகொடுகுரம்புகுமிற்றியலைகடந்திடுமெக்குரிசிறுண
வார்த்தெறிநீரமிழ்சிலைதன்னருள்வாக்கிறுணையிறுலம்பியாக
நீத்தமுக்கீர்நீத்தெமையும்பவக்கடனீத்திட்டவர்தாணிணைந்துவாழ்வாம்.(கஎ)

## சுந்தரமூர்த்திநாயனார்.

ஆக்குதலுங் காக்குதலு மாதிரண்டு ; வல்லானென் றமர்ந்துந் தன்சேப்
நோக்கெரியி னிறுயுங் கைபறுமால் வெள்கவொரு வெ[illegible]டிநிற் றுன்சொல
வாக்கிலெ ஜறு சேபினுயிர் வெளவுகரா வாவிபினீர் [illegible]
காக்குமவன் பணிவுறவென் கரியுகைத்தோன் விரைம[illegible]ர்த்தா[illegible]ரு [illegible]யாழ்வாம்

---

*வேரியானது சத்தாயுள்ள தனது இன் அருளை [illegible] விரியும் செவ்வாரிசமென்க.

## மாணிக்கவாசகசுவாமிகள்.

ஆசுரர்சை வங்கிலைநீத் தொருமூவ ரிடைப்பலியா தகன்ற மாறன்
மாசினுளங் குலேவுறப்புத் தொருங்கொழித்தாங் கரசடிமை மருவக் கொண்
டேசுபெறு முபநிடத சிந்துநகர்ந் தரியதமிழ்த் தெய்வ வேத [டோன்
வாசகமாம் வரதமணி மழைபொழிசம் வர்த்தமுகின் மலர்த்தாள் போற்றி.

## சண்டேசுரநாயனர்.

தாதையுனக் கொருசாமே மைந்தவென்றூண் டெந்தையரு டகையி ஞேன்
றென், வேதமெலாமாங்காங் நவிதந் துரைப்பவுயர்ந்தபொருள் விதமூன்றாய,
பாதகமேசோறுதரப்பற்றிஞேன் றனைப்பணிவோர்பைம்போதாதி,வாதுமொ
ருபொருடனக்கென் றீட்டாமே பூசைகொள்வோ னிணைத்தாள்போற்றி. ()

### அறுபத்துமூவராதியோர். (வேறு.)

திருக்கைலை தனிலரனு தரிச நோக்கிச் சிவைமகிழ வழைத்திடவந் துலகி
ஞேரைத், தருக்குறுமா சைவநெறி நிறுவத் தாஞேர் சலம்புணர்த்திங் நிலம்
புகுத்தச் சார்ந்த நம்பி, யருக்கணியோன் றூதாதி பணிசெய் வாக்கி யவன்
முதல்கொண் டியற்றுதொண்டத் தொகையின் மேவி, யிருக்குமவ ரியல்பு
ணர்தற் கியாமா ரன்ஞேரிணையடித்தா மரைகணித மேத்தி வாழ்வாம்.(உக)

### நம்பியாண்டார்நம்பிகள். (வேறு)

பொல்லாத விபமுகற்குச் சண்டீச பாகமுநேர் பொற்பி னூட்டும்
வல்லாள ஞதிசைவ மரபின்மணி யடியர்தொகை வகைசெய் வாழ்வு
வில்லாருந் திருமுலைறபன் ஞன்றாகக் கோத்தருளும் விமலன் வானிற்
செல்லாரும் பொழினரைத் திருநகரி னம்பிகழல்சென்னிசேர்ப்பாம்.(உஉ)

### சேக்கிழார்நாயனர். (வேறு.)

திருவருள்வா ரித்தருவான் குன்றையுறீ இ மரபிற் சேக்கிழார் கண்மணியா ய
னபாயன் வினுக்க, டரவிடைதந் திளம்பருவத் தமாத்தியமேற் றமணூற் சா
ர்பகற்றி யுலகுமுதல் கொடுமெய்ந்நூ லுரைத்தவ், வருண்முறைமன் றந்த
ணர்பூ சிப்பவரங்கேற் றியரசிரட்டக் கவரிமுவா யிரர்வேத மோதி, வரமதமா
லூர்ந்துதிரு வருண்மருவு §கிருபா வாகீச பானுவையுட் கொண்டிருண்மாற்
றிடுவாம். (உங)

### மெய்கண்டசிவாசாரியர். (வேறு.)

அருமறையின் சிரத்தெளிவாஞ் சித்தாந் தப்பே ராழிகடைந் தருட்போத வ
முத மீந்த, மருமுதலைக் கறைமிடறு நெற்றிநோக்கு மறைத்தருளி வெண்
ணெய்நகர் வந்த வாழ்வைப், பரசுறுமே ழெழுபெரியர் பாங்கு சூழ்ந்து பணி
வுறத்தன் மயமளித்த பால ரூப, குருமணியை வரமணிமெய் கண்ட நாம
குலமணியை மலரடியைக் குறித்து வாழ்வாம். (உச)

---

§ கிருபாவாகீசர்-அருண்மொழித்தேவர்.

## அருணந்திசிவாசாரியர்.

புலவேடர் புகுந்தாசு புரியு நெஞ்சப் புலத்துயரைம்†பொறிவாண்மெய்ப் புலக்கை யேந்தி, விலகாமற் றவரொழிய வீட்டிக் காம விலங்காதி தடிந்தருளாம் வேலி கோலி, வலமாரு மன்புவித்திச் சிவமார் போக மல்குபர முத்தி நலம் வாய்ப்ப வாய்மை, நலமாருஞ் சிவஞான சித்தி தந்த நாதனரு ணந்திபத நயந்து வாழ்வாம். (உ௫)

## மறைஞானசம்பந்தசிவாசாரியர்.

குலமறையோர் சிரமணியைப் பாத்து வாச கோத்தி ரஞ்செய் தவப்பயனைக் கூறும் வேதத், தலைபழுத்த கனிபிழிந்து நீத்த சாரசைவ சித்தாந்தத் தனிப்ப்பே ரின்ப, நிலையமுதந் தனையடைந்தார்க் கருளி னோக்கு நீரீக்கணத்தா லளித்தருளு நிமல வாழ்வை, நலநிறையு மறைஞான சம்பந் தப்பேர் நாயகனைச் சேயடியை நயந்து வாழ்வாம். (உ௬)

## உமாபதிசிவாசாரியர்.

எளியேன்யான் குடியாருக் கெழுது சீட்டென் றேகவெகு வசனத்தாற் றுழ்த்தி யேற்றி, விளியாத பரமுத்தி கொடுக்க வென்னும் வியங்கோளின் வேண்டுகோள் விளங்க வேத, மளிபாகின் றேலமிட வயன்மா றேட வரியபிரான் றனிக்கவிசெய் தன்பு கூரு, மொளியாரு முமாபதிமெய்ச்சிவன்றாள்போற்று முழுவலன்பர் கழல்களன்பி னுவந்து வாழ்வாம். (உ௭)

## பட்டினத்தடிகள் (வேறு)

அருந்துற வாண் வெண்காட் டடிகளங் கமல னன்றாட்
டருந்தனி யிலிங்க மேற்ற சற்குரு தாவின் ஞானப்
பெருந்தகை மருத வாணர்ப் பிள்ளையாப் பெற்ற வாழ்வு
திருந்துபூம் பட்டி னத்தென் செம்மறுன் சிந்தை சேர்ப்பாம். (உ௮)

## அரதத்தாசாரியர். (வேறு.)

திரிபுரத்தார் சிவசியம ரித்த தோடஞ் சிந்து றமால் வந்துநித்தா னெனமுற்றோன்றிப், பாதவித முணர்த்தவரு பொது நூறுனும் பதிசிவனென் றஞ்சலியாற் பகர்தல் காட்டித், திருநயன வைணவர்க்கு நேமிராமத் திறந்தெரித்தாங் கரதத்த னெனும்பேர் தாங்கி, யெரியிருப்புப் படியேறி யவர்கோள் வீட்டி யிலகுசைவ நாட்டியரு ளிறைதாள் போற்றி. (உ௯)

## தேவசிகாமணிதேசிகர். (வேறு.)

அவனியின்மும் மலர்க்கருணை யுருக்கொண் டருணையில்வந் தமர்ந்தமேனோர், புவியுருவென் றுள்கியிடர்ப் புகாவகைதன் சீர்ப்பெயரே புனைந்ததற்சேர், பலர்பெயர்முன் விகாரமுறப் பண்ணியவர் விகாரமெலாம் படுக்கும் வாய்மைச், சிவகுரவ சிகாமணியாய்த் திகழ்தேவ சிகாமணிதாள் சென்னி சேர்ப்பாம். (௩0)

கடவுள்வாழ்த்து முற்றிற்று

ஆ திருவிருத்தம்-௩௪.

---

† பொறி-எழுத்து.

# பாயிரம்.

## அவையடக்கம்.

மாதொரு பாகத் தெந்தை வந்திசெய் நந்திக் கோத
மேதகு சனற்கு மார முனிக்கவன் விளம்ப வன்னோ
னோதுற வியாதற் கன்னோன் சூதனுக் கோது மூவா
றேதமில் புராணந் தம்முட் காந்தமிச் சிலங்கு மாதோ. (க)

அத்தகு புராணத் தீச சங்கிதை யதனு ளோங்கு
மெய்த்தகு திருத்த லத்தின் மேன்மையவ் வடநூ றன்னை
யித்தமிழ் நாட்டி னுள்ளார் யாவரு மெளிதி னோர்ந்து
புத்திமுத் திகள்பெற் றுய்வான் றென்மொழிப் புணர்த்து மென்னு. (உ)

இறைவன்மெய் யன்பர் கூற விவர்சொலு மினைய மாற்ற
மறிவிலா வெனக்கீ தாற்ற லரிதெனு மெண்ண மாற்றிப்
பிறவிநோய் மருந்தீ தென்றே பேணுமா றுளத்தை யுந்தி
நிறைமகிழ் தரலா லன்ன நிலைமையே கடைப் பிடித்து. (ங)

அனையமாண் வடநூ றன்னி லறைதல விசேட மாதி
தனைநிகர் வழுதி யாதி சந்திரன் கதையீ றாய
வினைதெறு கதையொன் பானுஞ் சருக்கமா விருத்த யாப்பி
னனிமிகு பெரியர் நோக்கி நகைமலர் முகத்த ராக. (ச)

இன்றமிழ்ப் புணர்த்தா னின்றே னித்தல மேன்மை தன்னைத்
தென்றமிழ் முனிவன் றானுஞ் செப்புத லரிதென் றோது
மென்றிம னறிவி லாத வேழையே னியம்ப வெண்ணி
நின்றதென் னறிவி லாமை வெளியிடு நெறியே யாமால். (ரு)

ஆயினும் புல்லு நீரு மருந்துமா னவற்றை மிக்க
தாயதிம் பால தாகச் சுரந்தளிப் பதுபோ லென்றன்
வாயசொற் பொருள்கண் முற்று மனக்கொடு வழுநீத் தான்றோர்
மேயசீ தளிநா தர்க்காங் கினியவா விளைப்ப மாதோ. (சு)

வேறு.

மறையுமளப் பரியபிரா னமர்ந்து வாழு மாண்புகொடெம் பெருமக்கண்மது ரவாக்கி, னிறையுநவ புரிமேன்மை யாது மோரா நீசனேன் சொலத்தொடங்க னிலைபி லாச்சிற், றுறவிபொன்று பற்றிடினுங் குலையு நாங்கூ ழுயர்சேடன் முடிப்புவிமுற் றோருதா னேன்று, பொறைபுரிந்து நிலைபெறுவான் றுணிந்து சென்னி பொற்புறமேற் றாங்கியெழல் போலு மன்றே. (எ)

குன்றெதிர்கூப் பிடுமாபோ லோங்கு விந்தக் குன்றடக்கு தமிழ்மலயக் குன்றக் கோமா, னன்றுரைத்தா னென்றுரைத்த சூதன் வாக்கை யடியேனின் றுரைத்தனனீ தமலன் காதை, வென்றிதரு குணநாடிக் குற்ற நாடி மிகை நாடி மிக்ககொளு மேன்மை யோர்க, ணன்றிதெனக் கொள்வரான்றிநவையே யாய்வார் நயக்கவிகளி யற்கவிக்கு நவில்வா ரன்றே. (அ)

இணைதவிரு மியற்றமிழ்நூற் புலவர் கற்பார்க் கெடுத்துக்காட் டிலக்கியங்க ளியைபு தோன்றக், குணமருபா வினமன்றே குற்றம் யாவுங் குறித்துணரு மிலக்கியமுங் கொளுத்தற் கிந்நூன்,மணமுடைய தாகலிற் சொல்வாக்கி யார்த்தம் வாக்கியைபு தொடையிசைகண் மற்று மெல்லா, மெணவரிய குற்ற முடைத்தென்று தள்ளா தேன்றுகொள்வ ரெனுந்துணிவா லியற்றி னேனல். (கூ)

மாற்றமொன்று சொலச்சொலித்தம் மகவம் மாற்றம் வயங்காமை யுரைப்பமகிழ் பிதாக்கண் மானத், தேற்றமிலேற் குணர்த்தியவன் றிருண்டநாதன் றிருவால வாயமர்மெய் யப்பனெம்மா, னுற்றுபணி கொண்டடியேன் முடியிற் சூட்டு மாறுமுக நாவலர்கோ னவன்றாட் கன்பே, போற்றுவழி வந்தவிமற் சரிமெய்ச் சிலர் புந்திமகிழ் வுறவரென் சொற் புன்மை நோக்கி. (கo)

வேறு

காண்டகு புத்தூர் வடசொன்மான் மியத்தைக் கவின்கொள்செந் தமிழ்மொழி பெயர்த்துச், சேண்டவழ் மதிசேர் வேணியன் றேவ கொமணி சிற்சபைப் புரியுந், தாண்டவ ராய தேசிநாதன் சந்நிதி தனிலரங் கேற்றித், தேண்டரும் பெருமை பூண்டனன் காரைத் திகழ்சொக்க லிங்கதே சிகனே.

பாயிரம் அவையடக்கம்

முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-சுடு.

## திருநாட்டுச்சிறப்பு.

போது.

---

திருத்தகு புரத்திற் சிவபுர மனுவிற் செப்புமைந் தக்கர நூலி
னுருத்தகு நிகமா கமமிய வுளரி னுமாபதி மதங்களிற் சைவ
மருந்திமீ சனுக்காந் துதிகளி னருட்பா வாம்பணி களிற்சரி யாதி
திருத்தியம் போலச் சிறந்தது பாண்டிக் கோளசிங் கான் னாடு. (க)

எம்மைநீ யொப்பாய் கௌரியை யுலோபா முத்திரை யிழையுய§மென் றீசன்
பொய்ம்மையின் மாற்ற மூகமனென் றனையோர் புகன்றிடா தாண்டுசெய்
செயலான், மெய்ம்மையே நாட்டு முனியைமேற் கொண்டக் கைலையே வி
ழையுமா மலய, நன்மலை யதனைத் தன்னிடைக் கொண்டெங் நாட்டினுஞ்
சிறந்ததிந் நாடு. (௨)

இறையிலக் கணஞ்சொ லியைபினு லுவம னெய்தினு நால்வர்வாக் கியஞ்செய்
நிறைபலற் புதத்தா லினிமையென் பொருளே நிலவுறீ இ யோகரு டிப்பே
ரறைதலாற் கொங்கு மதியுல கன்பி னைந்திணை நிலையடி யார்முன்
மறையருள் வாக்கீ தலின்வட சொலினு மாண்டமிழ் வளர்வதிந் நாடு. (௩)

எரிமணி மகுட பங்கமுற் றேகி யெழிலியை யருள்கென விரந்தாங்
கரிபெறீஇ யாஞ்ஞை வழிமழை பொழியு மாடல்சா லரசினர் முனிவு
பரிவகல்வாத புரேசர்தாம் பாண்டிப் பதிகமுன் னும்பல பாவுள்
வரிசையின் விதந்து புகழ்ந்துசொல் வழுதி மரபினர் புரப்பதிந் நாடு. (௪)

குருக்களெவ் வெவர்க ளவர்க்கெலா மூல குரவனு யமர்ந்த ருளால
விருக்கநன் னிழலோன் சிடனுய்ப் பணிவு மேன்மையும் புகன்றருட் பாக்க
டிருக்காஞ் சிவப்ப வெழுதிய மொழிந்த சின்மணி வாசகப் பெருமான்
பெருக்கருணீதி யமைச்சிய னடாத்தப் பெற்றதிக் கொற்றநன் னுடு. (௫)

அரனமர் தலங்கள் பற்பல வுளவெத் தேயமு மாயினு மிதன்பின்
விரிவுற வமைத்த புதியன வவைகள் வின்மைசா ன்றுண்மைய திதுவென்
பரிசுணர் சான்றுய்ப் பாண்டிநன் னுடே பழம்பதி யாகவென் றெமையாள்
வாதநன் மணிவாக் கடிகண்முன் பரசு மகிமைமிக் குடையதிந் நாடு. (௬)

கயிலையிற் பரம குரவன்வாய் மலர்ந்த கட்டுரை மறந்தமை கருதாப்
பயிலுறப் புகன்ற சாபமேற் கொடுபா டாணத்தின் படிவுறு மியக்க
வயில்விழி மடவா ரறுவரும் யாண்டு மகற்றருந் தீங்கெளி தகன்று
நயனுறு மட்ட சித்தியெம் பெருமா னல்கிடப் பெற்றதிந் நாடு. (௭)

கூடலா டானை பூவணஞ் சுழிய திருத்தலங் கானைகுற் றால
மேடக மாப்ப னூரிரா மேசம் பராசலம் பிரான்மலை சாலி
வாடியே வாத புரிபுன வாயின் மங்கையே பெருந்துறை பாவஞ்
சாடுமூர் முதலாத் திருவருட் பாக்கொ டலம்பல நிறைந்ததிந் நாடு. (௮)

குலத்தினிற் பொறையிற் றிருப்பணிச் செயலிற் குணத்தினின் மானத்திற்
கல்வி, வலத்தின்மெய் வாக்கி லெவற்றினுஞ் சிறந்த வணிகர்கள் சென்னி
நா டிகந்து, நிலத்தினி லுயர்ந்த தானரு ணிறைந்த நீதிசேர் கௌரியர்புரக்
கு, நலத்தினி லுயர்ந்த தெனக்குடி கொண்டு நயந்துவாழ் வுறுவதிந் நாடு.()

---

§ என்ற வென்னும்-பெயரெச்சத்தகரந் தொக்குநின்றது.

இளைப்பகற் றகரங் கணேசமா நகர மிரணிய புரம்வை ரவப்பேர்
வளப்பதி சேம மதுகமா புரம்வே லவன்புரி குரைபொன் மாற்றூ
ரளப்பிலிவ் வொன்பான் சிவாலயங் களுமவ் வணிகரா கமவழிப் பூசை
இளப்பரு நிதிகொண் டங்கமூன் றுஞற்றக் கிளர்வுறப் பெற்றதிந் நாடு.(௧0)

வேறு.

மன்றிறைவன் றிருவருள்சா ரந்தணரு ளொருவர் மற்றவனைப் பெட்டகத்
துள் வைத்த†வுமா பதியார், குன்றைமுனி பதவணக்க மேயமல மோக்கங்
கொடுப்பதென வழுந்துபுச ரிதஞ்சொலருண் மொழித்தே, வன்றரு§ நார்
மன்னுசிந்தை நற்றுறைப்பன் மாந்த ரவர்போற்றும் பார்மனுதொன் மைப்
புகழ்பூண் டதுசேர்த், தென்றமிழ்நா டென்பதுமுற் பற்பலிடை விதவாச்
செப்பிநிக ழொப்பனைசெய் திப்பியகா ஊதால். (௧௧)

வேறு.

இன்ன போல்வன பற்பல வற்புதத் தியற்கை
யென்ன நாட்டினு மில்லன வுள்ளன வீசன்
றன்ன லீலைகண் மலைமலை யாகவே சார்ந்து
மன்னு கின்றன விதற்கிணை யாங்கனம் வகுப்பாம். (௧௨)

தலைமை பெற்றன நால்வகைச் சாதிக டத்த
நிலையி னீங்கலா நியமநல் லொழுக்கொடு நிலாவி
யலகில் பன்னிதி களுநிறை யகரங்க ளெவையும்
வலனை யாவருப் படுத்தவ னுலகினும் வயங்கும். (௧௩)

எங்கு மாலய மெங்கணு மகோற்சவத் திட்ட
மெங்கு மாமறை யெங்கணுந் திராவிட வேத
மெங்கு மாமக மெங்கணு மெய்கண்ட நூல்க
ளெங்கும் வேள்விக ளெங்கணு மவர்செலு மிரதம். (௧௪)

எங்கு மாநதி யெங்கணு மெத்தைவா முசல
மெங்கும் வாவிக ளெங்கணுஞ் சூழ்மலர்ச் சோலை
யெங்கு மன்றல்க ளெங்கணு மியமியம் பியற்சி
ரெங்கு மாதவ ரெங்கணு மடாலயச் செறிவு. (௧௫)

எங்கு மோதன சாலைக ளெங்குநீர்ப் பந்த
ரெங்கு நீதியன் றெங்கணு நூல்பயில் கழக
மெங்கு நீர்வய லெங்கணு நிறைபசும் பயிர்க
ளெங்கு நீள்வினை யெங்குநெற் போர்களின் பிறங்கல். (௧௬)

---

† பெட்டு அகத்துள்வைத்தஎன்பதுமொன்று.
§ நார்மன்னு சிந்தைப்பல நற்றுறைமாந்தர் போற்றும், பார்மன்னு
தொன்மைப்புகழ் பூண்டது பாண்டிநாடு என்பது பெரிய புராணம்.

## வேறு.

தண்டலை கற்ப தாருத் தண்டலை கவிழப் போயுந்
தண்டலை யுருமை லண்டத் தண்டலைச் சார்ந்து நிற்குங்
கொண்டலைத் தீப தாருக் கொண்டலை யெல்லை யாக்கும்
வண்டலை மலர்சேர் யாறு வண்டலை யொதுக்கி யேகும். (கஎ)

ஓதனக் குவையி னேங்கு முவளக மடால யங்கள்
கேதனக் காடு சூழு மாடங்கள் கெழுவு மின்பங்
கோதனத் தங்கண் மேவும் புறவினன் னெறியிற் கூறுஞ்
சாதனத் தியையும் யோகர் முயல்செயல் சாலை யங்கள். (கூஅ)

மாதிவர் கார்கோ ணப்பண் மாதவப் போழ்ந்த சிய
மாதவழ் கடாத்த முக்கண் மாதவ னேப மான †
மாதவ னுழி தான்கொண் மாதவப் பாசும் வாம
மாதவற் பூசிப் பார்கண் மா§தவத் துடச மெல்லாம். (கக)

சாற்றிடிற் பொருளி லாரைத் தனதனிற் குறைந்தா ரின்று
லேற்றசு பன்னி மாரை யிகந்திருப் பவரு மின்றாற்
போற்றுமித் தன்மை யாலே புரவலர் முனிவர் பான்மை
தேற்றிவே ளாண்மை யாரு மாற்றுவர் திகழு மாந்தர். (உ0)

## மழைவளம். (வேறு.)

வேத வாகமத் துணிபொருள் பசுபதி விமலன்
‡காத னுயகி யாசுசெய் கனங்கொளிந் நாட்டி
னேது மேதகு பொதுச்சிறப் பெதைத்தெரிந் துரைத்தாஞ்
சீத மாமுகின் மழைவளஞ் சிற்சில மொழிவாம். (உக)

பாலின் வேலைமுன் மதித்திட மதித்திடப் படர்வெண்
மாலின் மாவினம் வாரிபோய் வாரிமிக் கருந்தி
யாலின் மெய்கறுத் தகன்றவம் மாலென வகன்று
சூலி யாலவன் கொண்ணிற மின்னிவிண் சூழ்ந்த. (உஉ)

எம்மி னங்கனுன் மாடமாய் முற்பக லெழுந்து
தம்மு ளொன்றிநின் றேங்குமித் தண்ணடை சார்தும்
வம்மெ னுவிளித் திடலின்வாய் விட்டுவல் விரைவ
வெம்மை யாங்கணுந் தீர்த்தருள் வெம்மையின் சாலம். (உங)

---

† தவனேபமான ஆழியென்றியையும் தவனன்-சூரியன்.
§ தவம்-காடு. ‡ காதல்-மகன்.

ஈசர் தம்முடி யெம்மின நான்குமுன் னிகப்ப
வேசில் கூடமா யியைந்தன வென்பவிம் மலைமே
லாசி லம்முடி வதிகுவா னேற்பமென் றடுத்து
மூசு தன்மையி னேற்றுவெற் படைந்த சீமூதம். (உச)

மூல மாகிய பகுதியின் முக்குணத் தொகையின்
மேல வானின்முன் வெண்மையின் கருமையின் னிலைமை
சால வேற்றுவா னேற்றுவான் றடத்தினிற் படிந்த
நீல வாடைபூ மகண்முலைக் கொண்டுறு நிலைபோல். (உரு)

தனது வெம்பழி பாற்றுசுந் தரப்பெறுந் தகையா
னினிய நாட்டினைத் தெறப்படர் மறப்பசு வினைக்காய்
புனித நந்திவெற் பென்றரி போற்றியாட் டுதல்போற்
றனித வானமக் கிரியினிற் றுரைகான் றனவால். (உசு)

வக மாயெழுந் துவரிநீ ரொடுகலந் திரவி
மீக விந்துவித் தூத்துவாய்ந் தொருங்குநீர் விடுத்த
மேக மாணிடை மனையனை வெற்பமர் விபின
மேக லந்து ற் பான்றனைத் துறவியை யிழையும். (உஎ)

வெற்பி டங்களிற் பொழிந்தன வெண்ணகை யரும்புங்
கற்பி டங்களிற் பொழிந்தன கனிவளம் பணைசூழ்
பொற்பி டங்களிற் பொழிந்தன புனலர சமரு
மற்பி டங்களிற் பொழிந்தன வமைவிலார் சொடைபோல். (உஅ)

யாரும் யாவுமின் குளிர்ச்சியொத் தறச்செயு மெழிலி
யாரு மன்றலி னருட்கொடை தெரியவாங் கெவர்க்கு
மோரும் வாசக தீக்கையென் காதல்வாக் குதவி
நேரி லின்பருள் கௌணியர் குலமணி நிகரும். (உகூ)

விரியும் வெண்டுகில் போர்த்தெனக் குளிர்க்குவெள் ளருவி
பரவும் வெற்பெலா மன்னது படர்ந்திழி யசைவு
மரவ முங்குளிர் பின்னரு மாற்றொறு துடற்கண்
வருக டுக்கமு மதிற்படு மொலிமென வயங்கும். (௩0)

சோதி மென்கொடி படர்தரத் தூயவெண் பிறைதான்
மீதி லங்க வம் பணிபல சூழ்தர விளங்கும்
பூத ரந்தனி னின்றிழி யருவியப் புராரி
சேமாமுடி நின்றிழி கங்கையிற் றிகழும். (௩க)

## வேறு

எற்றுவெற் பதனி னருவியாய் நதியா யிருநிலத் தொருகுலப் புனலே
பாற்றெரு குகுளங்கா லோடைமுற் பலவுட் பரம்பியவ் வப்பெயர்த் தாகி
நாற்றிசை பரவச் செலுமா றுயிர்க ணலமுறப் பலவுரு நயக்குங்
காற்றினி யருளாஞ் சத்தியை யடுத்துக் கருதுபல் பெயர்கொளல் சடுப்ப.()

இடபநன் மலைநின் றெழுகுமிந் நீத்த மிணையில்சீர் நவபுரித் தென்பாற்
படநடந் துலக மணிமுத்த நதிப்பேர் பகர்தரப் படர்ந்திட வடபால்
விடுசிலை யெனும்பேர் நதியுமொன் றதன்பால் விரவிவந் திரண்டுமொன்றாகி
நடவுமாற் சிவமுஞ் சத்தியு மொன்றாய் நலந்தாக் கலந்துறு நயம்போல். ()

பிரசன வதன மலர்முகந் தலையம் பிறைத்தென வருதலாற் பாரந்
தருமிகு தாமைந் தறனிறை பாணி தாங்கலாற் கயமுகன் குகன்மா
திரமுறு சீர்மா மையின்மரு வுறலாற் றிருக்கைவா மயிலையேந் துதலால்
வரணம ரமலை யமலையின் வரலான் மலையுமந் நதிப்பிர வாகம். (௩௪)

அம்பிகை யிடத்தா லம்மல கனிவா லலைதரு மேனத்தின் கோட்டால்
வம்புறு முலைமுன் னுழைதரு மார்பான் மலையுமான் மணிமிடற் றவனை
யும்பரந் தரஙக முறப்பர வுதலா லோதிமா சலந்தரு மரபாற்
கம்பலை நலஞ்சார் களத்தினு லுமையைக் கடுக்குமவ் வடுக்கலங் கலுழி. ()

மாறரு நீரான் மலரிறு தனத்தால் வழங்குபா ரதிகோணு வாயா
லேறிவ ரோதி மத்தினில் வரலா லிரணிய கருப்பனை யிழையும்
பாறுகைத் திடலாற் பாலன முறலாற் பரவுபொற் றிருவமர் நிறத்தா
ஞறுதண் டுளவம் புயமலர் தாலா னாரணன் பொலுமந் நதியே. (௩௬)

மேகமார் கலியின் முகந்துமெய் தருமிவ் விரைநதி புவியெலாம் விரிந்து
தாகமா ரிடம்வே றிலாமையா லோடிச் சலதிசேர்ந் தொன்றிய தாங்கே
யேகமா யெங்கு நிறைந்துநெய் திரண்டாங் கின்னுயிர்க் கருளவவ் வவற்றின்
றேகமே தான்கொண் டெறினுநம் பரன்றன் றிறத்தின்வே றுறுதமர் செய
[வின்.

நலிதரு தழலாய் முரம்பையே மருவி நண்பகற் காலையாம் பாலை
நிலைமுகில் பெருநீர் பொழிதலு முழுதுஞ் சிதைந்தது தீமையே யுருவாய்
மலிபுகழ் நிறையிந் நாட்டின்முன் னொருகான் மாசுறப் படாமண் காழிக்
குலமணி திருவாக் கமுதமா மழையாற் குலைந்தொருங் கழிந்ததே போல.()

கோதைய ருரைக்கொல் வாதுடைந் தனபோற் குயில்கள்வா யடைப்பனகுவ
ளைப், போதுகண் காட்டத் தளவுக ணகைப்பப் புனமயி லினமுனம்பொரு
ந்துங், காதர மொழிந்து காதரநிறைந்து களிமிக வகவுறக் காணு, வீதரு ம
வர்போற் சம்மியா கங்க ளிலங்குபொன் சொரிவன யாண்டும். (௩௧)

## குறிஞ்சி.

வென்றிமால் விடையோன் வீற்றிருப் பதவுமேவுதன் ஞய்பிறந் தகமு,மன்
றலார் கோதை வள்ளிநாயகியை மணந்ததூங் கனந்தரு வரைக, ளென்றவா
ஞ் சைவினெ வெயினர்சீர் விழாக்கொண் டேத்து மகோத்திரக் கிறையாய்க்,
குன்றதோ ளுடல் புரிந்தெமை யாளுங் குமரவே ளமர்தருங் குறிஞ்சி.

அருவியுண்மூழ்கி நீறணிந் தெனமற் றதுபா வுறப்பெரீ இ யளியாம்
வான்விழி மணிபூண் டசைவற நோற்கும் வாய்மையான் வறப்பினும் வளமே
தருவரை யினங்கண் முருகருள் சார்ந்து சதமகற் பொரவெழுந் தனபோன்
மறவுற வானிற் காத்தமர்க் கழைக்கு மாறென வரையசைந் தொலிக்கும்.

இறவுறா ரண்டை வனங்குறித் தார மெரிமணி யாதிதொட் டெறிதன்
மறையுப நிடத மியாவுமெண் ணில்லா வாய்மையாற் பதியிலக் கணங்[றும்
ளறைபொருள் சிவனே யெனக்குறித் தென்னெஞ் சகன்றிடா நாவர சாற்
விறலுழ வாரத் திருப் ணி யதனை விழைதர நினைப்பிக்கு மாங்கே. (௪௨)

ஆரநீள் கான்மே லாம்பல்வெண் மருப்பார்ந் தமைதரு மிதணம ரெயினர்
நாரியர் குரலார் பலாசனந் ‡ தரப்ப நண்ணியா யோவென விசைத்தாங்
கேரிய லரித மாதனந் தாள மெறியவு மினத்திசை குவித்தச்
சார்சிறை யினங்க மங்கனி யமலை தாமென வணிமையிற் சார்வ. (௪௩)

வெள்ளிடைவெயிலிற்றன்னிழல்காணுவெருண்டுபாய்ந்தவனியின்வெண்
டென்ளூறக் கீண்டு சென்றுசென் றிபமாங் குயர்கணி நீழல்புக் குரங்கு, [கோ
மள்ளிருண் மலந்தான் வேறுகண் டாவி னப்பகை தெறும்வகை யாற்றித்
தென்னூநன் னெறியிற் சென்றர னடிக்கீழ்ச் சிவானந்த மடுக்குநர் செயலின்.

பெருவலிமறவர்கயமுனிக்குலங்கள்பிணைந்துவிட்டேனலின்பெரும்போர்
சரிவுறப் பரப்பி யவற்றினு லாசு தணத்தியத் தானியங் கவர்வா
ரருமணி மிடற்றோன் மாயையைப் புணர்த்தி யாருயி ரிடைபுண ரழுக்காங்
கருமலமகற்றித் தூய்மைசெய் தவற்றைக் கவர்ந்தடி யிருத்துதல் கடுப்ப. ()

அருவரை மிசைக்கீ ழிழிவது மருவி யாங்குமே லெழுவது மருவி
குரவரி குறியாய் மலர்வதும் வேங்கை குறவர்க ளுடுப்பதும் வேங்கை
தெரிவைய ருதைப்ப மலர்வது மசோகஞ் சேர்ந்தவர் சிந்தையு மசோகங்
கருமுகி னிகருங் குறத்திய ரளகங் கார்முகில் பொழிவது மளகம். (௪௬)

மலைவரும் குறவர் மாற்றமுங் கடிய மாதர்க ளோதியுங் கடிய
கொலைவரு நிலைய விழிகளுங் கொடிய கோப்பமை நாப்பணுங் கொடிய
மலர்தழை நாக நிதம்பமு நாகம் வகையணி நகிலமு நாக
கலைநிறையினிய மொழிகளுங் கிளிக ணயமுறு புயமும்வண் கிளிகள். (௪௭)

---

‡ பலாசனம்-கிளி.

## முல்லை.

இனிதுறப் படைத்தல் புறந்தா லழித்த லென்றிவற் றிடைத்தொழில்செய லா,னனிமகிழ்ந் ததனை யுயிர்க்கெலாம் பொதுவாய் நவிற்றலா லிடையனாற் பொதுவ, னெனவுரை தகுமா லப்பெய ருடையா ரிந்நிலத் தவரென வெண்ணு, முனிவற வனைய நிலக்கிறை யாகி முதமிகப் பயில்வது முல்லை.

வானுறு மண்டர் நாளொருபாலை மதித்தமு தளித்திட வாழ்வார்
கானுறு மண்டர் மகளிர்தாம் பாலைக் கடைந்திமு தளைநவ நீதந்
தானுணத் தருவா ரன்றியும் பிருந்தை தனைமணந் துவத்தலுந் தகுமா
லானபா னரலை யோபுவி வனமோ வாங்கவற் கார்வமிக் களிக்கும். (௬௯)

காஞ்சியாங் கொருபாற் செருந்திமற் றொருபாற் கடிமலர் செறிந்துநின் றிட
தேசமர் பலாச மிடைமதி முடிமேற் சேர்வுறத் திகழ்கரு முசுவொன் [ப்பூந்
றூசறு நிழற்கீ ழுறங்குற வமர்த லரியயற் கிடையனல் வெற்புங்
காசறு மிரண்டுந் தருவிடு மேனத் தெகினத்தின் காட்சியுங் காட்டும்.(௭0)

மறைத்தகார் முகிலைத் தூரத்தலுஞ் சூறை வயங்குமோர் சோதியந் தாரு
மறைத்தகா ரொழினி வாங்கலுந் தளியின் வயங்கு மாதீபமே மானு
மறைத்தனீத் தொளியை வயக்குமச் சூறை மாணவ ராணவ மாய [வயங்கும்.
மறைத்தனீத் தவர்மெய்ப் போதமன் விளக்கு மாண்மையோ ரென்னவும்

பொதுவனோர் புதல்வன் வங்கிய மிசைத்தோர் புடையுறப் புதுமதி சிகை
மேற்,பதிவுறப் புதுப்பூந் தளவமேற் படர்ந்து பாதியா வரிப்பவோர்சிகிமேற்
கதுவுற வமர்பூங் கடுக்கையிற் றொருவாக் கற்றைவே ணியனுமை யோடும்
விதிதவா னுயர் குழலிசை கேட்டு விடையிவர்ந் தணியுறல் விழையும்.(௭௨)

பன்னிற வேனல் சாமையெள் ளிறுங்கு பகருநீன் மாடமுற் காதி
மன்னுதா னியங்கள் பலநவ மணியின் வரையின மெனத்திகழ் தருமிந்
நன்னில மாக்க ளென்றுமீ தியங்கி ரவிமுதற் கோள்களுக் கிரங்கி
யன்னவைக் குரிய மணிகளி னிளைப்பாற் றுதன மமைத்தன ரென்ன. ()

வேறு.

ஆய்ச்சியர் குழலங் காசை யவரிடை யாயர்க் காசை
பூச்செறி கடுக்கை யாசைப் புதுநிறம் விரியு மாசை
காய்ச்சுபால் கடைதந் தேங்குங் கலிதிசை யெட்டுந் தேங்குந்
தூச்செறி தளவு நாறுந் தூரெலாங் கீர நாறும். (௭௪)

முலைவரு குடத்தி னார முலைவரு குடத்தி மார்தம்
பலினிரை தளவை நேரும் பரந்துகா தளவை நேரு
மலர்விழி களவை யேயு மான்குழல் களவை யேயுஞ்
சொலுநடை பிடியை யாருந் தவளிடை பிடியை யாரும். (௭௫)

## மருதம். (வேறு.)

மகவினை புரிந்தாங் கவியெமக் குதவு மறையவ ராதியெவ் வுயிர்க்குந்
தருமுண வளித்தந் நிலைநிலை யுறுத்துந் தகைத்தென வமரர்க டலைவன்
மிகுவளம் பொலிய மழைவளம் புரிந்து மேவியாங் கியாவரும் வீழ்ந்து
வகையுற வணங்க நனியுள மகிழ்ந்து மன்னிவீற் றிருப்பது மருதம். (௫௬)

அணிவளை பதுமங் கற்பக மூரு வரம்பைய ரிமையவ ரணிக [ம்
டிணியொளி சிந்தா மணிமுதற் பொருளாற் சிவணினு மவணையைச் சிறக்கு
பணிலமென் பழனப் பயிரினால் யாண்டும் பச்செனப் பரந்துசீ தளமாய்க்
கனிநயம் புணர்த்துஞ் சீரிதென் றடலக் கண்ணன்வாழ் தருநகை மருதம்.

மேதிபுக் குழக்க வெடிசெலும் வாளை விண்செலு மிலாங்கலி மிடற்றின்
மோதமுப் புடைக்காய் வீழ்த்தியவ் வாவி முழுவது மறைந்தமந் தெங்கு
போதமிக் குடையார் தமக்கிடர் சிறியர் புரியினு மவர்க்கிடர் புரியா
தேதமற் றவர்பின் செயாவகை தடையாங் கியற்றுறு மியற்கையே போல.

அளியினங் குமுறு மொளியசெங் கமல மலர்நைக டொறும்பல வலர்ந்து
தெளியதண் கமல மேலொளிர் காட்சி சிவனத் தா†கள மாசின்
றளமிகு மளியோ ருத்திரம் புகன்ற வருத்திர பசுபதிப் பெயர்வாய்ந் [கும்.
தொளிரு மெய்யன்பர் பல்லுரு வெடுத்தாங் குற்றனர் கொல்லென வோங்

கண்ணுறுநர் முன்ன ரிலாங்கலி கமுகைக் கமுகெனார் மற்றது காணா,ரண்ண
லங் கரும்பைக் கரும்பெனார் காணா ரதனைநெல் சாலியென் றறையா,ரெண்
றுபின் னையதை முன்னதா மகிழ்வ ரெய்திற்றே பெரிதெனு மவர்போ
னன்றுபல் சமயத் ததுவது பெரிதா நயக்குறு மயலவர் போல. (௬௦)

கழைமணி நிலந்தோய் கைக்களிற் றலைவைக் கதிர்மணி மலைபடு வயிரத்
தழைமணி நிலங்கீழ் களிற்றுவெண் மருப்புத் தருமணி மாசுணங் கான்ற
விழைமணி முதல பலமணி வரன்றி வேங்கைசந் தகருமுன் சாய்த்து
மழைபடு சினைமேற் கொளவரிக் கொண்டு வருநிறை மணிமுத்த நதியே.

மலைபடு நறவ முலைபடு சீரம் வண்டயி ரிழுதுவண் பழனக்
குலைபடு கழையி ரதமிவை வாரிக் கொண்டிரைந் துயரியுட் புகுத
லலைபடு மணிமுத் தாறுதான் கடல்க ளாறுமேற் சென்றுவர்க் கடலி
னிலைபடு முவர்நீத் தெழிலை யொழித்து நேர்கொடை புரிகென னிகரும்.

விடுசிலை யாறு மணிமுத்த நதியும் விரைந்திரு பானவ புரிதா
னிடையுற நடந்து குணக்குறீஇ யொன்றா யேகுதல் சீதளி யிறைபைந்
தொடிசிவ காமி யிருவர்பா லுயிர்கள் சுகமுறத் தோன்றருட் பெருக்கே
நடவியொன் றாகி யென்பதல் லாது நாம்பிறி துரைப்பதொன் றிலையால்.

---

† ஆ-வளையுமென்னும்பொருட்டாய வடமொழி.

உரப்பிர வாகங் காணுபு மள்ள ருள்ளமிக் குவகையர் கிணையி
னிரைப்பொடு வறுமைப் பகைமுடித் திடுகூழ்க் கிதந்தர மடைதிறந் தியக்க
வரைப்பறு கால்க ளிடைப்புகுந் தனைய வான்பயிர் வளர்க்குமந் நீத்தங்
கரப்பறு வழுதி படைக்குநீ ரளித்த கண்ணுதல் கமண்டலங்கடுக்கும். (சுச)

அலப்படைபுயங்கொண்டளேமுதற்பாடி யயின்றவ னயந்தமுன் னவன்போ
னலப்படு கரிற்போய்த் திருத்தலத் திறைசெய்நடநினேந்தனர்நடிப்பவர்போ
னிலப்பட வொருகா லூன்றுபு தூக்கி நின்ெறு ருகாலுகத் திருபால்
வலப்பகட் டெருத்தி னமைத்தனர் பூட்டிவரம்புற வுழுவரான்மள்ளர். (சுரு)

வேறு.

அலநுதிதேய் வுறக்களம ராழமுற வுழுவாரவ் வகிதமேற்று, நிலனுரியபொ
றையெனுங்கா ரணப்பேர்தா னிடுகுறிபோ னிகழ வாய்ந்த, நலமதனுக்கிசை
யகனி பலன்றருமக் கழனிகளி னயனுங் கெண்ணிப், புலனுறப்பின்னிதஞ்
செய்வார் போல்விரைந்து பரம்புகைத் தொப் புமைசெய் வாரால். (சுசு)

வால்வளேகள் சால்வழிச்சென் றுழவர்காக் குதவிபுரிவயல்க டோறுஞ்,சேல்
வளேயங் கணத்தைநவ நீதமெனப் பதப்படுத்தித் தேவர் கோமான்,கால்வளே
யுமுளத்தினராய்க் களமர்நன் னுட் கொண்டுவிதை காத்திற் கொண்டு,கோல்
வளேக்கை யுழத்தியர்கள் குரவையிட வித்துவிழாக் குலவச் செய்வார். (சுஎ)

தெளித்தவிதை கான்முளேயைக் கான்முளேயிற் கண்டுழவர் சிறப்ப வுள்ளங்
களித்துரிய தொழில்புரிய விதழ்விரிந்து வளர்ந்துமா கதத்தி னுன்ற
வளத்தகடு பதித்ததெனப் பாவாற்றி நிரைத்ததென வம்ப லோர்கள்
கிளத்தொருநாட் டிங்களென வுழவர்களற் புதமிதெனக் கிளர்வ சாலி. (சுஅ)

உளமகிழ வொருவாம லுடனுட்டி வளர்த்தாலு மொருப தாண்டி
னளவுறிற் றம் புதல்வியரைத் தம்மனேயி னகல்விக்கு மறிஞர் போல
வளருமிளஞ் சாலிகள்பேர்த் திடும்பருவ மருவுதலு மள்ளர் மாதர்
விளேவுறுநாற் றங்காலிற் கடிவினையைக் கடிவினையம் விளங்கச் செய்வார்.

தத்தமாற் பயனுதவா வேனேயிடங் களில்வாளா சார்ந்து நின்ற
வுத்தமாற் கோள்கணற்பார் வையினெடுமே காதசத்தி னுறுமா போலக்
கைத்தலத்திற் பறித்துநட வுறுஞ்சாலி வளர்ந்தொன்று கணக்கின் ருரும்
வித்தகர்கைத் தானமெனப் பின்றருபல் வளன்குறியால் விளங்கக் காட்டும்.

வயலுழவர் பதம்பகரக் கடைசியர்கண் முதலவய வங்க ணேருஞ்
செயலெவனும் முரங்காண்டு மெனத்திருகு சினஞ்சேக்கு சிந்தையார்போற்
பயமருவு நீலமுன்ன மருவலரைப் பாற்றியசெல் பரிசி னோராய்
வியல்வளேயென் றிடுமொலியின்மிகமுழங்கு கழனியெங்கும்விரவி னுரால்.

உலகமொருங் கருடாதை யொளிர்குரவன் வேதியனென் றுயர்ச்சி பூண்ட
தலைவன்மலர்க் கட்குடியன் சாற்றுமவன் றுதையிடைச் சாதி யாசை [ன்ப
வலிகொடுசெய் செயல்பலவெம் மசபதிவெள் ளாம்பன்மிசை வரத்த னெ
நலனிலதென் றெவறிகழ்வரென்பார்போன் றுறுகள்ளு ணயர்தாரன்னோர்.

கணநனத்தை நிகர்வதிலட் காண்டுமெனச் சினங்கிருகிக் களமர் மாத, ரினவ
ளைக்கை யாற்சாய்த்தாங் கீர்ம்பிழிசார் குடஞ்சாய்த்திட் டிலங்கு வள்ளங், த
னையும்வசி யார்போழுந் தகைமையினம் மதுவாக்கித் தங்கைக் கொண்டாங்
கனையமதுச் சிறுதளிதொட் டயலெறிந்து வாய்மடுத்திட் டயில்பமன்னே.

போதுகெறு மொழிசேட்டோர் போதலெனல் வருதலுக்கும் பொருளென்
றோரு, மூதுணர்வி னர்போலமொழிந்தார்பாற் புகுவர்மயன் முதிர்ந்துதீசி,
மாகிரசின் றழைந்தார்பால் வரக்கருதி யவாசிநெடு வழிச்சென்றுங்கோ,ரோ
திமசேர் கண்டெனையின் றெவிளித்தி பெண்கொலென வுரைசெய்வாரால்

தகாமினை முலைத்திமிர்வார் தாளவடங் குழற்குழ்வார் தங்கை வாங்கி
முதராமதன் புறநோக்கி முகந்தோன்று திறப்பணித்தா முந்திற் றேகொல்
பகர்மினைக் கவல்வரெதிர் படர்குகரவ் வாடியிற்றம் முகமுன் பாரா
நகுமதியென் றதைமூடி நயப்பர்முகந் தோன்றிலதென் னலிவு சோர்வார்.

தொல்லுணர்வற்றின்னனம்பல்சொல்விளம்பிச்சொல்விளம்பிதுய்த்தமள்ள
மெல்லியர் பற்பலசெயலும் விகற்பமுறக் களியாட்டின் மிக்கா ரேனு [ர்
மொல்லுவதி தெனக்கிளவிட் டுறப்புக்கா ருணர்வடக்கி யோங்க கத்தைக்
கொல்லுபுமற் றதைவளர்த்துச் சிவபோகம் விளைவிக்குங் குரவர் போல. ()

விளைவுபெற விதியுடைய வியன்பயிருக் கிடப்புரிவான் விரவி விம்முங்
களைமுழுதுங் கட்டதினைக் களித்தெழுந்து பலன்றாச்செய் காட்சி யாங்கே
வளர்வுறுநல் விதிபதென மறைமுதனூல் புகல்சைவ மாண்பி னோங்கத்
தளர்வில்பிய வெனப்புனமதஞ் சாடிநீறாக்கும் பெரியர்செய றன்னைக் காட்டும்

கடைசியர்கா லொப்புணரா வெருண்டனபோ லுழக்கவழி கமல மாதி
மிடைமலர்க டமைக்கரத்தின் வீட்டுதல்கண் ஞுதலோன்முன் விளம்பி
யாங்குப், படைகரத்திற் பரித்துலவிப் பாரதமாப் படைஞர்தமைப் படுத்தப்
பார்த்த, னடுசிலைகொண் டனையருட லழிதாக்கொன் றுங்குவக்கு மமைதி
போலும்.
(எஅ)

கடைசியர்கண் மலருமிரு கமலமுதற் காட்டவிரு கமல மன்ன
கடையினரு கடையவிரு நயக்கமலம் வயற்கமல மொன்றை வீட்டு
மடலபிமலெருகுறி ரகத்திடவொவ் வோர்செபலோ வொருவ ராற்றித்
தொடைதிகழப் புயவீரர் தொடர்ந்துபலர் தடிந்தவினைச் சூழ்ச்சி போல.

வலமிகுவா ளவுணரிறை வாளவருக் கண்டிரிந்த வானோர் போல
வலவனளை யுட்புகுவ வைந்தமொடுங் கினவாகி யாமை மாய்வ
குலவுமினவ ராவிரிவ கொழுங்கயலி னெழுங்கயலிற் குதிப்ப மாசர்
நலனிறைசானுவைமுனூறுப் பவைக்குடைந்தே யிரிவவென நயப்பமள்ளர்.

பிறந்தகத்திற் றணந்துசெலீ இயணந்தகத்தி லணைந்துமருஉம் பேதையாரிற்
சிறந்தநட வுறுசாலி தணப்பறியா வன்றிலெனத் தெண்ணீ ரென்னும்
விறந்ததுணை யொருகணமு மொருவறமெய் மருவுறநன் மேனி காட்டிப்
புறந்தான்முற் றெழிலுறக்கொண்டறந்திகழக் கருப்பமுறீஇப் பொலிவ மா
தோ. (அக)

கருப்பமுறீஇ வளர்சாலி வலாரிதரு வரப்பேற்றூற் கருக்கொள் காலும்
பொருப்பமுறழ் முலைஞெமுங்கப் புருடர்தமைப் புணரமகிழ் பூவை மார்
வுருப்பமுற வாகிநிறை நலனெழித லுறுமையுட னுறுத லாக [போ
விருப்பமுறத் தழுமளகத் துடன்கலந்தே கருவீன்று விரிவ மன்னே. (அஉ)

பூதிநிறை யானுருவம் புரைதரவெண் ணிறமருவிப் பொருப்பன் மாது
பாதியுமால் பாதியுமாய் நிறைதருமப் பானுருவிற் பசந்து பின்ன
ராதியவ னியலெழில்கூ ரரியதிரு மேனிநிற மதுபோற் சேர்ந்து
மீதிலகச் செறிந்தெழுந்து விளங்குறுதண் ணெற்கதிர்கள் விளைவ மாதோ.

இலகுபொரு ணளிபடைத்தே மெமக்கெதிரின் றெனவிறுமாந் திவறன்மைக்கோர், திலகமென மருவுபுதுச் செல்வரெனத் தலைநிமிர்ந்து சிவன்றனுணைத், திலகமென வுணர்ந்தடங்கி யுயிரெனினுங் கொடைபெரி தென்றுறுதி வாய்ந்து, தலைவணங்கித் தாலுவக்குந் தகையரெனத் தலைவணக்கஞ்செல்வ சாலி. (அ௩)

வேறு.

பிரிவினிற் கனலா வனலுமிழ் பிறையைப் பேதுற வங்கையிற் பிடித்த
பரிசெனக் குயங்கை கொடுகடை சியர்தம் பவளவாய் வள்ளைபா டுறநீள்
விரிகதி ரரிந்து பொருசமர் புரிந்து வெற்றிகொள் வீரர்வெங் களத்திற்
பரிமுக நிரையம் பொடுநிலங் கிடத்தும் பான்மையிற் றரைப்படுத் திடுவார்.

வேறு.

அரிபடுத்த வரிகடமை யாடவர்க ளரிவையர் களரிய வாரஞ், சொரிதரக்கொண் டேகியவை சூழ்ந்துபல வரைகளெனத் தொகவப் பூமி, வரைநிலங்கொலெனக்குவிப்ப மற்றவைவா னிமிர்ந்துறலவ் வலாரி தங்கட், கருள்பலமுற் றவர்க்குணர்த்திப் பெறன்மரபென் றுமவரவ ணமைந்தல் காட்டும். (அசு)

எமதிறைவற் கிவைபகையென் றிரும்புகளின் றலைதடிந்தாங் கினிதுமள்ளர்
கமமுறுவவ் வரிதொகுபோர்க் கதிர்முடிக டமைநிலத்திற் கதுவச் சாய்ப்பா
ரமைவுறுமச் சிகரியுறு மம்புதங்க ளதனொடுங்கி மூடைந்து சூழ்ந்தாங்
கிமைதருமந் நெற்குட்டி னிடைச்சூழக் கவரிபிணைத் தியக்கு வாரால். (அஎ)

உடலினுயிர் வேறுபடுத் திடலஃதும் மிறைதொழிலீ தூருற்ற நீவிர், கடவி
ரென்றுங் குரைத்திடல்போற் களமர்புகல் பாட்டினுளங்களித்தம் மேதி,நட
வுறுநெற் குட்டினைமுற் றுழக்கியவை யொழிந்ததற்பி னயந்தாங் கன்னோர்
புடையொழியப் பலாலமிரை புடைத்தொதுக்கி நெற்றிறள்கள் பொருப்பிற்
சேர்ப்பார். (அஅ)

சேர்த்திடுபொங் கழிப்பசடி செயற்காலி ஞெறுக்கிமணித் திரள்கள் கூப்பி
ச், சீர்த்திகரு மூர்க்காணித் தெய்வதமற் றவர்க்குரிய திறத்தி னல்கி, யார்த்
தியுள மிகவளந்தவ் வளவையினி லாறினுளொன் றரசர்க் கீந்தாங், கோர்த்தி
டுமெஞ் சியசாலி யினைச்சகடத் தியக்குபுதம் மிடத்திற் சேர்ப்பார். (அகூ)

வேறு.

செறித்தவை தம்முட் சிலமுத லோடு திகழ்வுறச் சேர்த்தனர் பலதாங், குறி
த்திடு தெய்வம் விருந்தொக்கல் பிதிரர்கொளவெனவமைத்தனர் சிலவ், மறி
த்திடு விதைக்கென் றமைத்தனர் மேலும் வயந்துமத் தொழின்முயன் றிடு
வார், திறத்தவை கரும மலத்தின்முக் கிளையாந் திண்ணிய வினைச்செயல்
போலும். (கூ0)

ஒண்கதி ருபர்போ ருறுமுகி லுழவ ரோதுசா துரங்கமோ டுகளும், வண்கதி
வாளை மருவுக மடமென் வாண்முதல் வயப்படை தாங்கித், தண்கழ னிகளாந்
தந்திரத் தலைவர் தம்மொடுந் தண்பணை வேந்த, னெண்கொள் போர்க் கோ
லத் தென்றுநின் றிடலா லெறுழ்க்கலி யெய்தலீண் டிலையால். (கூக)

இரும்புவி யெவர்க்கு மிடர்புரி யிரதிக் கியல்பதி யெழிற்கைவில் லினமாங்
கரும்புகள் களமர் கருவியங் கரத்தாற் கணக்கில கண்டமாய்க் களத்தி
னரைத்தரு வழித்து மனந்தர மனலா லடப்படு மடாதுசெய் தவர்பின்
பரிந்தனம் படாது படுவரென் பழமை பலித்தெனப் பாவையர் பகர்வார். ( )

செழுவிய கரும்பின் சாறடு தூமஞ் சேண்புகுந் தம்புதஞ் செறிய
வுழவர்கம் முடலுக் குறுதிசெய் தனரொன் றுவகையி னன்றியோர்ந் துளர்போற்
பொழிவமும் மழைக ளென்றுமாங் கபுத்தி பூருவ மாகவ புரியிற்
றழுவுசில் வுறநும் பலபல னுடனே தருமெனல் காட்டுறுந் தகைபோல். ( )

நெய்தல்.

சுதரக் குறையு மேனைய பொருள்போ லெஞ்சுரு திருமில முழுதுஞ்
சிதளம் புரிவா ளிறைபவாய் மடுந்துஞ் சிறிதுந் தான் குறைவுறச் சேர்த்தா
மாதரந் தருநம் மூர்திபற் பலசா ராழிசூழ் நிலைய தென்றமர்ந்து
நேதகு வருணன் புரந்திறை யாகி நிலைபுறப் பெற்றது நெய்தல். (கூஉ)

ஆர்குறை நுளையர் புன்னையன் னிழலை யவிரொளி மரகத விதானந்
தேங்குரித் திலம்பொன் றவர்முத லவற்றூற் றிகழ்தரு சினகர மாகப்
பார்ந்துறு சுறவின் மருப்பவ ணிறுவிப் பரிந்துபல் கிளையொடும் பயிற்று
யோங்குறு சிறப்பேற் றிலயர சவர்க்கல் வுலவையின் றன்னியாங் குதவும்.

பாதவர் சோங்கின் பாங்குசெல் லமலே படவினிற் கடல்புகுஞ் சும்மை
விரவுறு சாலம் வீசுகம் பலேபன் மீன்கவர்ந் தீர்த்திடுந் துழனி
திருமிவந் தவைதண் சுரைசொரி யரவந் தெரிவையர் கொடிகளோப் புறுசீர்
தரமென வுணங்கல் குவால்செயா குலத்தாற் சலதிபற் பலவெனத் தயங்கும்.

அலேயெறி வளைதன் றலேயுறத் துகிர்சென் ருங்கொரு பாங்கினிற்படரக்கும்
கலேமதி கிரண முழுவதும் போர்ப்பக் கவினிருன் மற்றெரு பாலி
னிலவுபுன் னுக மிந்துசே காள்ற னேமியங் கைக்கொளு நிறையார்
தலேவியோர் பாலி னிலவிவாழ் வுறுமத் தவளநீற் றுருவமே தகையும்.(கஎ)

வாநதி பலசூழ் தாமிகு நாலே வாயுதித் தாயதின் மறித்தும், விரவுறு புனித
மருவலின் விதுவை மிலேந்தன னெமையிகழ் விமல, னாலேயுற் றியாநோற்
குவமினி யமல னமை முடிக் கொளுமென நயந்தாங், கரியவெண் டுகள்போ
ர்த் துரியகண் மழைவார்த் தமருமாங் கலர்ந்தமுண் டகங்கள். (கஅ)

அருமறை முதலா மெத்துறைப் பொருளு மொருதுறைத் திரட்டியாங் களி
க்குங், குரவர்தஞ் செயல்போ னுலிரண் டெனுங்க குபங்களி னுறும்பொரு
ளவையும், விரிதரு மிடத்த கலத்தகத் தமைத்து விரைசெல விற்கொணு
விரிநீர், கரையினிற் றிகழ்நா வாய்களா லளிப்பக் களித்தினி துவப்பவக் க
ரையார். (கக)

குயின்மழை வளத்தின் விளைதரு முறுபைங் கூழெலா மம்மழை யிலேயேற்
செயலற வாடு மிவைதரு முணவெஞ் சேர்க்கைபெற் றேபயன் செயுமவ், வி
யல்பின வதனுற் றலேமைகொ ணுமு மிவையென வெய்தொணு தென்னுப்
பெயல்வளம்வேண்டாதியலுமுப்போங்கல்பெருகுறக்குவிப்பாலுமணர்.

பாலே.

தளச்சென நிலமொன் றுறப்பெரு தென்றுந் தங்குரு மாலேய தொன்ருேர்
வுனற்கருந் தழற்றும் பாலேயென் ளுழித்த லொல்லுமோ வுண்மைதேர்பெ
ரியோர், மனக்குறு மேனுங் குற்றங்க ணீக்கி வருகுணங் கொண்டுவப் புறுக
வெனக்கழ றுவரா லத்தகு பாலே யிடைக்குணம் பலசிலவிசைப்பாம். (கoக)

வாகைதான் பெறவேண்டு நர்களெவ் வெவரும் வந்தனை தந்துதம் மனத்த
வாகைமேற் கொளவாங் கருளுமம் பணத்தி வாகையீ தால்வயக் குதலின்
வாகைபாற் சூழ வாங்ஙன முறையு மறவர்தங் குலம்புரிந் திறைஞ்சும்
வாகையா லயத்தி னமர்ந்தினி திருந்து வாழ்வுறப் புறப்பதப் பாலே. (கoஉ)

தனநிற வலய வளிமுரன் மலர்க டாங்குபு கன்னிகா ரங்க
ளினமுற நிற்றல் களவொழுக் கத்தி னியன்றிடு தலேவரோ டெழில்சால்
வனமுலே மகளி ரணிகலே மறந்தும் வருவதிவ் வழியவர்க் கீது
மெனவிலே பகர்வோர் கொப்பணி யணியங் கேந்துபு நின்றிட லொழையும்.()

செவிலியர் தாய ரிகுளோயர் குழுவிற் றினம்பயில் செயனினைந் தொருகாற்
றவரொடு மாங்குத் தனிபுகு மடவார் தாம்வெருக் கொடுதியங் குறலிப்
புலியிடை யுறினும் போக்குது மினைய புன்கணென் றுன்னியோ குரவங்
கவிரித ழியர்பற் பலர்நமைத் தாங்கிக் கவினுறத் திகழுமக் கடத்தில். (கoச)

அரியவா மலக மீந்துதம் பலங்க ளாங்குறு மவர்விடாய் பசிநோ
யிரியவாங் கா் த ரணியளித் திடவு மெய்துறு தமைப்பல தென் ாப்
பாறுகர் கபோத மவணிருந் தொலிசெய் பரிசினை யுணர்ந்திடார் பதிகர்
தெரிவையர் வயாவே தனையொலி யென்றுச் சென்றவட் காணுறூர்திகைப்ப

திணைமயக்கம்.

கணிமல ருகுத்துப் பாடியின் மனைகள் கனகமா ளிகையெனக் காட்ட, வணி மலர் செருந்தி செறித்துவெற் பெல்லா மாடக வரையென வாற்று, முணும் வரைக் கிளையொன் றிறுத்துமென் பாற்போ யும்பலொன் றும்பலை மாறென், றனுகின்றேச்சத்துண்ணெனவலமீர்த்தாங்குறுங்களமரின்படைய.

கவரிதன் கழைவாய் மென்றுகொண் டேகிக் கணிநிழற் களிறென வுறங்கும்
துவரமற் றதன்வாய் வழிமது நுகர்ந்த சுரும்பின செய்தற்பூஞ் சுரும்பிற்
குவளையிற் குறிஞ்சி பயிற்றுவ கிரையா லுலைதரு மாம்பலிற் பமரந்
திவன்சினை மலர்சூழ் பிரமரம் பயிலச் செவ்வழி பயிற்றுவ செறிந்து (கoஎ)

கழைவெடித் தொளிய நிலத்தில முகுப்பக் கபோதகம் பரலென நுகர்வ
தழைதரு கோங்காங் கருவியா மகட்குத் தையல்கூர் காதணி தருவ
வுழைமறி மேதி செருத்தலி னுகைப்ப வொழுக்குபான் முலைப்புதல் வளர்ப்ப
தெழிலுடன் மூழ்கி யுறுமவர் பாற்பொன் றேக்குவ மேக்குயர் செருந்தி. ()

பூதிசேர் மாலி னுருவெனப் பொடித்தாம் பூவைமேற் கைதைபுன் மேய்மான்
சீதம்வேட் டமரி தனிப்பரி யெனப்போந் திரள்கனி யுகுத்துவேம் பிதழிப்
பாதவத் திலிங்கம் பலவெனக் காட்டும் பைந்தட வாளைமீன் றுழை
மோதவா சினிமா வரம்பையி னிரத மூரிநீர்ப் புலவினை முருக்கும். (கoக)

திரையெறி தரளம் புகத முகையிற் செறிதா வேற்றுமை தெரியார், புரை தபக் கொழித்துச் சிற்றிலாங் கிழைப்பர் பொய்தலாற் றுழத்தியர் பொலிபூ மருதவண் கிளைகள் குரவருன் மலர்மேன் மாதர்கைக் கிளையென வயங்கு, மெருவைமீ னுகணெற் போருநீஇக் கழுக்குன் றிடைக்கழு கென்னுமா றி லங்கும். (ககo)

எண்ணுபு குடத்திற் கயல்விழி புடைஞங் கேகிநெல் லியங்கனி வாங்கி, நண்ணுமத் தொகையின் பாத்தியர் மாறி நல்குவா ரிருகயல் குடத்திற், கண்ணுறூர் திகைப்பர் குராமலர் புன்னை கந்நிழ லுகுத்துறப் பாத, ருண்ணயங் தமைமுன் போற்றனி யுருள்பல் லுருக்கொடுற் றனள்கொலென் றுவப்ப. ()

அகருவிற் படர்ந்த கறிக்கொடி யிதழி யணுகுற வதிற்றள வகிலிற்
புகுதர மதமாக் கன்னலை முறித்தப் பூங்கொடி மிசையிழுத்தேக
மிகுகய லூடு பாய்தர வலைசேர் வெள்வளை வீழ்ந்தவை யிறுக்குந்
தகைமைகா ருகர்செய் தொழில்புரீஇக் கலைக டறியின்வே ருக்குத றகையும்

அரிபிர மாதி தேவரெண் ணிறந்தோ ரானிக ரகத்திய னாதி
யிருடியர் நந்தி கணமுருத் திரர்க ளெனைப்பல கோடிய ரிறைஞ்சும்
விரிதரு கைலை யொருவிமுன் விமலை மேவுறு திருத்தல மென்னும்
புரிதனக் குயிரா யமைந்தவிந் நாட்டின் பொற்பெனர் புகலுதற் கெளிதோ.

திருநாட்டுச்சிறப்பு.
முற்றிற்று.
ஆ திருவிருத்தம்-கஒள.



## திருநகரச்சிறப்பு.

போது.

வேதநெறி வியாதனுரை யீரொன் பானில் விடையவன் மெய்ப் புராணங்கள் விளம்ப வற்றி, ஞேதுறுசீர்க் காந்தமதன் வகையு ளீச னுயர் பெயர்ச்சங் கிதைமேன்மை யுற்றவா போன், மேதினியிற் றமிழ்நாடு மதனிற் பாண்டி வியனாடு மன்னதிற்சீ தலமு மேலா, மேதகலத் திருநகரச் சிறப்பு முற்று மி யம்புநர்யார் சிறிதறிந்தாங் கிசைக்கின் றேனால். (க)

வேறு.

திருநகரச் சிறப்பெனநூல் செயுங்கவிஞர் முனந்திகழத் தீட்டு வாரத்
திருநகர்யா தெனவுணர்காற் சொற்பெய்தே யறிவுறுமச் செயல தாகுந்
திருநகர மெனுமதனைப் பொதுநீக்கித் தனதாக்கொ டிறத்த திந்தத்
திருநகர மெனிலிதனுக் கிணைநகர மெங்கேனுஞ் செப்ப லாமோ. (உ)

வேறு.

பல்கு மேனைய தலமுத லுலகெலாம் பரம்பிப்
புல்குறும் பொரு ளெவையுந்தன் பெயர்சிரம் புனைந்து
மல்கு மேன்மைபெற் றிலகுற மற்றவைக் கதனை
நல்கும் வாய்மைவண் மைத்திறத் ததுதிரு நகரம். (௩)

புலனிற் காணுந ரெவர்க்குமா தாரமாய்ப் பொலிந்து
பலமிக் கீதலாற் சிகரங்கள் திகழ்பல பண்பால்
வலமுற் றெங்கணு மருவியின் சீர்திகழ் மாண்பா
னலனிற் கூர்திருக் கைலைபோல் வதுதிரு நகரம். (௪)

எவர்க்கும் ஆதாரமாய், மாதாரமாய் எனவும், சிகரங்கள்-கோபுரங்கள், மலையுச்சிகள் எனவும், இன் சீர்த்தி எங்கணும் மருவி எனவும், அருவியின்சீர் எங்கணும் திகழ் எனவுங் கொள்க. தாரம்-வெள்ளி. சீர்-ஒலி.

திருத்த குஞ்சுடர் வலமுறச் சூழ்தலாற் சிவனார்
காத்த வில்லென த்தரித்தலா னடகக் கவின்கூர்
நாத்தி னற்கன முறுதலாற் பொன்னிறை தரலால்
வாத்த மேருவை நிகர்வது வளத்திரு நகரம். (௫)

ஒளிவலியுறப்பாம்புதலால், சூரியசந்திரர்கள்வலமாகச்சூழுதலால், சிவனார் ஒளியுடையஇல்லாகவசித்தலால், கையின்கண்ணதாகியவில்லாகத்தரித்தலால், நாடகம்-ஆடகம். கனம்-பெருமை. மேகம்-பொன். இலக்குமி-பொன். எனக்கொள்க.

நீடு பாண்மைய நேமியின் மேதலாய் நிகழ்பொன்
னாட ராதியர் மதித்துறு தம்பமாய் நயந்து
வாடி லின்புற வவர்க்கமு தந்தரு மரபாற்
பீடு சாலுமந் தரம்பொரும் பெருந்திரு நகரம். (௬)

பாண்மைய நேமி-தன்மையுள்ளபூமி. பாற்கடல்;மதித்துஉறுதம்பம்-கருதிவரும்புகலிடம், கடையப்பட்டுள்ளமத்து. அமுதந்தரும்-மிர்தமின்மையைத்தரும், அமுதத்தைத்தரும்எனக்கொள்க.

வேதன் மாலரி யாதிய விபுதர்கள் விமலன்
பாத சேவையின் செவ்விபார்த் தடிக்கடி பணிந்து
வீதி சூழவம் புயம்வனம் விளங்குசற் பகப்போ
தாதி நாறுமா வெங்கணு மத்திரு நகரம். (௭)

வாடு றுதபொன் னரித்தொடை யாதிய வயங்கு
மாட கஞ்செறி விமானங்க ளாடல்வெண் களிறு
பீடு சான்றவெள் ளொகினம்புள் ளரசிவை பிரியா
நாடு ஞ்புறஞ் சூழ்வன பெருந்திரு நகரம். (௮)

வேத கோடணஞ் சிவாகம கோடண மதசங்
கீத கோடண மிடறுமே தாறுளா கஞ்சங் கிளையாழ்ச்
சீத கோடணந் திராவிட வேதமா தியவி
னாத கோடண நயந்தமல் குறந்திரு நகரம். (௯)

தலத்தின் மிக்கன தருமங்கள் பற்பல சான்ற
வலத்தின் மிக்கசெல் வத்தொகை யாவையு மலிந்த
பலத்தின் மிக்கவின் பத்திறம் பல்குவ பயில்வோர்
நலத்தின் மிக்கமோக் கம்பெறும் பெருந்திரு நகரம். (௧௦)

குன்றி குஞ்சிறை குறைத்தவ னிறைத்தபொற் கோயிற்
சென்றி லாங்கலி நீஞ்சவைச் செவ்விள நீர்தான்
றன்ற லெச்சுமந் தளிப்பன தாளினீர் மடுக்கு
நன்றி யோர்க்குகொ ளளிபலன் றருமென நயப்ப. (௧௧)

திரையன் மென்கொடி செறிதரத் திரையெறி வளைமேன்
மருவ வானிமிர் பூகத மருத்துண வலது
தெரித ராவிமை யோருண வோதனத் திரளை
யரிய பாகடை யளித்திடல் போன்மென வமரும். (கஉ)

சூல டிப்பல விருங்கனி வேரிடைச் சுமந்து
ஞாலம் விள்ளுறக் காண்டலும் வலிமுக நயந்தாங்
கேல வந்துபார் கீண்டெடுத் தின்சுளை கவர்வ
சாலு மையிருற் புதையல்கண் டெடுப்பவர் தகைய. (கங)

தீய ரும்பியாங் கிளந்தளிர் செறுந்துள சூத
மீயி லங்குறு மாங்கனல் வெற்பென மிசைபோந்
தூய வெண்மதி நிழற்றுஞ்சு கவரிமுன் றுருவிப்
போய வன்னமு மேனமு மாமெனப் பொலியும். (கச)

வேறு.

மாரன கவிகைச் காம்பின் வண்குருத் தெழுந்து திங்கட்
சாரலின் றிலங்கு வாழைத் தண்கனி கவர்ந்து மந்தி
யாரநன் களிப்ப காதற் பிணையினுக் காசா னன்பர்
சீரிய கரத்தி னல்கு சிவலிங்க தான மான. (கரு)

களியிளி முரலுட் கன்னல் கண்முத்த முகுக்குந் தோற்றம்
வளைதனு வாய னங்கன் மாட்டுறீஇ யுலகர் யார்க்கும்
தளரிடர் புரிந்த பாவஞ் சாடுகென் றமலற் போற்றி
யொளியதன் கண்ணீர் சிந்தி யொருங்குநோன் பியற்ற லொக்கும். ()

ஆடவர் மாதர் மாறி யாடுபொற் சுண்ண மாதி
யூடினர் கலன் களாதி யுஞற்றுசிற் றிலிற் குவித்த
பீடுறு மணிக ளாதி சிறுவொடும் பிணங்கி நல்லார்
வாடியோச் சணிக ளாதி மறுகெலாங் குப்பை யாமால். (கஎ)

மைந்தர்க ளுகைக்கு மாம்பல் வயப்பரி மதம்வி லாழி
சந்தத நீத்த மாகித் தயங்குபன் னியமத் தோடிச்
சிந்திய குப்பை யாவு மரிக்கொடு செல்லு நாளுங்
கந்தா மின்றி யீண்டுக் கலந்ததென் வெள்ள மென்ன (கஅ)

ஆழ்வன சுகோ ததிக்க ணங்குளா ருள்ள மேயாம்
போழ்வன தத்த மின்னார் நகில்களாற் புருடர் மார்பே
வீழ்வன பொழிலிற் செம்மன் மிகுசுவைக் கனிக ளாதி
தாழ்வன வகழி வாவி யோடைமா தடமுன் னுவ. (கசு)

வாடவ நகிற் கிளைத்த மின்னனார் மருங்கு லன்றேற்
றேடியா தலரைக் காணுக் கவிகையோர் சிந்தை யாகு
மோடவே நகரி னெல்லை யுறுபவர் பாவ சால
மாடமஃ தன்றே வூரு மிரதயா னங்க ளாவ. (உ௦)

இன்மையென் றியம்பு மாற்ற மில்லறத் தன்மை யென்னப்
புன்மையா ராம மாட மாதியிற் புணரு மேகந்
தன்மதி சிகரி யிஞ்சித் தன்னுமிந் தென்ன வின்ன
சொன்மய விலா தியற்சொ லாகவே துணிவர் கேட்போர். (உக)

வஞ்சமென் றுரைப்பின் யாரு முதற்குறை மாற்ற மாக
நெஞ்சுறப் பவஞ்ச மென்னும் விதிதமே நிறுப்பர் கேட்போ
ரஞ்சமோ திமமே வேட்கை யருமக மியற்றல் கூற்றஞ்
செஞ்சொலே கோப மாலிந் திரப்பெயர் முன்கொள் செந்தாம். (உஉ)

மாதர்க ணல்கு ளுமு மாதரும் வாமந் தாமு
மீதுசெல் யோக ருள்ளு நோற்பவர்க் கருளமேவுஞ்
சீதளி நாதர் வாமஞ் சிவநிய மத்தார் செய்கை
வீதிகழ் தடியும் போற்று மிக்கவ ரம்பை யேயும். (உ௩)

கண்ணும்அல்குலும்-மிக்க அரத்தையும்சர்ப்படத்தையுமேயும். மாதர்அரம்பையேயும் மாதர்-அழகு.அரம்பைதேவப்பெண்.வாமம்- அரம்பையேயும்.வாமம்-தொடை.யோகர்உள்ளம்-மிக்கவர்அம்பையேயும். அம்பு-பாணகதி. சீதளிநாதர் வாமம், மிக்கவர்போற்றும்அம்பையையேயும். எய்தல்-பொருந்தல். சிவநியமத்தார்செய்கை, மிக்கவரம்பையேயும். வீதிகழ்தடிவரப்புக்களையேயும். வீ-பூ. தடி-வயல்.

கவிதரு விடைய நீத்த முனிவர்காத் திரங்க ளுள்ளங்
கவிகையர் காங்கண் மின்னார் கருத்தொடு முறுவல் காக்கள்
கவிகள்செய் கவிக ளோதுங் காமர்மா ணுக்கர் நெஞ்சங்
கவினுறு மிவையோ ரெட்டுங் கற்பனை யவாவி னேரும். (உச)

காத்திரம்-கற்பங்களையஆவிநேரும். உள்ளம்-கற்பிதப்பொருள்களில்அவாஇன்மைநேரும். கொடைஞர்காங்கள்-கற்பகங்களையுமயவாதவில்நேரும். கருத்து, கற்பைஅல்லைஅவாவுடன்நேரும். முறுவல், கற்பு அனையவாய்வில்நேரும். காக்கள்-கல்பன்மையவாவிநேரும். கவிகள்-கற்பனையவாய் இனிமைநேரும். நெஞ்சம்கற்பனவறறைநயர்துவில்நேரும்.

கம்பலை யுந்து மேல்லை கம்பலை யுந்து நீடு
மம்பலை கண்ணார் மைந்த ரம்பலை யகற்றி வாழ்வ
ரும்பலை யுருட்டி யாடு மும்பலை யினக்கைக் கொள்வார்
வம்பலை முலைக்கோ டாயர் வம்பலை யளக்கும் வீதி. (உ௫)

கம்புகளை அலையால்உந்தும்எல்லைகளில்கம்பலையும்நீடும். உம்-உந்தாயது கம்பலை-ஒலி. அம்பலை-பழிச்சொற்களை. உம்பல்மேஇனம்-அழகியசேயின ம். கோடாயர்—கைத்தாயர். தாயர்கொள்வாரெனக். வம்பல்—திசை.

சந்திர நிலாவு மாடஞ் சந்திர நிலாவும் போர்ப்பத்
தந்திர மறைசொல் பூத தந்திர நாத னோர்ந்து
வந்திர வசன்ற மெய்யார் வந்திர மாய வுள்ள
மந்திர மேவு நீற்றின் மந்திர மேனி மானும். (உசு)

சந்திரம் நிலாவும்—பொன்னாற் செய்யப்பெற்று விளங்கும். பூததந்திரன்—பூதசேனையன். ஓர்ந்து உவந்து எனப்பிரிக்குக. உள்ளமந்திரம்-உள்ளக்கோயில். நாதன்மேனி எனக்கூட்டுக.

செப்பரும் வளஞ்சா லின்ன திருநகர்ப் பொதுமை யாய
வொப்பரும் வளத்தின் மேன்மை யுற்றுணர்ந் தெவை யுரைத்தா
மிப்பெரு நகர்ப் புறத்து மிடையினு மகத்து மேய
வப்பெருஞ் சிறப்பி னுள்ளுஞ் சிற்சில வறைய லுற்றும். (உஎ)

புறநகர்.

கானகத் துதிக்கை யாலுங் கந்தர நேர்த லாலுந்
தானமா மருவி யாலுஞ் சைலநேர் தான மாக்க
ளானவை முத்தி றத்த வளப்பில செறிந்து மல்கி
வானுய ரோளி பல்ல நகர்ப்புற மருவு மாதோ. (உஅ)

விண்டொடு புழைக்கை நீட்டிக் கற்பக விடப மாட்டிக்
கொண்டலை வளாரி னேச்சிக் குஞ்சர மழைபெய் விப்ப
மண்டுமப் பெயனீ ரன்ன மத்தமா மதப்பே ராற்றை
வண்டெழுந் தலற வோட்டி வாரியில் வீட்டு மன்றே. (உகூ)

ஆருயிர்க் கிதமே யாக வவைக்குறு போக மூட்டிச்
சேர்புதன் வசம தாகச் செலுத்துறுந் திரோதை மானக்
கார்செறி வனம்வெற் பாற்றிற் கஞல்கரி யீட்டிப் பாகர்
நேருண வூட்டி யாணை நெறிச்செல வியக்கு வாரால். (௩0)

கரிபதங் கறைகள் கோடு கைக்கொளு முலக்கை யன்ன
சொரிமணி வல்சி காலிற் றுயல்செவி சுர்ப்ப மாக
விரிபுகர் நிறந்த விட்டின் விரவவார்ப் பொருவா வோளி
யரிவைய ருலக்கைப் பாட்டி னெற்குறுங் களம தாமால். (௩க)

பரிமுக நிரைகள் சாலிப் பழக்கதிர் நிரைக ளாகத்
தரையுறச் சொரிவி லாழித் தண்ணளி சாலி முத்தா
மருவநேர் நிறுவு மந்தி லைந்நிரை வரம்பிற் கன்னல்
பொருவுமந் தனரகள் சாலி விளைநிலம் போலு மன்றே. (௩உ)

சூழுறுந் தரங்க மாகக் கோடரத் தொகுதி பல்ல
வீழுறு பேன மாக விலாழிகூ டங்க ளங்குக்
காழ்மரக் கலன்க ளாமீ காமர்கள் வலவ ராக
வாழிபற் பலவங் குற்றாங் கமருமந் துறைய னேகம். (௩௩)

கந்துகம் வன்னி கோட கம்பரி யிவுளி பாட
லந்திக ழுட்ட மங்க லம்பயில் பஞ்ச கல்யா
ணந்தெய்வ மணிக்க ளத்தி னயந்தரு குதிரை யாதி
யந்தமில் பாய்மா நூல்சொன் மரபெலா மமைந்து சூழும். (௩௪)

மண்டலம் வீதி யாதி மரபினி லோடிச் செல்வ
தண்டலி விடப மல்ல மயூரஞ்சார்த் தூலம் யூகங்
கண்டிடு கதிய பாணஞ் சசமுதற் கதியுங் கொள்வ
கொண்டல்சிம் புள்சங் காதிக் குரலின குந்த மெல்லாம். (௩௫)

பரவுநற் சுழிக ளெல்லாம் பயில்வுறப் பெற்று நூறு
விரலுயர் வுடைய மாவின் மென்றளிர் நாவ நெய்தன்
மருமலர் விழிய வன்ன மலர்மணம் வாய்ந்த மெய்ய
விரவுபல் லணிய கின்னா விதம்பல மேவு மாங்கே. (௩௬)

ஆடகச் சில்லி கோத்த வயிரவச் சவிர்மா ணிக்கப்
பீடிகைப் பரப்பு நீலக் கான்மிசைப் பிறழ்கோ மேத
மூடுற வமைந்த தேர்கண் மொழிதரு மைம்பூ தங்கண்
கூடுற வடக்கி மேன்மே னின்றெனக் குலவு மாங்கே. (௩௭)

பாருல கனைத்துங் கொள்ளும் பரப்பதா விரிந்த விவ்வூர்த்
தேரினைப் புலவர் நோக்கித் திரைக்கடல் வைய மேயிவ்
வேரிய விரத மென்று விசைத்தகா ரணத்தால் வாய்த்த
பேரினம் பற்றி மற்றும் பெற்றன பிறிதொன் றின்றால். (௩௮)

இடத்தினில் வைய மென்ன வியைந்தவிவ் வொன்றோ வேனை
முடித்தலை யாலவ் வண்ட முகட்டையுங் கடந்து காலாற்
படித்தலை கிழியச் சென்று பாதலங் கிடைக்கும் பண்பா
லடுத்தவா னாமுந் தம்மு ளொன்றுமா றமைந்த தேர்கள். (௩௯)

மலர்விழி யிமைத்தல் செய்யார் வஞ்சிசூழ் குஞ்சி சோரா
ரிலகுமுன் கால்பின் னோக்கா ரிரும்படைத் தடக்கை சோரார்
குலமக வென்ன மான மொன்றையே குறிப்பர் மேற்சென்
றலமரப் பகைகள் சாடும் வீரராங் களப்பி லாதார். (௪0)

இம்பரின் வீர ரேயன் றெதிர்த்தவ ரிமைத்த லில்லா
வும்பரே யெனினு நோக்கா லொப்பினு மவர்கட் கன்னோர்
செம்புனை மார்ப மேற்பச் சிறுவரை சிலைமுன் கோட்டித்
தம்மையேய்ந் தடுபோ ராற்றித் தொலைத்திடு மாற்றன் மிக்கார். (௪௧)

அத்திர சத்தி ரங்க ளாமிரு தொகைய வாகிப்
பத்திர முதலீ ரொன்பான் வகையவாய்ப் பாம்பு கூர்மைப்
பொத்திர குலங்கள் யாவும் புரையறச் செறிந்து மல்குஞ்
சித்திர கருவிச் சாலை திகழ்வன வனேக மாங்கண். (சஉ)

கரும்பொனை யிரும்பொ னாகக் காண்பவர் செயற்கு மேலா
யிரும்புசெம் பதுமராக மெனச்சிவை முகம் பழுத்து
வரும்பரி சழலிற் காய்ச்சி மறித்தவை வெண்பொ னென்னத்
தரும்பல கருவி யாங்கே சமைத்திடுங் கொல்லர் பல்லோர். (சங)

அச்சுரு ளார்பூ ணணி யாதிய வமைப்பார் பல்லோர்
கைச்செறி குந்த நேமி கப்பண நாந்த கந்தோல்
வச்சிரந் தோம ரஞ்சூல் வளையுடம் பிடிதண் டாதி
நச்சழற் படைக ளாங்கு நவிற்றுகிற் பார்கள் பல்லோர். (சச)

ஓடுரு துடுப்பி னங்க ளொருங்குசூழ் கிடப்ப தென்னென்
றூடுமா சேய்மைக் கண்டோ ரலத்தகக் கொழுக்க ளாற்றி
மாடுறப் பரப்பு வார்கண் மற்றும்பல் றொழில்செய் மாக்கள்
கூடுபு புரிவார் முற்று மினைத்தெனக் குறிக்கொ ணாதால் (சடு)

இடைநகர்.

இந்நக ரிடைவா னுள்ளா ரியாவருஞ் சீத ளீசன்
றன்னடி பணிந்து நாளுஞ் சார்தலி னவரூர் போற்ற
லென்னது கடமை யென்ன வியைந்தாண் புரிந்த தேய்ப்பப்
பொன்னகர் மேலும் பொங்கர் போய்ப்பொழில் பிறவுஞ் சூழும்.(சசு)

தாதகி கன்னி காரஞ் சண்பகம் வழை செருந்தி
மாதுள நாரங் கஞ்சம் பிரமா வகுள நீபஞ்
சாதியாண் குரவு கோளி சந்தகி னறவஞ் சாலம்
பாதிரி ஞாழல் கொன்றை பலவுமற் பலவு மேவும். (சஎ)

அயலுறு குயில்க டாமு மரிவையர் மொழி பயின்றந்
நயனுறு தடைத்து வாய்பின் னுணுபு சின்ன ளுள்கிப்
பயிலுறு மேலு மன்ன பான்மையி னென்று லன்னே
ரியன்மொழிக் குருகி மாழ்கு மைந்தரை யிகழ்வ தெங்ஙன். (சஅ)

கிள்ளையின் மாலை பூவை கோகிலங் கிளர் மாள
முள்ளான புட்க ளெல்லா மோடுவ போது கொய்வா
னள்ளெழின் மகளிர் போதக் காண்டலு மலைந்தழ் ஞாலங்
கொள்ளுநன் மௌலி வேந்தர்க் கண்டிரி குறும்பர் போல. (சகூ)

பன்னியுள் ளுவப்பக் கோங்கின் முகையினைப் பறித்தங் கீவான்
முன்னியோர் புருட னுங்கு மொய்குழ லொரு தி கொங்கை
தன்னையங் கையாற் பற்றி யுணர்ந்துபின் றளர மேலு
மன்னவன் கவலச் செய்வா ரவ்விரு மடந்தை மாரும். (௩0)

செருந்தியி னுமென் போது செறிந்தில கலர்ந்த கோங்கி
னரும்பினைத் திதலை பூத்த வாயிழை முலையென் றுங்கே
விரும்பியோர் மகன்றொட் டொர்ப்ப மென்முகை யதுகைம் மீது
வரும்பரி சுணர்ந்து நாணி மறைத்தது மாதர்க் கீயும். (௩௧)

சைவலங் கமல நீலங் கைரவந் தாளம் வள்ளை
மொய்வளை குமிழ்கல் லோலஞ் சுழிவரால் கூர்ம முன்சார்
மெய்வளர் தடங்கள் பல்ல வினங்களேற் றேகை மேவப்
பெய்வளை யவர்கள் போந்து பெட்டுநீர் குடைவ ராங்கே. (௩௨)

நீளைநேர் மாதர் பல்லோர் நிறைதரு படீர மாதி
வாளைபாய் தடங் கவர்ந்து கலங்கலாய் மல்கப் புல்கிப்
பாளைநேர் கூந்தல் பூப்பப் படிந்தனர் கரையிற் போந்து
மீளவு மூழ்கச் செல்வார் பங்கமெய் விரவிற் றென்னு. (௩௩)

கொந்தலர்க் குழலி னுர்தங் குடக்கையி னடங்க வைத்துப்
பந்தடித் தாடுந் தோறும் பணைமுலை படத்தை நீக்கி
சந்தமக் கணிகள் பூட்டி நயந்தெழில் புணர்க்குங் கையாற்
சுந்தக மடிபட் டேங்குங் காட்சிநன் றென்று காண்ப. (௩௪)

இட்டிடை யணங்கி னல்லார் செம்மணிக் கழங்கை யேந்தி
யொட்டிவிண் வீசியாட வுறுங்கனி யெனவான் கிள்ளை
கிட்டியா றலைப்பார் போலக் கவர்ந்திடக் கெட்ட நன்றோ
பெட்டறும் மொட்ட மென்பா ரன்றென்பார் பிணங்கு வாரால். (௩௫)

தேங்குசெங் கமலப் போதிற் றேங்குயின் மிழற்றுந் தேமாப்
பாங்கடை நதியின் வார்ப்பப் பான்மலர் கமுகு தூர்ப்ப
தூங்கிசை மறைக ளோதித் துவையா னறுநெய் வார்த்கிட்
டாங்குவெண் பொரிக வேி யங்கிவேட் பவரின் மாதோ. (௩௬)

அகநகர். (வேறு.)

முரலிசைவண் டூழூதழக்க முறுக்கவிழ்ந்து கருவெள்ள முளரியாதி
விரிமலர்க ளொழுக்கமது வேலையென லாயளப்பின் மேதிதாம்பாய்
தாவுகளும் வாளைசெருத் தலின்மோதக் கன்றைநினை தந்தம்மேதி
சொரிபயத்தாற் பாற்கடலாய்த் துலங்குறுமிக் ககர்மதில்சூ ழகழின்றோற்றம்.

வேலையென விசும்பணுகி வீழ்ந்தருந்த வெங்காக்கை வெற்பீதென்று
வாலினடித் தப்புனலம் மலர்க்கிடங்கிற் பெய்விக்கு மாண்பக்கேணி
ஞாலமுணற் குதவாத நாலையன்றோ நீகவர்ந்து நல்கவேண்டும்
பாலதுனக் கத்தொழிலெம் பாலிலையென் றுடன்கவரும் பான்மைபோலும்.

கண்ணுதல்செய் கௌரிநடங் கண்டனந்த னாதியருங் கண்ணனாதி
விண்ணவரு மண்ணவரும் வேறெவரு மெனுஞான்று மேவாநிற்ப [த்தாய்
வெண்ணருமுற் றுலகினுஞ்சா ரெப்பொருளு நிறைந்தமைய யாமென்சேய்
நண்ணுதலென் றண்டமதி னயந்திவணின் றதுகொலென நலக்குமால். ()

அடியதனாற் பிலமேழென் பவைகடந்தப் பாற்செல்லு மமைதியாலு
முடியதனால் வானுலக முற்றுமளந் தப்பாற்சென் முறைமையாலு
நெடியமதி லொளியவளை நேமிகதை காம்பரிக்கு நெடுமால்வேதன்
படியகல்வான் றுருவமிர் பானுருவ மென்பதலாற் பகர்தலென்னே. (௬௦)

ஐம்பொறியே முதலாய வகப்பகையு மெல்லாந் தளர்வேநீக்குந்
தம்பமதாய் வயங்குவதித் தனிநகர மெனினுமுறை தகுநூல்சாற்றுஞ்
செம்பொருடே ரங்கமென்மாத் திரையேயா யகழ்புரிசை திகழப்பெற்றுங்
கும்பர்புகு மப்பதணத் துறும்பொறிகள் செயுந்தொழிலங் குலப்பிலாத. (௬௧)

உவணமுத லுலகேழு மொருங்குகடந் தேகுதலா லும்பர்யாரு
மலரவர்த முலகினின்று மாங்குவெளிப் போய்வருதற் கமையப்பெற்றுங்
கிவர்தருபன் மணிவாயி லேழிலகு கோபுரமவ் விஞ்சிமேவித்
திவளுறுநாற் றிசையினுமச் சிகாநல மினைத்தெனயார் செப்பவல்லார். (௬௨)

## வேறு.

இனையமா நகரிற் சாபமோ சனந்தா னெய்திவா னிடத்தமர் சயந்த
னனையவி மூலங்கற் புயாசல வடுக நாயகன் றனக்குரை வாய்மை
தனையரம் பையர்தம் போகத்தான் மறந்து தங்கினு முணர்ந்திவட் சார்வான்
மனமுறவழைக்கும்பரிசெனச் சுதன்மை மருங்கசைவுறும்விலோதனங்கள்.

செம்மணி மாட மைம்முகில் போர்த்துச் சிவனுருக் காட்டிடு மெதிரே
மைம்மணி மாட மவற்றெழூப் புகுந்த மாயவ னுருவமும் வளஞ்சேர்
பொன்மணி மாடந் திருமக ளுருவும் பொற்புறத் திகழ்மா கதமா
நன்மணி மாட மிமகிரி பயந்த நங்கைதன் னுருவமுங் காட்டும். (௬௩)

ஆடக மிசைமா துன மாதி யணிநிறத் தசலமுற் றடைந்தாங்
கேடல ரிதழி வேணியஞ் சீத ளீசனை நேசமிக் கிறைஞ்சி
நீடலர் காத லாற்பிரி யாற்று நீர்ந்துநின் றனவென நிமிர்பன்
மாடமிக் கிருபான் மிடை மறு கனேகம் வயங்குமற் றவற்றையார் வகுப்பார்.

## பரத்தையர்வீதி. வேறு.

மானவர் முனிவர் யோகர் வானவர் வன்கட் டிய
தானவ ராதி யானோர் யாரையுஞ் சாம்பி நெஞ்சம்
போனவா றறியா ராகிப் புலம்புகொண் டினையத் தங்கள்
பானலங் கண்ணால் வெல்லும் பரத்தைய ரிருக்கை சொல்வாம். (சுசு)

மனனமர்ந் தெம்பால் யாரு மகிழ்ந்தினி தளிக்கா நின்ற
தனமதே யறமாஞ் சோகந் தணத்தியா மளிப்பக் கோள்வல்
லனதனந் தம்பா லீட்ட லாம்பொரு ளிதய மொத்த
வினிதுறு மின்ப மாம்வீ டிணைவிழைச் சதுவே யென்பார். (சுஎ)

## வேறு.

பலதார மொருவர் கனதனங் கொடுக்கிற் பலதாங் கனதனங் காட்டி
யிலகுபை மறித்தாங் கிசைபுற வெழிலான் யாரையு மபக்குவ ரில்லார்
வலியவந் துறினு முகத்தையு நோக்கார் மைந்தரை வசித்துளத் தெழுந்த
கலகமார் காம சாகரத் துலாவுங் கடமெனுந் தடமுலை மடவார். (சுஅ)

விழிவலை வீசி மைந்தரைத் தூண்டின் மிகப்புநோக் குநர்செயல் புரிவார்
கழிமனை வாயின் மறுகெதிர் நிற்பார் கால்வழிச் செயன் மனம் விடுப்பார்
மொழியிசை தருவார் முலைப்பட நெகிழ்ப்பார் மூடவோ ராடைதம் மருங்கி
னழுவியாங் குடிப்பா ரிவைமுத லிவர்செய் நாடகமவிற்றரி தம்ம. (சுகூ)

இசையுமெய் யன்பே கட்புன றருமென் றியம்புநான் மறைக்கொரு சிறிதும்
பசையிலிம் மடவார் தம்விழி வலையிற் பட்டுறு மைந்தராங் கொருகாசை
தமி லிருத்தி செவினும்பின் போய்த்தங்கயனநீர் பெருக்கிநின் றதனை யசை
வின்முன் பரிந்தார் நமைநினைந் தழுதாங் கவருமங் குறவெதிர் மொழிவார்.

இருள்வலி கடந்த வருள்வலி யினர்பா லெய்தினர் மலச்சிமிழ்ப் பவிழ்த்தே
யரியமெய்ஞ் ஞான மளித்துடல் பொருளோ டாவிதாங் கவர்குவ ரிவர்தங்
கருவிழி யதனாற் பிணித்துளார் தமையுங் கலந்தனர் போகமுங் கவர்ந்து
மருவுமம்மூன் றுங்கவாவர்தாமொன் றும்வழங்கிடார்திறமையார்வகுப்பார்.

## சூத்திரர்வீதி. (வேறு.)

உலகமேவிய வுயிர்ப்பசி யொழியவெஞ் ஞான்று
மலகிலாவிய வுழுதொழி லாற்றியவ் வளத்தா
னலனுலாவுபற் பலபொரு ளீட்டுவர் நாலாங்
குலநிலாவுவே ளாளர்தம் மறுகணி குறிப்பாம். (எஉ)

காளுமீட்டுறு பொருளெலாந் திருத்தளி நாதன்
றாளினன்பருக் களித்தலே விரதமாச் சமைந்தார்
நீளிடைச்சிவ னன்பரைக் காணினெக் குருகிக்
காளகண்டனே யென்றுமுட் கருத்தொடும் பணிவார். (எங)

அடிகணற்றிரு மாளிகை யோடருள் வாக்கென்
றிடரிலன்பரை யுயர்த்திய மெளியரேஞ் சிறியேங்
குடில்கள் புன்சொலென் றிழித்துமுற் றங்களைக்குறையாப்
படியில்பூச்சிய நைச்சிய மாற்றங்கள் பகர்வார். (எச)

படருமன்பொடு குரவர்தம் மடியிணை பணிவார்
விடையினனடி யருச்சனை விடாதுசெய் திடுவா
ரிடையரூதுமெய் யன்பருக் கின்னமு தளிப்பார்
கடையினின்றவர் வரவையே மேலுங்கா முறுவார். (எரு)

நேருமொவ்வொரு வருடவர்த் தனைப்பல நிதியுஞ்
சேரவீந்துமுன் மகம்புரி செயலின்மட் கலத்திற்
சாருமாமுனிக் கருக்கியந் தந்தவேந் தொப்பார்
பாரிலின்னரைச் சூத்திர ரென்றிடப் படுமே. (எசு)

அண்டர்நாயக லிகிதமு நம்பிடா தயில்வேல்
கொண்டவுக்கிர வழுதிமு னிவர்குலத் தினர்சொல்
விண்டவேதத்தி னம்பிமால் விடுத்தன னென்றூ
லெண்டருமியர் மகிமைநா மியம்பலாந் தகைத்தோ. (எஎ)

## வைசியர் வீதி.

அணிகொ ணம்பிசொ லம்மையா ரமர்நீதி யன்பர்
கணிகொண் மூர்த்தியா ரியற்பகை யார்கலிக் கம்பர்
தணிவி லின்னனேனார் தங்குலத் துறத்தவம் புரிந்த
வணிக ராவண வளஞ்சிறி தறிந்தவா வகுப்பாம். (எஅ)

மறைக ளோதுமெய்ச் சிவார்ச்சனை முதனிய மம்போ
லுறையும் பற்பல பொருள்களீட் டேக்கமிக் குடையார்
குறைவி னன்னிதிக் குபேரராங் களவிலார் குலவி
நிறையு மோர்நகர் போலுமவ் வணிகர்சூழ் நியமம். (எகூ)

எழுலோ கமுனெப் பொருள்களுந் தழீஇ யிமையோர்
வாழுந்தம் முலகில் பொருள்கொள வரும்வளஞ் சேர்
பாழி யாவண மேருவி னமரர்முன் பயில்வே
லூழிநாயகன் கொண்டபே ருருவமே யொக்கும் (அ0)

வரை தரும் பொருண் மாவனம் வழங்குபல் பொருள்க
ணரலை நற்பொரு ளுடைப் பொருளெலா நணுகும்
புரையில் பீடிகை நவமணி பலவொளிர் பொலிவா
லிரவி முற்கிர கங்கள்சூழ் வானென விலையும். (அக)

பரமகோட் டையா மனுவன வெனினும்பைம் பொருளை
யிரவி * நேரென வீட்டுவ ரிதற்கெதிர் மறையா
வரண தாலயப் பணிமுத லறங்களுக் களிப்பார்
பொருளின் வாஞ்சைய ரென்பதெங் கிவரிடைப் பொருந்தும். (அஉ)

தனதன் முன்னர னுடைசெல்வ இ யிவர்தனப் பெருக்கி
னனித நோக்கலி னருளினுற் பட்டினத் தடிக
ளென வுதித்தமை யிவர்குலத் தென்றிடி லினையோர்
புனித மான்மிய மளப்பவ ரெவர்கொலோ புகல்வீர். (அ௩)

இராஜவீதி. (வேறு)

தரை யெலாம் புகழுமாதி சந்திர வழுதி முன்னோர்
மரபினி லுதித்தோர் மூன்று வையமுஞ் செல்லுங் கோலா
ரான்மகி ழீண்டிராச தானியா யமர்ந் தோர் வாழும்
வரைபுரை மாட மாலை மறுகணி வகுக்க லுற்றும். (அ௪)

இறையெனக் குடிகளீயு மிறைப்பொரு ளொருபா லோங்கும்
திறல்கெழு வேந்தரீயுந் திறைப்பொரு ளொருபா லோங்கு
முறைதிறம் பினரென்றீட்டு முறைப்பொரு ளொன்று மின்றுன்
மறையவர் நாளுமோது மறைப்பொருண் முழங்கும் வாயில். (அ௫)

மூதகு மனுநானீதி மொழிகுந ரொருபால் வாய்மை
மேதகு சிவபுராணம் விரிக்குந ரொருபான் மேவிப்
போதுதோ றைந்துறுப்பும் புகலுந ரொருபா லாசி
மாதவ ரொருபால் வேத்து மருவுமத் தாணிவாயில். (அ௬)

அணியணி யிரதமேறி யருக்கனுஞ் சமழ்ப்ப வுப்பார்
வணர்மதி ‡ யுலவைமாலை மாலுமுட் கிடவுகைப் பார்
குணனமை தரங்கமாந குலனுமெய் குலையவூர் வார்
திணியவின் முதலவிஞ்சைச் செல்வவேத் திளைய மைந்தர் (அ௭)

செப்களி றாசர்திண்டே ரொதுங்குறச் சிறுமணித் தேர்
கைவற வுருட்டிச் சிற்றில் பேதையர் நலிந்துவீசும்
பெய்மணி யாரந்தப்ப வூடிப்பின் சிறூர்க ளன்னோர்
கைதரு ணேற்றுப் பின்னைச் செயற்கெதிர் காட்டுவார்கள். (அஅ)

சிவனருள் வலியால் யார்க்குஞ் செய்திடற் கரியசெய்கை
புவிமதி மரபினோர்கள் புரிந்தன ரென்று வாய்மை
யுவமையி லாலவாயின் மான்மிய முதனூ லோத
லிவர்களோ வெண்ணிலென்று வியம்புதற் கெளிய ரேயோ. (அ௯)

---

* இரவி-மலை. ‡ உலவைமால்-கோடுள்ளமேகம். அது யானை.
பிந்தினமால்-இந்திரன்.

## பிராமணவீதி. (வேறு.)

தழுவுமங் கலங்கள் பற்பல பொலியச் சசாதியின் விகோத்திரத் துதித்த
வெழினல நிறைசா லேந்திழை வதுவை யிலங்குற வெய்துநாள் வேட்ட
வழலினை நாளு மோம்புறு மௌபா சனமங்கி கோத்திர மாதி
யொழிவறப் புரியும் வைதிக மறையோ ரொளிமறு கணிசிறி துரைப்பாம்.()

அரனருள் சுருதி வழியசிரௌத மாநெறி யனையநான் மறையை
முரணுறு மிருதி வழியநன் மார்த்த மாநெறி யென்றுற மொழியு
மிருவகை நெறியாம் வைதிக முறைசின் றீசனே பேசரும் பொருளாம்
பிரமமென் றுணர்ந்தாங் குயர்சிவார்ச் சனமே யுயிரினும் பேணுறு மனத்தார்.

அங்கியை யான்மா ரோகணஞ் சமிதா ரோகண மலவபுரிந் தேனு
மங்குறு தென்றும் வளர்ப்பவ ரனைய மன்றலின் வேட்ட தியதுவே
தங்கடே காந்தத் தியல்சமக் காரந் தனக்குரித் தாமெனி லிதனை
யிங்குயி ரளவு மிடையறு தோம்பு வாரென விசைப்ப தென்யாமே. (௩௨)

பிரதமை தொடங்கித் தெரிசத்தின் முடித்துப் பின்னுமம் முறையென்றும்
பேணுந், தெரிசபூ ரணம்பல் பலிகளோ தனத்தாற் செயத்தகும் வைச்சுவ
தேவம், பாவுறு தாலி பாகமுன் னுகப் பகர்ந்தசற் கருமங்க ளவையுங், கிரி
யைமந் திரம்பா வனைகுறை யாமற் கிளருமன் புளமுறப் புரிவார். (௩௩)

ஈங்குறும் யாகத் தவிநுகர் வோர்க ளிமையவ ரிம்மகப் பொருட்டா
லோங்குநீர் பொழிவ தம்புத மிதனுக் குதவில வொன்று மூவங்கி
பாங்குறு நாமிப் பயோதரக் குதவி பண்ணலே கடனெனும் பரிவா
லாங்கிடை யறும லெழுமகத் தூம மம்முகி லளாவுமெஞ் ஞான்றும். (௩௪)

வ்வகறை யெழுந்து நியதிகள் புரிந்து மகம்வளர்த் தலகினை வளர்ப்பார்
தெய்வநான் மறைமுன் னூல்களெஞ் ஞான்றுஞ் சிரவணஞ் செய்துதிங் க
ளுப்பா, ருய்வகை விழையு மாணவர் தம்மை யோதுவித் துட்டுக ளொழிப்
பார், பைவிரி பணிப்பூட் பரமன்மான் மியங்கள் பற்பல பரிவோடும் பகர்வார்.

ஏகமுத் திறத்து விதப்பகை யாவு மிரிதரொரு மாத்திரை யமைய
மாருத லயலிற் செலாமனச் சதுர ரம்பஞ்ச மதற்றெறு சினத்தோர்
வேகஞ் சடுத்த வேதமாசந்த மிடற்றர னட்டமா ரடிக்கே
மோகர்மா னவங்க ணிதசம தமங்கண் முயன்றான் பான்மயங் குறுவார். ()

அரிதினி லாதி சந்திர வுழுதி யந்நர்வே தியின்கணி ராற
வருடமன் பணிசெய் தழைத்துட னூல வாய்ச்செல வரும்வழி யருள்கூர்
தாவெதிர் போந்து விப்பிர னெனச்சீ தனியரன் றகைந்திவ ணிருத்தும்
வாமிகு மறையோர் வழிவரு மினையோர் மாண்பெவ ருரைக்கவல் லாரே.

## சிவாசாரியவீதி (வேறு.)

உருவருவோ ரிருநான்கி னனந்தலையவ் விருதிறனு முறநின் ருளும்
பானைமுகோற் பனாரய கௌசிகர்கா சிபவிருடி பாத்து வாச
குரவர்கௌ தமரெமையா ளகத்தியர்தங் கோத்திரத்திற் குலவப் போந்த
வரமுறுமா சிவமறையோர் வாழ்சியமத் தணிசிறிது வகுத்து மாதோ. (௯௮)

மேதகைய சிவாகமஞ்சொ னித்தியநை மித்திககா மியங்க ளென்று
வோதுமொரு மூன்றினுக்கு மொருவாத வதிகார வுரிமை தன்னை
யேதமறப் பூரணமா யுற்றோர்கள் பசுபடுத்தாங் கியற்றும் வேள்வி
வேதவிதி யெனினுநிதஞ் சிவாக்கினியா கமவிதியே விழைந்து செய்வார்.

ஆனியங்க டோறுமான் மார்த்தபரார்த் தம்மெனநா லறையும் பூசை
யானியங்க வருமொருவற் கவன்சொல்சிவா கமவிதிக ளாய்ந்தொன் றேனு
மானியங்கண் மருவாம லாற்றுநர்சி வாங்கியினெய் பாயசாதி
யானியங்க வினைபுரிவா ராகுதிகள் விலக்கியன வயர்த்துஞ் செய்யார். (௧00)

முத்திறத்த தத்துவமுப் பானுறுங் கடந்துயர்ந்த முறைமை தேற [றுங்
வத்திரம்பன் னிருமுழத்தொவ் வொன்றாக வொருமூன்று மருங்கி லொன்
கத்தரிசை யுத்தரிய மாயொன்று முத்தமாங் கத்தின் மீது
பொத்துமுட்டி னிடமா யொன்றமுறப் புனைந்துஞற்றும் புனித சீலர் ()

கோதிலக்க மணியாறு கோத்திடுமாற் றுயர்சாத கும்பத் தாய
சோதிதிக ழாறுகட்டி யோர்மணிச்சுந் தரவேடந் துலங்கப் பூண்பா
ரேதிதனுற் சடத்துவசோ தனைபுரிந்து பக்குவர்க ளெவர்க்கு மேலா
மோதியளித் திருளகற்றுந் தீக்கைபுரிந் தொன்றுறச்செ யுரிமைதோன்றும்.

ஈசான முதலைந்து வத்திரங்கொள் சதாசிவமா மிலிங்க பூசை
நேசாரப் புரிபவர்கௌ பினநேத் திரங்கடியி னிலாவு நாகந்
தேசாரம் புயவாசஞ் சேகரகோ சிகமலர்ப்பூஞ் செங்கைக் கொள்ளு
மாசார மெனவைந்து வத்திரதா ரணமிவர்க்கே யமைந்த மன்றே. (௱௩)

## வேறு.

தயங்குறு தவைபா யனமுனி தருவே தாந்தருத் திரத்தன்மை தெளியாச்
சயங்குலாஞ் சிவாக மத்தெளி வாஞ்சித் தாந்தத்தோ டொவ்வுறச் சிலர்பா
டியங்கலை வேண்டா ரொதுக்குபு நீல கண்டபா டியமொன்றே பிறைசொ
னயங்கொளாகமத்தோடொத்ததென்றதையேநலந்தரப்புகன் றுரைவிரிப்பார்

போக்கறு நிகமா கமமிதி காசம் புராணமுற் றுளமுறப் புகல்வார்
தாக்கற விழைந்தார் தாசர்புத் திரர்சா தகர்க்கியல் சமயமுன் னுய
தீக்கைசெய் தரிய சரியையா திகளிற் செலுத்தய ரியர்தினை நியம [வார்.
மாக்கொளுஞ் செயல்கண் முடித்தபி னுருபாங் கமந்துதந் தமிலிவை யாய்

அத்துவி தார்த்தம் யாதெனை வுரைப்பா ரதற்கிரண் டன்மையே பொருளா
வொத்துரைதருவாரொன்றெனலமையாதோவெனவுரைப்பர்பண்ணுசை
மெத்திய கனிதீஞ் சுவையென விறைவன் வேறற யாண்டுமே வுதலாற்
சுத்தநான் மறைக ளேகமென் னுதத் துவிதமே சொற்றிடு மென்பார். ()

என்றிடின் மறைக ளேகமே துவித மின்றெனை லென்சொலென் றிசைப்பார்
நன்றுநீர் மொழிந்தீர் பதிப்பொரு ளொன்றே யிரண்டல நவிலுறு மேனைத்
துன்றிய யாவும் பசுக்களென் றுணர்வான் சொற்றதா லருமறை யேக, மொ
ன்றுணர்வில்லாரொன்றெனிஞென்றென் றுரைப்பவர்யாவாமற்றென்பார்.

தத்துவ மசிமுன் னுன்குவே தாந்தத் தனிமகா வாக்கியங் கொண்டே
நித்திய பதார்த்தம் பதிபசு பாச நிகழ்த்துமிம் மூன்றெனை வுரைப்பா
ரொத்தவிம் மூன்றுஞ் சலதிநீ ருவர்போ லுட்கிடை யீதுண ராதோர்
சித்தமான் றுரைப்பி னுரைக்கமற் றவரத் தீநெறிச் சேறலென் னென்பார்.

அப்பொரு ளனுதி நித்திய மாகி லாவிசேர் மலமழி விலையா
லெப்படி யுயிரா னந்தமேவுறு மற்றென்ப ராணவ மலமனேக
வொப்பில் சத்திகடா னுடையதச் சத்தி யொழிந்திடுங் குருவரு ளுைக்காற்
றப்பிலவ் வான்மாச் சிவனடி நிழலிற் றனித்திளைத் தின்புறு மென்பார்.(௧0௯)

மேவிருண் மனையி னமர்பொரு ணயன விடயமா காமையிற் றுயர்ந்தோர்
தீவமொன் றுங்க ணுற்றிடு காலத் தெளிவுறீஇ யின்பமே திளைப்பா
ராவரித் துளமுன் னிருள்வியா பகம்போ யவ்வலி யடங்கிய தல்லாற்
சாவடைந் திலதா லிதுகொடு துணிக சார்மல நித்திய மென்பார். (௧௧0)

ஒன்றெனை வுரைப்பி னுறுமிடர்ப் பாடோ வொன்றல பற்பல வுளவாம்
பொன்றிய விகார பிரமத்தி னுயிர்கள் போந்தவென் றுரைத்த லோருனந்
துன்றிய வவற்றை மலமுற லூனஞ் சொலுமவை லீலையென் றிடிற்று
ன்றிநோக் குநர்வே றின்மையிற் பிரமக் கவத்தொழி லுண்மையோ ரூனம்

அல்ல தூஉம் பிரமமொன் று பற்பலவா யமைந்ததென் றுரைத்தலோ ரூனஞ்
சொல்லுறு மாயோ பாதியா லென்னிற் சுத்தசே தனமதை மாயை
புல்லுறு திதனுற் போந்ததோ ரூனம் புவியினிற் கடநிரை யிகடயோ
ரெல்பல வாகத் தோன்றலிற் பிரம மனேகமாத் தோன்றுமென் றியம்பில்.

பிரமமொன் றொழிந்த யாவுஞ் சூனியநீ பேசலாற் கடமதிற் கண்டோ
ரொருவர்வே றின்று மாதலிற் பிரம முண்மையோர்ந் திலதெனு மூனம்
வாமுறு காய மொன்றுபற் பலவாய் மடகடா காயமா வதுபோ
லுரைசெயிற் பலவா யேகமென் மேற்கோ ளொழியுமஃ துய்விலா வூனம்.

இன்னபல் லூன மெய்தவும் வாளா வியம்பலென் னென்றெனை விசைப்பார்
சொன்ன நாம் வெவ்வே றுரைத்திடி னன்றே தோய்ந்திடு மின்பறு மென்பா

ரன்னமுட் பொருளும் வியாபக வியாப்பி யத்தொடு வியாத்தியா மென்
பார்,தன்னுகண் ணொளியா ரிருள்கதி ரிரவி தொகுமிவைக் குவமனென்று
[ரைப்பார்.

இவைமுத லாக வுண்மைநூல் விசாரம் யாவுஞ்செய் திறைவனெஞ் சிவனே
பவனெறிழ் தேனை யரியமுத லானோர் பசுக்களா மடிமையென் றுரைப்பா
ரிவர்களைத் திலிங்கத் துபாறி விலிங்க மென்னிலா ரிவர்திற னிசைப்பா
ரவர்சிறு ரேனை மறைச்சிறுர் மறுகி லாடுறுஞ் செயல்சிறி தறைவாம். ()

இன்றியற் றுதஞ்சத் திரமக மென்பா ரியற்றின நெருனலின் மகப்பேர்
றன்றுகா மேட்டி புரிகுது மென்பார் றலக்குவில் வட்டமே சதுர
மென்றமூன் றங்கி குண்டங்க ளமைப்பா ரெச்சனே டிருத்துவிக் கியைப்பார்
சென்றபுற் சமித்தே யாதியிட் டிடுவார் செய்வினை வரன்முறை செய்வார்.

நிச்சலு மிவ்வா றக்கினிட் டோம நிகழ்த்துறு வாசபே யந்தான்
விச்சைகொள் சோட சாகமே மசோமம் விச்சுவ சித்துமுற் புரிவார்
நச்சுறு களத்தோன் பதிட்டைமா சாந்தி நவபஞ்ச குண்டங்க ளமைத்தே
யச்செயன் மாபி னாற்றுவார் பூர ணாகுதி யாதிகள் புரிவார். (௧௧௭)

அங்கண்மா ஞாலத் தமணிருள் பாற்றற் கலரியிற் காழியி னருளிற்
றங்கமெய்ஞ் ஞான வடிவுகொண் டெழுந்த தோன்றன்முற் சான்றவ ரீங்குத்
தங்குசீ தளிரா தனைப்பணித் தரிய தமிழ்மறை புகன்றவா றென்பார்
பொங்குமிச் செறியோ,வடிகள் யாம்வாழப் போந்ததென் றன்புரைபுகல்வார்.

சேண்டசீ தளியின் வெண்ணிறப் பன்மீ னிலவுசெங் கமலத்தோர் பசுமீன்
காண்டக வமைந்தாங் குறுதிற நோக்கிக் காழிமா மணியெதி ரமண
ரீண்டெரி யிடுமே டெரிந்துவெண் ணிறம்பெற் றியைநத்துமெய்பிரானேடு
மீண்டுமுன் னையினும் பசுமையிற் றிகழ்ந்த விதத்தையுங் காட்டுமீ தென்பார்.

மாளிகை மீது வயங்குபொற் குடமுன் மருவுறப் பின்னொரு மகட
னிளிரு காமுங் குவித்தான் சிகரி நேருறப் பார்த்துநின் றிடக்கண்
டாளிபன் மயிலை யான்முனெம் மண்ண லக்கமர் பொற்குடத் தெழுப்பும்
வாளிருங் கட்பூம் பாவைமுற் போந்த வகையினைக் காட்டுமீ தென்பார். ()

வானுறு மசனி கவர்தா நிறுத்து மாளிகைக் கோனிரை மருங்கே
நீனிற முசுக்க ளமர்தர நோக்கி நிலைதபு மமணரை யருளான்
ஞானசம் பந்த ரவர்செய்பா தகங்க ளனலியும்பின் விரிந்தென விரங்கிக்
கோனுறிக் கழுவே றிட்டமை போலக் குலவுமித் தோற்றமென் றிசைப்பார்.

திருக்கோயில்.

மறைச்சிறு ரிங்ங னுடுறுந் தாள வாலுகம் பரப்பிய மறுகு
சிறப்பொடு சூழ நாப்பணெம் பெருமான் சீதளிச் சினகரந் திகழ
நிறைத்தசா ளவிரும் மணிகரு னிகைப்பேர் நிகேதன மீதென நினைந்தே
யுறைத்தபே ரன்பார் காசிக்கே கும்ப ருடங்கெழிற் றாங்குறீஇ யுவப்பார். ()

தந்திர மறைக ளவைதெளித் துரைத்த சமயசந் தானமா குரவர்
தந்திர விடமெய்ச் சுருதிக ளேனைச் சார்புநூன் முற்றுணர்ந் தயல்கா
தந்திரக் கிரியாச் சைவமே நிறுவிச் சாற்றுபஃ றீக்கைசெய் தருளீ
தந்திர வகற்று சிரியர்வாழ் மடங்க டன்புறஞ் சூழுமக் கோயில். (கஉ௩)

திரவிட மாரி யக்கலை தேற்றுஞ் சீடர்தங் குழுக்களொண் டிசை*ய
திரவிட மாரி யக்கலூரி கள்பஃ றேவசமூ கமுற் றெறுபத்
திரவிட மாரி யக்கனு யுணர்த்து சிவனரு ணீதிய ரமர்க
திரவிட மாரி யக்கறு சிகைமன் றகம்புறந் திகழுமக் கோயில். (கஉ௪)

திருவள ரேழொன்பான்றனி தொகையொன் பானென நம்பிமுன் செப்புங்
குருவள ருண்மை நாயன்மார் பூசை கொண்டருள் புரிமடா லயமும்
பொருள்வள ரன்ன சாலைசீர்ச் சாலை புண்ணிய முனிவராச் சிரமந்
தருவளி ருத்தி யானமுன் னுவ தன்புறஞ் சூழுமக் கோயில். (கஉ௫)

ஒருதினம் போலப் பரிதிதேர் தேய்ப்ப வுருவினை யுவன்பரி மிதிப்பப்
பரிவுகூர் நேமி சீதளி நாதற் பணிந்துரைத் தவையொரீஇ யருளா
விரவிதேர் பன்னு ளேகினு மெட்டா வியல்புபெற் றருணிலனந் திறைவன்
திருமுனர்ச் சூழ்ந்து பணியினின் றிடல்போற் றிருமதில் சூழுமக் கோயில்.

மாயையிற் றோன்று மளப்பறு மண்டம் வரும்பொழு தவற்றொடு மலருஞ்
சேயபொன் மேருப் பலப்பல செறிந்து திருத்தகு நிமித்தகா ரணனும்
பாயசீ தளியான் பாங்குநின் றொளிரும் பரிசெனப் பன்மணிப் பரப்போ
டேயபல் லுருக்கள் செறிந்தகோ புறங்க ளெண்கடந் திலங்குமக் கோயில்.

திருமதி லுடனுய்ச் சேணெலாங் கடந்து திகழ்தரு மடுக்குமா ளிகைகள்
கருமணி கண்டன் றிருவிழாக் கொண்டு கருணைதந் திடவெழுந் தருளும்
பருமணி வசந்த மண்டப மிமைபாப் பாவையர் சமழ்ப்புற நடிக்கும்
வருமுருத் திரநற் கணிகையர் நிருத்த மண்டப மோங்குமக் கோயில்.

புரிசைசூ ழகத்தி னிலங்குமீ சான புவியிற்பல் புவனமும் பூத்த
கிரிசைவாழ் கருவி லாதிமண் டபங்கள் கெழுமிய விழுமிய மணியின்
வரிசைசூழ் விமான மாதிபல் லுறுப்பு மன்னிமா லயனரி முதன்மா
கரிசைமா முனிவர் மிடைநிகே தனத்தைக் கவினுறக் கொண்டதக் கோயில்.

மந்திர ரூப துவாதச நாம மருஉந் துதிதரு மரிமகன்சு
மந்திரங் குருசா பந்தெறு காரி வாழ்†தேவ சித்தமென் றுரைநா
மந்திர மாமண் டபமுதற் பணிகண் மன்னுற மயன்முன மமைத்த
மந்திர மடுத்த வடதிசை மேவி வயங்குறத் திகழுமக் கோயில். (க௩0)

---

*அதிர விள்தம் ஆரியம் கல்லூரி உபத்திர விடம்ஆர் இயன், கதிர்அவ்விடம் ஆர்இயக்குஅறு, எனப்பிரிக்க.

†காரிவாழ் மந்திரமெனக் கூட்டுக. காரி-வைரவர்.

அலைதரு தளிர்ப்பைந் தழையருஞ் பலர்பிஞ் சரியகாய் நிகரப தார்த்த
நிலையென வபரி பக்குவர்விபரீ தங்கொளு நிலைமைய தேனு
மலைமறை கனியிற் றெளிபொரு ளரிதுள் ளிலகியுய்த் துணர்தர வீச
லுலகினர்க் களித்த நான்மறைச் சாலை யொலிதின மலியுமக் கோயில். ()

ஈசனெம் வாக்கி னெழுமறை போலன் றினிமையே பெயர்கொ டென்மொ
ழியா, னேசினம் மபேதர் வாக்கினு முதிப்பித் திட்டதம் மறைவடித் தெடுத்த
தேசுடைத் தெனவம் மறைக்குறு சுரம்போற் பண்வகுப் பித்தவா திறம்பா
தாசற வோதுந் தமிழ்மறைச் சாலை யரவமீக் கூருமக் கோயில். (கஙஉ)

அகமுற வுலக ரறியொணு நிலைத்தா யரன்பதி யெனல்வெளி மலைபோற்
றிகழ்தரு சமய விசேடநிர் வாண தீக்கையா தியசமக் காரத்
தகை யதிகார சத்திநி பாதர் தாமினி துணர வீசான
முகனிடைத் தோற்று சிவாகம சாலை முழக்கமெப் பாங்குமக் கோயில். ()

வேறு

பரவுசிவா கமங்களினிடை ரொளரவா கமநூற் பாசவிமோ சனபடலத் திரா
றுருத் திரமா, யரியவட நிழற்குரவன் மலர்க்கரத்தின் மேற்று யகிலசிவாக
மத்துணிவா மத்துவி தானந்த, மருவுசித் தாந்தத் தெளிவாய் நந்திபரம் பரை
யின்வந் தொளிர்மெய் கண்டபிரான் வண்டமிழின் வகுத்த, திரமுறு மெய்ச்
சிவஞான போதமுன்னீ ரேழுசிர வணசாத் திரசாலை திகழுறுமக் கோயில்.

வேறு.

ஈசனே பதியாம் பசுக்களென் றிம்ப ரிசைத்தனன் வியாச ரூபத்தா
லாசற யான்செய் தவத்தினு லன்றே னருட்கையா லெடுப்பவு மடியேன்
மாசறு வெரிநி லிருப்பவும் பெறுமில் வடிவினல் வானுல கெவைக்கும்
பேசுவ லெனமா லெழுதலின் மேற்போய்ப் பிறங்குமான் றுவசமக் கோயில்.

முற்துறு சரியா தியசதுட் பாதர் முராரியா தியசுரர் முனிவோர்
தந்திர நிகம பாடகர் நால்வர் தமிழ்மறைச் சிரவணப் பெரியோர்
புந்தியி னினைந்த பெறவரும் புதியோர் போதுதோ றுங்குவந் துவந்து
வந்தனை புரியு நந்திமண் டபமுன் வயங்குறத் திகழுமக் கோயில். (கஙசு)

பிரதமா வரணந் தீசன்மா திரத்திற் பேச்சிறந் தமைந்திடு பெரியோர்
வரதமா வரண நீத்தொளி ருளநான் மறைமுடி யாதியா மகிமா
விரதமா வரணத் திரையமுந் தகித்தோ னிமாத்திரி குமாரியா னடன
பாதமா வரணன் வேவுசிற் சபையெப் பவனமும் விளக்குமக் கோயில். ()

வாதம ஆவரணம், மகிமாஇரதமா, மாபாத நடனவரணன் எனப்பிரிக்குக.

சமயமா றவைக்கு மிறைவிசெய் திடுபூ சனைகொளும் பரமனெம் பிரபஞ்
சமயமா றவைக்குஞ் சிதனி நாதன் சார்ந்துவாழ் கருவிலா தியவிஞ்
சமயமா றவைக்குஞ் சிவாகம மோர்ந்த சான்றவர் விரும்புமண் டபபுஞ்
சமயமா றவைக்கு ணப்பல பணிக டயங்குறப் பொலியுமக் கோயில்.(கஙஅ)

பிரபஞ்ச மயம்மாற, விஞ்சமயம்மாறு அவைக்கும், புஞ்சம் மயம் மால்தவு
ரைக்குணம், எனப்பிரிக்குக.

கருத்தரு விடைய வாதனை யகற்று கண்ணுதால் கமழ்கொன்றை யெனப்ப
கருத்தரு விடைய வாதனை யகலங் காட்டிவீற் றிருப்பவ மான
கருத்தரு விடைய வாதனை யகத்திற் கண்ணுகன் றேற்கருள் கருணி
கருத்தரு விடைய வாதனை யகமாக் கருணைசெய் திருப்பதக் கோயில். ()

பகர் உத்தருவிடை, மால் நகர் உத்து அருவிடை, கருத்து அருவிடு ஐயம் வாதம் நை எனப்பிரிக்குக.

[யுருவாற்
அடுத்துவேண் டோர்க்கே யநித்தியப் பொருளே யளிக்கும்பொற் றருவினை
கடுத்துள தெனினுஞ் சேய்மையிற் றன்னைக் காண்குநர்க் கும்பவ முழுதுங்
கெடுத்து நித்தியமா சுகமருள் செயலாற் கிளர்ந்தவத் தருவினை மிகக்கீழ்ப்
படுத்துமே லோங்குஞ் சுவன்னக விருக்கம் பச்சிமத் திலகுமக் கோயில். ()

தலவிருக்ஷம்.

அரக்கர் மாமுனிவ ரசுரரே னையரா லரிட்டம்யா தியாதுறுங் கொல்லென்
றிரக்கமுந் தயரு மச்சமு மல்லா வின்பிலற் பாயுள்வேந் தமரும்
விருக்கமுஞ் சருவ சத்திமா னித்தன் விமலனுஞ் சதாசிவன்மேவு [விதழி.
மிருக்கையா மெமக்கு மேலுற லெவனென் றெழுந்துபோய்த் தாழ்த்து மவ்

வியத்தமவ் வியத்த மாகிதா ரகத்தின் வீற்றிருப் பவன்சிவ னென்று
வயத்தகு சுருதி யுரைத்திடு மதிரி சியத்தினை மாநிலத் தெவர்க்குந்
தியக்கற விட்ட விலக்கணை யாகத் திரிசிய முறத்தெளித் திடல்போ
னயத்துணர் சூழ்ந்து பூவுற ஞான்றந் நாதன்மாட் டிலகுமவ் விதழி. (கசஉ)

நிகழ்மறை புகலத் துவிதவாக் கியத்தின் செம்பொரு டெரியுர னின்றி
யகமிகு மவிச்சை யாற்றிரித் துணர்வார்க் கன்னது மமலமா மோக்கத்
தகைமையு நிதரி சனத்தினு லுணர்த்தா சாரியன் போன்றதா தளர்ந்து
நகைமது நுகர்ந்து களியளி யினஞ்சார் நாண்மலர் பொதுளுமவ் விதழி. ()

சிதளீசன். (வேறு)

தலத்திறுயர் திருத்தளியான் சததமனத் திருத்தளியான்
பிலத்தமர்மா திடப்பணியான் பிணியெமைத்தோய்ந் திடப்பணியா
னிலத்தினயர் கனவிடையா னினைப்பினுஞ்சேர் கனவிடையான்
கலத்திறுற கங்கையினன் கமலசிவ கங்கையினன். (கசச)

மணிப்பணியா மாசுணத்தான் வண்டவள மாசுணத்தான்
கணிப்பகன்மெ யம்பரத்தான் கருபமணி யம்பரத்தா
னணிக்கைமலை யங்கிரியா னடியவர்க்கீ யங்கிரியான்
றணிப்பில்பகை திருத்தலத்தான் சார்ந்துபணி திருத்தலத்தான். (கசரு)

மெய்யாகிய அம்பரத்தான். அம்பரம் சிதாகாசம். கருபமாகிய அம்பரத்தான். கருபம்—திசை. அம்பரம்—வஸ்திரம். பகைவரைத் திருத்து அலத்தான். பலராமனுடைய விட்டுணு.

வேணியிறுற் கந்தரத்தன் விடமருவு கந்தரத்தன்
காணயில்வேற் கந்தரத்தன்கழிதலையா கந்தரத்தன்

மாணகரங் கந்தரத்தன் மாண்மையிலங் கந்தரத்தன்
பேணுவில்புங் கந்தரத்தன் பிறங்குதரங் கந்தரத்தன். (கசசு)

நாற்கந்தரம் நாலுமேகம். கழிந்த தலைமாலைகளை மார்பிற்றரித்தவன். மாண் நகர்அங்கு அந்தரத்தன் இலங்கு அம் தரத்தன். வில்லாகிய புங்கம் தரத்தன். தரம்-மலை. தரங்கம் தரத்தன், தரம்-சிரசு

தறைபுகழிச் சீதளியான் சார்ந்துறையிச் சீதளிதான்
மறைமுழக்கின் வாணியமர் மலர்மகன்றன் னுலாகு
நிறைகமலை யுறைதலினு னெடியன்மணி மார்பாகு
மிறைவியமர்ந் திடுதலினு லீசனிடப் பாலாமால். (கசஎ)

வேறு.

மையேந்து மணிமாட மதுரைநகர்ச் சதுரன் மருவுபழி யஞ்சியசுந் தரநாதன் வாய்மை, யெய்யேந்துன் பறப்புரிந்த லீலையறு பாணன் கிடையொன்ற னிப*னை வெழின்மறை யோன்பதியாய்த், துய்யேந்† துய்த்தருளுபரஞ்சோதிமுனி வரன்முன்சொல் லாடற்புராணமதிற் றெரல்லுலகம்போற்றச், செய்யேந்து திருப்புத்தூ ரென்றுவிதந் துரைத்த சீர்த்திமிகப் பெற்றுளதிச் செல்வளம் பதியே. (கசஅ)

தீங்கரிய வெங்கள்விம்மு வெறியார்ந்தசோலை திங்களொடு திளைக்கின்ற திருப்புத்தூ ரென்றுந், தேங்கொள் கொன்றை திளைக்கின்ற திருப்புத்தூ ரென்றுந் திகழ்நெய்த லாம்பல்கழு நீர்கண்மலர்ந் தெங்கு, மோங்குசெய்கண் மல்குபுத்தூ ரென்றுமடை மைஞ்ஞையொழியாது தெருவுதொறு முலாவு புத்தூரென்றும், பாங்கொடிவை முற்பலவாய்க் காழிவரு சேயின் பவளவாய்த் தமிழ்ச்சுருதி பரசியதிப் பதியே. (கசகூ)

திருந்துவயல் புடைதழுவு திருப்புத்தூ ரென்றுந் தேோரு நெடுவீதித் திருப்புத்தூ ரென்றும், புரிந்திடுபைம் பொன்காட்டக் கடிக்கொன்றை மருங்கே புனக்காந்தள் கைகாட்டக் கண்டுவண்டு சொடைமை, தெரிந்திணிசைத் தென்காட்டு திருப்புத்தூ ரென்றுஞ் செப்பிவைமுற் பற்பலவாய்த் தீவினையே னுளத்தும், பரிந்துமலர்ப் பதமளிக்கும் வாகீசப் பெருமான் பவளவாய்த் தமிழ்ச்சுருதி பரசியதிப் பதியே. (கரு0)

வேறு.

இன்னவா பரசி யுலகமெய் யுணர்ந்தே யின்பவீ டெய்துவா னுளத்திற்
றுன்னவா வுந்த நிலம்புரி தவத்தாற் குலிதன் னுணையா லவன்றன்
மன்னவா ரருளே யுருக்கொடு வந்தோர் வழுத்துமிந் நவபுரி மகிமை
பன்னவா யனந்தம் படைத்துள வனந்தன் பல்லுக மொழியினும் பலியா.()

திருநகரச்சிறப்பு
முற்றிற்று.
ஆ திருவிருத்தம்-கoஅ.

* ஒன்றனப்பன்— ஒன்றுக்குக் காரணன்.
† துய்வம்—சுத்த இன்பம். எம்கடைக்குறை.

# புராண வரலாற்றுச்சருக்கம்.

வேதநெறி வாயிதெனை விரிந்தமையி னளந்துணரு மேதை யில்லார்
பூதர்பலர் வைதிகசை வத்தயலிற் புக்குலேதல் பொருது முக்கட்
டாதை கழல் பணிந்துரைத்தப் பானருளா னரிதனமி சத்தால் வந்திம்
மேதியின் மறைநான்காய் விரிவகுத்துப் பெயர்வேத வியாச னென்றே.(க)

வேறு.

கொண்ட மாமுனி யாயதன் குருபரன் பாத
புண்டரீ கத்தை மனத்தினுஞ் சிரத்தினும் புனைந்தோ
னண்ட நாயக னமரர்க ணாயக னீல
கண்ட நாயக னருள்வழி யொழுகுமெய்க் கருத்தோன். (உ)

தூய நீற்றொடு கண்டிகை துதைந்தொளிர் மெய்ய
ஞாய கன்றிரு வைந்தெழுத் தேசொலு நாவோன்
மேய தொல்கதை யொன்பதிற் றிரட்டியும் விமல
மாய நான்மறை யாதிமுன் னூலுமாய்ந் தறிந்தோன். (ந)

தான நிந்துள புராணமெய் யன்பினர் தமக்காங்
கான வன்பொடு சென்றுசென் றறைதொழி லதுவே
மான வாழ்வென மனக்கொளு மாண்புறு சூத
ஞான மாமுனி யொருபக லேமிசத் தடுத்தான். (ச)

அப்பெ ருந்தவ னணுகுத றெரிந்தன ரறவோர்
கைப்ப டுங்கனி நெல்லியிற் கலையெலா முணர்ந்த
வைப்பெ னுந்தவ மாமுனி யீங்குவந் தருள
வெப்பெ ருந்தவ மியற்றின மென்றுகொண் டெழுந்தார். (ரு)

எழுந்த மாதவர் யாவரு மெதிர்புகுந் திறைஞ்சி
யழுந்து மன்பொடு மழைத்துவந் தாசனத் திருத்திச்
செழுந்தண் மாமல ரருக்கிய மாதிய திருத்தி
மொழிந்து பற்பல முகமனும் பூசனை முடித்தே. (சு)

முன்னர் நின்றன ரெந்தைநின் வாக்கினின் முளைத்தாங்
கின்ன யந்தரு முதுமொழி யமுதமுண் டிருந்தும்
பின்னு மம்மொழி யமுதமே நுகர்ந்திடப் பெரிதுந்
துன்னு மாசையெம் முளத்தக லாதெனத் தொழுதார். (எ)

அனைய மாதவர் யாரையு மாயிடை யிருத்தி
வினையை வென்றொளி ரந்தணிர் நும்முளம் விரும்பு
மினைய தொன்றல குயிரெலா மிறைசிவ னருள்பெற்
றனைய வின்புறு மேதுவு மாகுமா லதுவே. (அ)

என்ன துன்னர்ந்து மிக்கெழு மிச்சையென் றனையோன்
பன்ன லந்தரு சித்தளிப் பாமனைப் பாங்கின்
மன்று மன்னையை மனத்துவைத் தொருப்படு சமாதி
துன்னி நின்றபின் முனிவரர்ப் பார்த்திது சொல்லும். (௯)

அண்ணன் மாதவீ ரருள்பெறற் குரித்தது வேயென்
றெண்ணு மாக்கதை யொன்றுள தஃதெவ ரேனும்
வண்ண மாண்செவிக் கொளினுடன் மாசெலா மிரிக்குந்
துண்ண மோகமும் போகமு மெளிதினிற் சேர்க்கும். (௧௦)

ஆய மான்மிய மகனிலஞ் சமநிலை யடைய
மேய தென்மலை வீற்றிருந் தருள்புரி மேன்மைத்
தூய மாதவன் முன்னொரு காற்றனைச் சூழ்ந்து
பாய மாதவர்க் குரைத்தன னங்கது பகர்வாம். (௧௧)

என்று கொண்டுமா முனிவிர்கா ளினையமான் மியத்தை
யொன்று முள்ளத்தோ டுவந்தனிர் கேட்குதி ரென்று
நன்று கூறுவான் றொடங்கியே நற்றவச் சூத
வென்றி மாமுனி குறுமுனி யிசைத்தவா விளம்பும். (௧௨)

உலகு போற்றுசா னவிமுத னதிகளி னோங்கிக்
குலவு மாண்கொள்கோ தாவிரி நதிக்கரைக் குழுமி ...
யிலகு யோசனை யாறைந்தி னெல்லைத்தா மிடங்கொண்
டலகி லாவளஞ் சால்வன மொன்றுள தறவீர். (௧௩)

இருது வாறுமொவ் வொன்றிற்கே யுரியவென் றியைந்த
வரைகொள் கோடுநீர் நிலங்கொடி யாவுமவ் வரம்பின்
றிரவு நண்பகற் போதுமெப் பருவத்து நீங்கா
துரிய மென்மல ராதிகொண் டுறுபல முதவும். (௧௪)

சிறக்கும் கந்தமூ லங்கடேன் றிகழ்கனி யாதி
நிறைத்த வவ்வனத் துறுபகை நீங்கிமா வாதி
யறத்தின் மேவுறுங் கலிப*யா டோபந்தூர்ப் பிச்சம்
விறக்கும் பாவனோ யாதிதன் பொழிக்குமவ் விபினம். (௧௫)

நிலம்ம் விளையுநீ வாரமுன் றும்பயிர் நிலவும்
புலம்ம் விளையுமா முனிவர்வா ழுடசங்கள் பொலியும்
பலம்ம் விளைமகத் தமரர்தங் குழுவிதம் பல்கு
நலம்ம் விளையுநான் மறையொலி யாங்கணு நவிலும். (௧௬)

*ஆடோபம்- ஆடம்பரம்அது ஈண்டு மிகுதி.

அரனை யொத்தான் முனிவரா ராலயஞ் சூழ்ந்து
விரியும் பன்மல ரங்கையி னெடுத்துமேற் றூமம்
வரமுறப் புனைந் தளித்துவண் மலர்த்தலை வணங்கிச்
சரியை யாளரைப் போன்றன பூருக* சாலம். (கஎ)

நனைய ளாவிய மகரந்த கந்தநாண் மலர்கள்
கனிக ளாதிதேன் மஞ்சனங் காட்டியங் கிற்றி
லினிய வோமது மத்தளி யெழத்திகழ் தருக்கள்
புனித பூசனைக் கிரியைசெய் மாக்களைப் புரையும். (கஅ)

ஏக மேவுகான் மீதெழுந் திளந்தளிர்க் கனன்மே
லாக மாமதி நெக்கபுத் தமுதென வலர்த்தேன்
மீக மழ்ந்தொழு குறவரா னுருக்கண்டு விமல
யோக மாக்கள்போ னிரந்தபல் விருக்கமங் கோங்கும். (ககூ)

அலர்க ளாதிதம் முறுப்பினை வேறுசெ யகிதங்
குலவு நீர்தரு மிதம்புரி குஙரெனக் குறியா
துலகில் யாவர்க்கு நிழலளித் திருவினை யொப்பி
னிலவு ஞானியர் போன்றன நிகழ்தரு நிகாம்.† (உ0)

இன்ன வாகிய பல்வள மிலையுமிவ் விபினந்
தன்னின் மாதவர் கருக்கர்சா பாவிகுண் டினரே
மன்னு றுங்கௌ தமர்முத லினர்மருஉ மவையி
னன்னர் மாநதி சேர்கட லுண்டரு ளுதன். (உக)

விந்த மால்வரை தனைக்காத் தடக்கியவ் வீறு
சிந்து மாதவச் சிந்துமா முனிவரன் சேர்ந்தான்
புந்தி யார்வமுன் பெருகநேர் புகுந்தடி வணங்கி
யந்த ளுளராங் குவகைகூர்ந் தாசன மளித்தார். (உஉ)

ஆய பாத்திய மருக்கிய மாசம னீய
நேய மோடளித் தனையர்நற் றுதிசெய நிமல
நாய கற்பொருங் குறுமுனி குசலநேர் நயந்து
வாய வன்பினுன் மகிழ்வித்து வினவுற வகுப்பார். (உங)

முனிவர் புங்கவ காசியின் முத்தமண் டபத்தி
லினமி லங்குமா முனிவர்கேட் டுவப்புற வினிதாண்
டனக சோமசுந் தரனென்று மமர்ந்திருந் தருளும்
புனித வாலவாய் மாண்மிய மாதிநூல் புகன்றாய். (உச)

நின்ன தானன மதியமு தெனுமுறை நிறையக்
கன்ன பாகமார் தரநனி மாந்தியுங் கருத்தி

---

* பூருகம்—மரம் † தருநிகாம்—மரவரிசை.

லின்று மாதர மமைந்தில தாதலி னெந்தாய்
நன்னர் மாக்கதை மீளவுங் கேட்பது நயந்தாம். (௨௫)

பாரி லேழ்நடத் தலங்களின் மகிமைமுன் பகர்ந்து
தேரு மன்னவற் றென்றதா யுயர்ந்திடுந் திருப்புத்
தூரின் வைபவ மந்தண மெனச்சிறி துரைத்தா
யாரு மங்கதை முழுதுமின் றருடியா லைய. (௨௬)

என்ற ரைத்தனர் கேட்டகத் தியமுனி யியம்பு
மன்ற லத்தல மகிமைமற் றுள்ளவா வகுத்த
லென்ற னலியை யாதுணர் வானிறை சிவனே
நன்று கேட்டனி ராதலி னறிந்தவா நவில்வாம். (௨௭)

வேத மாண்பொருள் வியங்கியம் வெளிப்படத் தோன்ற
நாத னருள் வழிப்புரா ணங்களீ ரொன்பான்
மேத குந்திறத் துதித்தன வவற்றினுண் மேலா
மோது காந்தமு விரண்டுசங் கிதைகளை யுடைத்தால். (௨௮)

போதன் மாதவன் சங்கரன் புகல்சனற் குமாரன்
சூத னாதவன் பெயர்த்தவவ் வாறுமத் தொகையு
ளாதி சங்கர சங்கிதை தனையுமைக் கருளும்
போத வண்மடி யினிலெமை யாளுடைப் புனிதன். (௨௯)

ஆய சேந்தனெங் குருபரன் வீற்றிருந் தருளித்
தூய சங்கிதை யன்னது கேட்டனன் றெழுது
நேய மிக்கெழிப் பாவமென் பாலரு ளிறைவாற்
சேயெ னக்குரை செய்தனன் கேட்டவா தெளிய. (௩௦)

அனைய சங்கிதை யினையுல கின்புற வறைந்தே
னெனது நாமமும் பெற்றதச் சங்கிதை யிதனு
ளனிது லக்குமா நிருத்தல மான்மிய நலந்தா
னினிது சொற்றிடப் படுந்தொகை வகைவிரி யிசைப்பாம். (௩௧)

காண்ட தூர்தலந் தீர்த்தமே மூர்த்திநற் கைலை
பூண்ட மேன்மைகள் கொளரிபேர்ப் பொதுநடந் திருப்பேர்த்
தாண்ட வம்வடி கன்கதை சிதளித் தகைமை
மாண்ட வாநிசந் திரன்கதை யெனவொன்பான் வகையாம். (௩௨)

இவ்வ கைப்படு மொன்பதிற் றிருஞ்சிறப் பமைந்த
தெய்வ மான்மிய நிறுத்தவா விரித்துரை செய்து
மெவ்வ முற்றெருந் திரித்தரு ளெங்குரு நாதன்
செவ்வ யிற்படைக் குமரன்முன் செப்பியாங் கென்றான். (௩௩)

புராணவரலாற்றுச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௩௪௧.

## தலவிசேடச் சருக்கம்.

தேச மிக்ககோ தாவிரி தீரத்தின்
வாச மிக்குறு மாதவிர் கேண்மினென்
றீசன் மிக்கமர் சீதலத் தெய்துசீர்
நேச மிக்க முனிவ னிகழ்த்துமால். (க)

சொன்ன மால்வரைச் சூழல வாசியின்
முன்னு நாவலந் தீவினின் மூவகைத்
துன்னு கண்டத்தொன் ருகித் துலங்குசீர்
பன்னு மேன்மைப் பரதகண் டத்தினில் (உ)

பாண்டி நாட்டிற் பரவுறு மாலவாய்க்
கீண்டு மூன்றரை யோசனை யீசன்பேர்
பூண்ட திக்கின் மனோகர பூமியாய்
நீண்ட கொன்றையங் கான நிலவுமால். (ங)

எல்லை யொன்றரை யோசனை யெய்திடு
மெல்லை யின்றும்பர் யாவரு மேத்துறு
மெல்லை யில்லுயிர்க் கின்னுயி ராஞ்சிவ
னெல்லை யில்விழை வெய்துறு மிவ்வனம். (ச)

இன்ன மால்வனத் தெய்துஞ் சிறப்பினோர்
முன்ன னேகப வங்களின் முற்றிய
துன்ன கம்முழு தாந்தொலைத் தின்பமே
மன்னு வாரிதன் பேர்முன் னழுத்துவா.ம். (ரு)

வேறு.

பிரம தேசமே திருத்தலந் திருப்புத்தூர் பேணுஞ்
சருவ சித்திமா நகர்சம்மி யாககாந் தார
மருள்செய் தென்சிதம் பரத்தொடு மாரக்கு வதக்கான்
கிருத மாலையங் கானெனப் பெயர்பல கிளப்ப. (சா)

வேறு.

எண்ணிலாப் புவனத் தியாவரு மென்று மிதயமுன் னெருப்பட விறைஞ்சு
மண்ணலார் கைலை மலைதணந் துலக மளித்தரு ளன்னையாங் கௌரி
யுண்ணசை யூக்கப் போந்தது மவண்மற் றாகபூ டணனருட் குறியை
மண்ணுறு மனந்த கோடிசூ ரியரின் வயங்குறக் கண்டிறைஞ் சியதும். (எ)

மூவுல களந்த வீரடிக் குரிசின் மொழிந்தவா வினவிமொய் யளிசூழ்
பூவரு மடந்தை யடைந்தது மீசன் பூசனை புரிந்தது மென்றுந்
தாவில் சீதளநீர் நளினத் தி னமர்ந்து சபரியை புரீஇத் தரிப்பதுவு
மேவசீர் வடுகன் காசிசீ சைலம் விடுத்துவேள் விளம்ப மேவியதும். (அ)

அன்னவன் யோகவாதனத் தமர்ந்தே யமலனு வரணங்கள் யாவு
முன்னவ னருளாற் புரந்திடும் வரத்தை முற்றுறப் பெற்றதுந் திசையின்
மன்னவர் பேறு பெற்றதும் திருப்பேர் வாவியி னெண்டிசை மாட்டும்
பன்னுறு சோதிச் சயம்புலிங் கங்கள் பாங்குற வமர்ந்திலங் குவதும். (௯)

அன்பொடு மாதி சந்திர வழுதி யமலனுக் கருளிய வாறே
யின்பமீ தூர வாயிரத் தெழுநூ றினையிலா வேதியர் பதிட்டை
தன்பொரு ளீந்து புரிந்தது மிந்தத் தலத்திலென் றுரைப்பர் மாதவத்தீ
ரென்பல வுரைத்த லனந்தனும் விரித்தாங் கியம்புத லரிதரி திதன்சீர் (௧௦)

நித்தலும் வேதம் யாவுமுற் றொடுங்கு நின்மல பூமியென் றுரைக்குஞ்
சித்திசெய் காசி யருகிலந் தருவே திகையில்வீ டொன்றையே குறித்த
வித்தக மறையோ ரத்தல மிகந்து விளம்பரும் விருப்பின ராகி
யித்தலம் வதிவா ரெனிலிதன் மகிமைக் கீதலாற் சான்றுவே றென்னே. ()

வேறு.

இத்தலம் பூதலத் திருப்ப வீங்கிதை
வைத்தலந் தருதலம் வேறுவாஞ் சித்தல்
கைத்தலத் தமுதகா சினித் தலத்தினி
லுய்த்தலந் ததன்புற நக்க லொக்குமால். (௧௨)

ஏனைய தலத்திருந் தியற்று மாதவ
மேனைய தலத்திருந் தியற்றுந் தோத்திர
மேனைய தலத்திருந் தியற்றும் வேள்விக
ளேனைய தலத்திருந் தியற்றும் பூசனை. (௧௩)

ஏனைய தலத்திருந் தியம்பு மந்திர
மேனைய தலத்திருந் தீயுந்தா னங்க
ளேனைய தலத்திருந் தியற்று நல்லற
மானசி கலத்திலொன் றனந்த மாகுமால். (௧௪)

கவின்கொ ளித்தல மாண்கொளரி தாண்டவ
முவர்துசெய் தானமென் றும்பர் மாலய
னவர்தெற முனிவர்மா நுடர்க ளாங்குதம்
பவர்தெற வதிந்துபல் பலனு மெய்துவார். (௧௫)

இத்தல நினைவர்சா லோக மெய்துப
வித்தலத் தடைவர்சா மீப மெய்துப
வித்தலத் துதிப்பர்சா ரூப மெய்துப
வித்தலம் வதிவர்சா யுச்சி யத்தமே. (௧௬)

சிலைக ளெலாஞ் சிவலிங்கந் திகழ்தருநீர் நிலைகளெலாஞ் சிவதீர்த் தங்கள்
கலைக ளெலாஞ் சிவஞான மாந்தரெலா முருத்திரர்கள் காணுஞ் செய்கை

நிலைக ளெலாஞ் சிவபணிகள் விருக்கமெலாங் கற்பதரு நிகர மாடத்
தலைக ளெலா மிப்பதிபூ லோகசிவ லோகமிது சாத மாமால். (கஎ)

[நிற்கு
எனைத் துணைய மகிமையும்வாய்ந் திலங்குதலம் பொருளுயிர்முன் னியங்கி
மனைத் தினுக்கு முபபதமா யவ்வவற்றின் மகிமையெலா மமையத் தன்னுண்
முனைத் துறுபல் பொருள்காட்டி முந்துபெய ரெதுவதுவே மொழியியற்பே
ரெனத்துதிப்ப விளங்குறுமித் திருத்தலத்தின் மகிமையெவ ரிசைக்கவல்லார்

தலவிசேடச்சருக்கம்
முற்றிற்று.
ஆ திருவிருத்தம் ·நடுகூ.

---

# தீர்த்தவிசேடச்சருக்கம்.

---

திருத் தலச்சிறப் பென்றனு
லுரைத்த லாவதன் றுறுவர்கா
ளருத்தி யோடவ ணமருமா
திருத்த மேன்மையைச் செப்புவாம். (க)

மூத குந்தவ முனிவிர்கா
ளாதிநா ளமலன் றன
பாத மீது பணிந்தனர்
பூத நாதர்கள் போற்றுபு. (உ)

உலக மெங்கணு முள்ளவா
யிலகு தீர்த்த மியாவையுங்
குலவி யிவ்விடைக் கூடிநின்
றலகிலா நல னுடிஞேர். (ங)

பாலளிக் குறும் பண்பதிவ்
வேல்லை யென்றுளத் தெண்ணுபு
ஞால மூழ்கி நயம்பெற
வால மார்களத் தண்ணலே. (ச)

வாவி யொன்று வகுத்தியாற்
ருவி லித்தலந் தன்னிடை
மேவு மாறென வேண்டவப்
பாவை பாகன் பரிந்துளம். (ரு)

குலவே லினிற் குன்றுதா
னேல்வை யொன்றங் கியற்றுபு
ஞாலும் வேணிநற் கங்கைநீர்
மேலு மாங்கு விடுத்தனன். (சா)

அந்த வேதவி னத்தடங்
கந்த மார்சிவ கங்கையென்
றிந்த மூவுல குந்தொழச்
சுந்தரப் பெயர் தன்னிற்றால். (எ)

ஆய மாசிவ கங்கையி
னேய மார்தர னேர்புநீ இத்
தோயு மாந்தர்க டுன்பெலா
மாய வின்பொடு மன்னுவார். (அ)

இத்தடத் திணை யெண்ணின்மற்
றெத் தடத்தினு மின்றிஃ
தூத்த மத்துயர் தீர்த்தமே
யத்த ஞீணமெ யறவிர்காள் (கூ)

அன்ன வாவியி லமரரும்
பன்னு பாதலர் பிருகுவு
நன்னர் மூழ்குபு நலனெலா
மன்னி வாழ்ந்தனர் மாதவீர். (கo)

யானு மப்புன லெய்துபு
மான வன்பின் மகிழ்ந்துதோய்ந்
தான வெண்ணமற் றாக்கியே
மீன மின்னல மெய்தினேன். (கக)

வேறு

இந்த மாகலந் சான்றமா தீர்த்தந் தோய்ந் தியந்துஞ்
வந்து வந்து சரா சராசர சீவர்கள் வானோர்
தந்நிலைக் கொடு பணிந்தியே தம்பணி கேட்ப
முந்து மான்சிவ கணத்த ராய் வாழ்குவார் முனிவீர். (கஉ)

நன்னி னோக்குறா நிலலேதம் மெய்புற கலத்தேர
ரன்ன வார்சிவ கங்கையை யங்கையா லள்ளி
யுண்ணு வார்படி குநர்பெற பலமொன்றக் கொன்றா
னென்னின் மேம்படும் விரிப்பதெ னுண்ணறி வினர்க்கே. (கந)

தேச மிக்கெழு மப்புன றேய்ந்தனன் றிருத்த
மீச னார்திரு முடிமிசை பெடுத்தினி நாட்டு

நேசர் தாம்பெறு பலத்தினை நிகழ்த்தலென் னிமலன்
வாச நாண்மல ரடியவர் காணியாம் வாய்மை. (கச)

இன்னு மத்தலத் திலங்குறு மருட்கௌ ரீசன்
றன்ன துத்தர திசையினிற் கௌரிமுன் சமைத்த
மன்னு தீர்த்தமொன் றவடிருப் பெயரினல் வயங்கும்
பின்ன ரத்தடங் கமலைபாற் சீதளிப் பெயர்த்தாம். (கரு)

ஆய தீர்த்தத்தெண் டிசையினு மாதிரத் தந்திபர்
தோயந் தோய்ந்தனர் வலியுறீ இத் தலங்குற வெவ்வே
றூய மாபலன் மூழ்குநர்க் களிப்பன வாக
வேய தம்பெய ரீனயநா லிரண்டிற்கு மிசைத்தார். (கசு)

எண்ணு மப்பெருஞ் சீதளி வாவிநீ ரென்னும்
வண்ண வெங்கனல் பருகினர் தீண்டினர் மனத்திற்
கண்ணு கிற்பவர் படிந்தவர் கண்டவர் தம்பா
ணண்ணு பாவதூ லத்தையெஞ் சாவகை நசிக்கும். (கஎ)

அன்ன தீர்த்தத்தின் மகிமைதா னளப்பரி தெவர்க்கும்
பின்ன ரோதுதுஞ் சிற்சில விரித்தெனப் பெருநீர்
முன்ன ருண்டமா முனிவரன் முத்தமிழ் முழங்கு
நன்னர் மாமலயத் தமர்குரு பரனவின் றூன். (கஅ)

தீர்த்தவிசேடச்சருக்கம்
முற்றிற்று.
ஆ திருவிருத்தம் - நஎஎ.



## மூர்த்திவிசேடச்சருக்கம்.

---

பவகங்கை நீத்தரிய பரமசுகம் பெறநினைவோர் படியுந் தெய்வச்
சிவகங்கை சீதளிமா தீர்த்தநலஞ் செப்பினமேற் சிறந்த நோன்மைத்
தவகங்கை யூர்ந்திடுமா லயற்கரிய பிரானிமவான் றன்பா லன்றுற்
பவகங்கை யேற்றமுடிப் பரனருட் குறி மகிமை பகாவா மன்றே. (க)

அகண்டைஇக சுயம்பிரகா சப்பொருளாய்ச் சச்சிதா னந்த மாகித்
திகழ்ந்துயிருக் குயிராய சிவமுலகு புத்திமுத்தி சேர்ந்து வாழ்வா
னகங்கொடுமா சிருட்டியா ரம்பமதிற் கொன்றை துன்று மடவி தன்னி
லகந்தொருபொன் னிதழியடி யொளிமயமா யருட்குறியா யுதித்த தாங்கே

அவ்விதழி யடியின்மூலா த் தருண்மூல லிலிங்கந்தன் கிளைக வாகச்
செவ்விதின்யாம் பூசித்த சிவக்குறியொன் றுயீச திசையின் மேவும்

தெய்வவருட் குறியொன்று மிவையுறுமத் தளிப்புறம்பிற் றிகழு ஞானப்
பொலிவிகர் சிதளியின் பச்சிமத்திற் குறியொன்றாய்ப் படர்ந்து மேலும். ()

உலகிருநான் கினிலெண்கோ டொப்பவருட் குறியெட்டா யுலகம் யாவு, மி
லகுமொரா லிடைப்பூத்த வெழில்வல்லி படர்ந்தேற வியைந்திட் டிச்சை
குலவமுகிழ்த் தறிவுநா ளரும்பாகச் செயல்பூத்தெங் குறையைக் காய்த்து
நிலவுமருள் பழுத்துலக மெவைக்குமொரு கற்பகமாய் நிற்கு மாதோ. (௪)

இப்பரமன் றிருநாமம் பிரமதேசப் பிரிய னவபுரீசன்
செப்பரிய கௌரீசன் பிருகுபூ சிதனமல சீத ளீசன்
வைப்பெனலாந் திருத்தலமா நகரீசன் பராபரன்மால் வணங்கு நாதன்
றப்பிதழ்வாய் வசந்தராபூ சிதன்முற் றெழுவழுதி முன்பு தோன்றும். (௫)

சிவமறையோ ரேகேச னென்றுரைப்ப நால்வேதஞ் செப் பனேக
முவமனிலாத் திருநாம முடையநா யகன்றனக்கீண் டோது நாமஞ்
செவிபுகுதப் பெறுமவர்தந் திருவாயாற் செப்புமவர் சிந்தை செய்வோ
ரெவரவர்கண் மூன்றுலகுக் கிறையாகிப் பிறவாத வின்பஞ் சேர்வார். (௬)

எண்ணரிய திருநாமஞ் சிதளியாற் குள்ளனமற் றிசைத்த லென்னு
னெண்ணுவதன் றதுசிற்க வெம்பெருமான் கௌரிநட நவிற்ற லாலே
புண்ணியசைவத் தலங்க ளெவற்றுநவ புரிமேன்மை பொருந்தல் போன்முக்
கண்ணுடையா னருட்குறிக ளெவற்றினுமிக் குறியதிகங் காட்சி மிக்கீர். ()

அப்பரனை யப்பதியி லருச்சித்தோ ரம்பிகைமா லவனி மாது
செப்பரிய சேந்தனறைச் செங்கமலத் திருமானெண் டிசைக்கு நாதர்
குப்புகழ்ச்சி கொளும்பிருகு குசகேசன் குலமறையோர் குழுமு வானோர்
வைப்புறயான் வைரவன்முன் வருசேன மாசுணமுன் வரம்பி லோரால்.

வேறு.

இத்தளிப் பெருமான் றன்னைப்பூ சித்தோ ரிறைஞ்சி நின்று
பத்தியிற் கனிந்து முன்னர்ப் பரவுநர் யாவ ரேனு
புத்திமுன் றுகர்ந்திட் டிச்சை போகமேற் போக வீற்றின்
முத்தியிற் புற்று வாழ்வர் திண்ணமே முனிவிர் காணோ. (௯)

காலையிற் சிதளீசன் கழலிணை வணங்கப் பெற்றோர்
மேலநான் மறைக ளோது மறமொரா மினிது மேவிச்
சாலுமா தரவின் வாழ்வர் நண்பகற் சார்ந்து போற்றுஞ்
சீல ரெப்பொருளு மேன்மேற் செறிந்தினி திருப்பர் திண்ணம். (௧௦)

மாலையிற் றிருத்தலத் தெம் மாதனை வணங்கப் பெற்றோர்
பாலுறு மின்ப முற்றும் பருகுவ ருத்த யாம
வேலையிற் பணியு மேலோர் விமலனுண் மல ரடிக்கீ
ழேலுற வமர்ந்து வாழ்பே ரின்பமுற் றிருப்பர் மாதோ. (௧௧)

மாலையிற் றிருத்தலத் தெம் வாதனை வணங்கப் பெற்றோர்
பாலுறு மின்ப முற்றும் பருகுவ ருக்க யாம
வேலையிற் பணியு மேலோர் விமலனான் மலா டிக்கீ
ழேலுற வமர்ந்து வாழ்பே ரின்பமுற் றிருப்பர் மாதோ. (கக)

சீதளி நாதன் கோயில் சென்றுமுன் பணிந்து நின்றாங்
கேதமி றுதிகள் பல்வே றிசைக்குந ரெய்தும் பேற்றி
லாதிதன் மலர்வாய்ப் போந்த வாரண மன்பி னோதுங்
காதலர் பத்து நூறு கதித்திடும் பலன்மேற் கொள்வார் (கஉ)

அம்மறை நான்கி னுள்ளு மதிகமா மெசுர்வே தத்தைச்
செம்மைகொண் மனத்த ராகிச் செப்புந ரயுதஞ் சேர்வர்.
பொய்மையி லதனி னுப்பட் பொருந்துசாற் காண்ட மோதுந்
தன்மையர் சாதனா ருயிரமடங் கதிகஞ் சார்வார். (கங)

அருத்திகொ ளன்ன காண்டத் தாற்குறு வணக்கம் வாய்ந்த
வுருத்திர மன்பி னோது முவரொரு கோடி சேர்வர்
கருத்துறு மறைக ளென்னுங் கன்னலிற் கோது நீத்த
திருத்தகு மருளே யாகுந் திராவிட வேத மோதும். (கச)

தொழுதகு மன்பர் பேற்றைச் சொல்லுதற்கியானு மாற்றேன்
முழுதுணர் பாமன் றானு மொழிவனே லளவின்றென்பான்
கெழுதகு முனிவிர் கேண்மின் கிடைத்துமுன் றொழுதுமென்ன
வழிவாத் தொடங்கு வாரும் வந்தடிபணிந்தா ரொப்பார். (கரு)

இன்னன புரிவார்க் கெந்தை யிங்ஙன மருளல் சொற்றாம்
பொன்னமர் தலத்தெம் மீசன் பூசோப காரணமாகப்
பின்னுறு தூப தீப பாசன மண்ணி யிழைத்த
மின்னுபொற் குடங்க ளாட்டும் வியன்மணிக் கலச மேலும். (கசு)

இன்னிசைக் கண்டை யாதி யியம்பல வெழிற்பொன் னாடை
யின்னிரைக் கலங்கள் சொன்ன வில்வமா லிகைமுத்தாரங்
கொன்னுறு மணிசெய் கண்டி கோளகை குண்ட லங்க
ணன்னர்மெய்க் கவசந் திண்காழ் நறுங்குற டரிஞ்சு தேய்வை. (கஎ)

ஆதிய வளிக்கு மன்ப ரலர்பல தொடுத்த லங்கல்
போதுதோ றமையச் சாத்தல் புலரியி லெழுந்து மூழ்கிச்
சோதனிப் பணிமெ ழுக்குச் சுடர்விளக் கிடங்க டோறு
மேதக விடுத னந்த வனமவை விதியாற் செய்தல். (கஅ)

இவைமுதற் புரியு மன்பர் திருத்தலத் திறைவன் கோயி
னவமுறக் கிலங்கள் போக்கி நவமணி சாத கும்பங்

திவன்சுதை யிட்டி கைம்முற் பொருள்கொடு திருந்தச் செய்து
நவபுரி நாம மேன்மேல் விளவுற நலஞ்செய் மேலோர். (௧௯)

எஞ்சலில் பொருள்க ளாட்டற்கியைபன வன்பி னீந்து
மஞ்சனம் புரிவிப் போர்கள் மெளவலென் முகையின் வான்மை
யஞ்சுவை யோத னம்பற் பலவகை யபூப வர்க்கம்
விஞ்சுற நிவேதிப் போர்க ணறும்புகை விரவச் செய்வோர். (௨௦)

இயம்பல வியக்கு விப்போ ரிரும்பொனுன் மணியாற் செய்த
நயந்தரு திருத்தேர் மீது நல்விழா நடத்து விப்போர்
வியத்துணை யிவர்முன் னுப மெய்த்தொண்டர்க் கெந்தை யீயும்
பயன்றனை யெம்ம னோராற் பகர்தலெங் குணர்வான் மிக்கீர். (௨௧)

வேறு.

இந்தவருண் மூர்த்திநல மின்னுமள வில்லனவென் றியம்ப ஞானம்
வந்தமுனி வரர்தலந்தீர்த் தம்மூர்த்தி நலங்கேட்டு மகிழ்ந்தோ மெந்தாய்
முந்துமைபேர் நடம்புகன்ற யவன்பொருட்டந் நடம்புரிந்தான் முதல்வ
னென்று, லந்தரியாண் டிந்துமுடி யடிபணிந்தென் வினவினளாங் கமல [மூர்த்தி
எவ்விடைதந் தருளினு னெவவகைபி னுவப்பித்தா னெவ்வா றிந்தத்
திவ்வியமா தலம்புகுந்து திருக்கருதன் பேர்நடனந் தெரிசித் திட்டான்
பௌவமுழு துண்டமரர் பயந்தீர்த்த பெருமானே பகரா யென்ன [ரூன்.
வெவ்வமின்மா தவமுனிவீர் கேண்மினென வான்முறையா லியம்ப லுற்

மூர்த்திவிசேடச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௪௦௦.



## திருக்கைலாயச்சருக்கம்.

---

சிலைய மாதவ ரிதிந்தொளிர் செம்பொனன் மேருச்
சிலைய மாதவன் விழியெனக் கொண்டவன் றிருமுன்
மலைய மாதவன் றனிவின விடமிதென் றயர்வான்
மலைய மாதவன் கைலையின் சிறப்புரை வழங்கும். (௧)

மேருச்சிலைசிலை எனக்கூட்டுக. அமா-இடைக்குறை. அம் ஆதவன்
விழி. மலை அமாது அவன்றனை.

திருத்த ருபக ருதிய தேவரெம் முனத்தைத்
திருத்த ருபக னிரங்கெனச் சேர்ந்தபின் றேத்துந்
திருத்த ருபகன் மலரயன் றேடரு மூடிசேர்
திருத்தருபக னிருப்பது திருக்கயிலாயம். (௨)

உளத்தை திருத்து அனுய். எத்தும் திருத்தன் ஆய் அகல் மலர் அயன் தேட அரும் முடி சேர் திருத்தனுய் அகன் எனப்பிரிக்குக. திருத்தனுய் தீர்த்தத்தையுடையனுய். அகன் தன்னிடத்து.

சிந்து மாதவ னுமெனுற் கிரற்குத் திமிரஞ்
சிந்து மாதவன் போலிய றேற்றுவித் துளங்க
சிந்து மாதவன் ஞானவாக் கருள்செயுங் கருணைச்
சிந்து மாதவ னிருப்பது திருக்கயிலாயம். (ங)

சிந்துமாதவன்-குறுமுனி. திமிரம் சிந்தும் ஆதவன் உளம் கசிந்து மா தவல் கருணைச்சிந்து உமாதவன் எனப்பிரிக்குக. மா-ஒருமை அது ஆணவஇருள்

சித்த ரங்கமா றுணர்ந்தரு மறைமுதற் றேர்ந்த
சித்த ரங்கமா லகன்முனி வரர்துதி செயுங்காட்
சித்த ரங்கமார் முடியா னுயிர்க்கருள் செயற்கிச்
சித்த ரஙகமா னிருப்பது திருக்கயிலாயம். (ச)

சித்தர் அங்கம் ஆறு உணர்ந்து, தேர்ந்த சித்தர் அங்க மால் அகல், காட்சி தரங்கம் ஆர், செயற்கு இச்சித்து அரங்கமான் எனப்பிரிக்குக. அங்கமால் தேகவாஞ்சை, அரங்கமான்-சிற்சபையில் நடிக்கும் மகான்.

சிகர மாயிரஞ் சூழ்கன சிமயமுன் யாவுஞ்
சிகர மாயினு மால்பத மாறிசிங் திடினுஞ்
சிகர மாயிருங் கங்கையெம் பிரானருட் செயலாற்
சிகர மாயிருந் தொளிர்வது திருக்கயிலாயம். (ரு)

சிகரம் ஆயிரம்-அனேகமலையுச்சி. கனசிமயம்-பொன்மலை. கனம் பொன். யாவும் சிகரம்-மலைகளெல்லாம். சிகரம் ஆய் இரும்கங்கை-சிரசில் ஆய்கின்ற பெரிய கங்கையைத் தரித்த. சிகரமாய்-உயர்வாய்.

தஞ்சு கந்தாம் புடவியின் வாழுயிர் தமக்கே
யஞ்சு கந்தா விடத்தருண் மாதென வமா
கஞ்சு கந்தாம் வைத்தருள் சிகண்ட னுதோற்
கஞ்சு கந்தா னிருப்பது கைலையஞ்சைலம். (சு)

தஞ்சு உகந்து அரம்-தஞ்சமாக விரும்பிப் பாதலம். தோற்கஞ்சுகம் யானைத் தோலாகிய சட்டை.

காவ லம்பதி நம்பிமா லாதியர் நணுகி
மேவ லம்பதி வுஞற்றிவெள் ளிபத்துற வேண்டப்
பாவ லம்பதி கத்தினுற் பணிந்துசெல் பாற்றுற்
காவ லம்பதி கங்கையன் கைலையஞ் சைலம். (எ)

மேவலம் பதிவு-விரும்புகின்ற பிரதக்ஷணம் வணக்கம். பா வலம் பதிகத்தினல்-ஞானவல்லபமுள்ள பதிகப்பாவினுல். காவு அலம்பு அதி கங்கை. காவுதல்-தாங்குதல்.

திவன்சுதை யிட்டி கைம்முற் பொருள்கொடு திருந்தச் செய்து
நவபுரி நாம மேன்மேல் விளைஞற நலஞ்செய் மேலோர். (கக)

எஞ்சலில் பொருள்க ளாட்டற்கியைவன வன்பி னீந்து
மஞ்சனம் புரிவிப் போர்கள் மௌவல்மென் முகைபின் வான்மை
யஞ்சுவை யோத னம்பற் பலவகை யபூப வர்க்கம்
விஞ்சுற நிவேதிப் போர்க ணறும்புகை விரவச் செய்வோர். (உ0)

இயம்பல வியக்கு விப்போ ரிரும்பொனுன் மணியாற் செய்த
நயந்தரு திருத்தேர் மீது நல்விழா நடத்து விப்போர்
வியத்துறை யிவர்முன் ஞப மெய்த்தொண்டர்க் கெந்தை யீயும்
பயன்றனை மெம்ம ஞேராற் பகர்தலெங் குணர்வான் மிக்கீர். (உக)

வேறு.

இந்தவருண் மூர்த்திநல மின்னுமள வில்லனவென் றியம்ப ஞானம்
வந்தமுனி வார்தலந்தீர்த் தம்மூர்த்தி நலங்கேட்டு மகிழ்ந்தோ மெந்தாய்
முந்துமைபேர் நடம்புகன்று யவன்பொருட்டங் நடம்புரிந்தான் முதல்வ
னென்று, லந்தரியாண் டிந்துமுடி யடிபணிந்தென் வினவினளாங் கமல
[மூர்த்தி
எவ்விடைதங் தருளினு னெவ்வகைபி னுவப்பித்தா னெவ்வா றிந்தத்
திவ்வியமா தலம்புகுந்து திருக்கருதன் பேர்நடனந் தெரிசித் திட்டாள்
பௌவமுழு துண்டமரர் பயந்தீர்த்த பெருமானே பகரா யென்ன [ருன்.
வெவ்வமின்மா தவமுனிவீர் கேண்மினென வான்முறையா லியம்ப லுற்

மூர்த்திசிசேடச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௪00.



## திருக்கைலாயச்சருக்கம்.

---

சிலைய மாதவ கிமிர்ந்தொளிர் செம்பொனன் மேருச்
சிலைய மாதவன் விழிபெனக் கொண்டவன் திருமுன்
மலைய மாதவன் றனைவின விடமிதென் றுயர்வான்
மலைய மாதவன் கைலையின் சிறப்புரை வழங்கும். (க)

மேருச்சிலைசிலை எனக்கூட்டுக. அமா-இடைக்குறை. அம் ஆதவன்
விழி. மலை அமாதா அவன்றனை.

திருத்த ரூபக ருநிய தேவரெம் முனத்தைத்
திருத்த ரூபக னிரங்கெனச் சேர்ந்தபின் றேத்துந்
திருத்த ரூபகன் மலரயன் றேடரு மூடிசேர்
திருத்தரூபக னிருப்பது திருக்கயிலாயம். (உ)

உளத்தை திருத்து அனாய். எத்தும் திருத்தன் ஆய் அகல் மலர் அயன் தேட அரும் முடி சேர் திருத்தனாய் அகன் எனப்பிரிக்குக. திருத்தனாய் தீர்த்தத்தையுடையனாய். அகன் தன்னிடத்து.

சிந்து மாதவ னுமெனாற் சேற்குத் திமிரஞ்
சிந்து மாதவன் போலிய றேற்றுவித் துளங்க
சிந்து மாதவன் ஞானவாக் கருள்செயுங் கருணைச்
சிந்து மாதவ னிருப்பது திருக்கயிலாயம். (ங)

சிந்துமாதவன்-குறுமுனி. திமிரம் சிந்தும் ஆதவன் உளம் கசிந்து மா தவல் கருணைச்சிந்து உமாதவன் எனப்பிரிக்குக. மா-ஒருமை அது ஆணவஇருள்

சித்த ரங்கமா றுணர்ந்தரு மறைமுதற் றேர்ந்த
சித்த ரங்கமா லகன்முனி வரர்துதி செயுங்காட்
சித்த ரங்கமார் முடியா னுயிர்க்கருள் செயற்கிச்
சித்த ரஙகமா னிருப்பது திருக்கயிலாயம். (ச)

சித்தர் அங்கம் ஆறு உணர்ந்து, தேர்ந்த சித்தர் அங்க மால் அகல், காட்சி தாங்கம் ஆர், செயற்கு இச்சித்து அரங்கமான் எனப்பிரிக்குக. அங்கமால் தேகவாஞ்சை, அரங்கமான்-சிற்சபையில் நடிக்கும் மகான்.

சிகர மாயிரஞ் சூழ்கன சிமயமுன் யாவுஞ்
சிகர மாயினு மால்பத மாதிசிந் திடினுஞ்
சிகர மாயிருங் கங்கையெம் பிரானருட் செயலாற்
சிகர மாயிருந் தொளிர்வது திருக்கயிலாயம். (ரு)

சிகரம் ஆயிரம்-அனேகமலையுச்சி. கனசிமயம்-பொன்மலை. கனம் பொன். யாவும் சிகரம்-மலைகளெல்லாம். சிகரம் ஆய் இருங்கங்கை-சிரசில் ஆய்கின்ற பெரிய கங்கையைத் தரித்த. சிகரமாய்-உயர்வாய்.

தஞ்சு கந்தாம் புடவியின் வாழுயிர் தமக்கே
யஞ்சு கந்தா விடத்தருண் மாதென வமா
நஞ்சு கந்தாம் வைத்தருள் சிகண்ட னகுதோற்
கஞ்சு கந்தா னிருப்பது கைலையஞ்சைலம். (சு)

தஞ்சு உகந்து அாம்-தஞ்சமாக விரும்பிப் பாதலம். தோற்கஞ்சுகம் யானைத் தோலாகிய சட்டை.

காவ லம்பதி நம்பிமா லாதியர் நணுகி
மேவ லம்பதி வுனற்றிவெள் ளிபத்தற வேண்டப்
பாவ லம்பதி கத்தினாற் பணிந்துசெல் பாற்றாற்
காவ லம்பதி கங்கையன் கைலையஞ் சைலம். (எ)

மே வலம் பதிவு-விரும்புகின்ற பிரதக்ஷணம் வணக்கம். பா வலம் பதிகத்தினால்-ஞானவல்லபமுள்ள பதிகப்பாயினால். காவு அலம்பு அதி கங்கை. காவுதல்-தாங்குதல்.

மீத லங்கணன் கணிசெய வெழுதலின் விளைவுற்
றீத லங்கண வயறிகழ் *மகோதையெம் பெருமா
ளோத லங்கண வுலாத்தமிழ் ஞானநூல் கேட்டுக்
காத லங்கண னிருப்பது கைலையஞ் சைலம். (௮)

ஈதலையுடைய வயல். ஓதல் அங்கு அணவு உலா.

சுதி யளித்தன விதழியங் தொடையரன் ஞான
நிதி யளித்தன தருட்கையி னன்பர்க்கு நிகழ்தற்
பதி யளித்தன மனமகிழ் வுறத்தரீஇப் பரம
கதி யளித்தன னிருப்பது கைலையஞ் சைலம்.

தன இதழி-பொன்னிற இதழி. ஞானநிதி அள்ளி. தற்பதிமனம், அளித்து அன்ன மனம் என்றீரிடத்துங் கூட்டுக. தன்னிடத்திற் பதிகின்ற மனம் அளியையுடைய மனம் என்க. அளித்தன்மையுடைய எனினுமாம்.

அனக னம்பர நிருத்தனம் மேயென வழைப்ப
வினக னம்பர னவனையப் பாவென விளித்தா
டனக னம்பரத் ணெழந்தலை யாற்செலுந் தகைத்தாற்
கனக னம்பர மாறெழுங் கைலையஞ் சைலம். (௰)

அம்பர நிருத்தன் வில் நகன் நம்பரன் ஆகிய அவனை யென்க. தன் அகன் நம்பு ஆற்றெழ. அம்பர கனகன்-பீதாம்பரன்.

என்னை யாளுடை நாவர சிண்டுல குய்வர்ன்
மன்னி மேல்வரக் கருதியே தன்னைமற் றவர்க்கு
முன்னை யாற்றினிற் காட்டியுள் விழைந்தவா முடித்துத்
தன்னை நாமமப் பதிக்கரு டகையைதச் சைலம். (௧௧)

கரிய கண்டன தாளையாற் கடிதுவந் தழைத்துப்
‡பெரிய தேவருட் கொடுபுகுஞ் சேரலர் பிரான்சொ
லரிய நான்மறை யாகமத் துணிபொரு ளமைந்த
திரு வுலாத்தமிழ் மணநனி யுலாவுமச் சிலம்பு (௧௨)

பரவை கேள்வர்சென் னெறியின்முற் பகர்ந்தருள் பதிகச்
சுருதி யாங்கணும் பன்முறை துதிக்குந ரிசைகேட்
டரவ மாதியு மசலமாய்த் தன்மயமாகி
விரவு தன்குண மடுத்துற விளங்குமவ் விலங்கல் (௧௩)

சிறிது பாணித்த மாலையுங் கரியவ னெனச்செய்
திறுதி யாற்றமுன் னடர்விடத் தினையெதிர் காத்திற்

---

* மகோதை-சேரர்நகரம்

‡ பெரியதேவர்-திருநந்திதேவர்.

குறுகி யேற்றரு ணம்பிரா னெனமுதற் சொடுசொன்
மறையின் வாய்மைசாற் பதிகமொன் றுடையதம் மலையே. (கச)

கச்சி யோற்றமர் மாற்கா னுரைத்தவா கருத்தி
னிச்சை யாற்சிவ ரூபமீங் தவ்வுல கேற்றுஞ்
செச்சை மாலைவேள் சௌணியர் சிகாமணி செப்பும்
விச்சை வேதவாய்ப் பதிகமூன் றுடையதவ் வெற்பு (கரு)

இருந்த வாறடிப் பெருவிரல் சிறிதிறை யூன்ற
முரிந்த ராவணற் குய்வழி மொழிவியா சத்தாற்
றிரிந்த மாநிலந் திருந்தவுட் கொண்டிறை செலுத்த
வருந்த கைக்கொள்சொல் வேந்தர்முப் பதிகமவ் வரைக்கே. (கசு)

புடவி யாங்கணு முளசிவ தலமெலாம் புகுந்தா
ளுடைய பிள்ளையு நம்மையா ளரசுமுன் னுரைத்த
திட முறுந்தமிழ் மறைப்பதி கம்மெலாந் திகழத்
தொடரு மன்பொடு போற்றுசீர் படைத்ததச் சுரும்பு. (கஎ)

வேறு.

ஆயிர விரட்டியான மருப்பயி ராவணந்தந்
நாயக மாக்கொண்டென்று நண்ணுவெள் ளிபம்பல்கோடி
பாயவச் சிகரியாண்டும் படர்ந்தன மிடைந்துசூழ்வ
தூயமெய்க் குடிலையேயத் தோலின மாவமாதோ. (கஅ)

வெள்ளிய கரியசெய்ய விழைதகு பசியபொன்மை
கொள்ளிய னிறத்தவின்ன கோடர மளப்பில்கோடி
யெள்ளிய லகன்றசேர்த்தி யிரும்பத னிடங்களெங்கும்
வள்ளியன் மறைகளேயவ் வடிவமாய் வதிவவாங்கண் (கசு)

ஆடகச் சில்லிசேர்ந்த வயிரவச் சினங்களார்ந்த
கோடக நிரைகள்பூண்ட கொடிஞ்சிபன் மணியின்மாண்ட
பீடக விடைப்பதாகை பிறங்குசந் தனம்பல்கோடி
சூடக முன்கைபாகன் றொல்வரை யதன்பாற்சூழும். (உ0)

பதம்பல வொன்றேயாகப் பண்டைத்தவர் பாணிசென்னி
விதம்பல ரரிணமெண்கு வியாக்கிர மறுகுபூட்கை
கதம்படு மரிமுன்போகில் கவிநா ராதியாமற்
புதம்படு முகத்தாரிப் பூமகன் முகுந்தனுறி. (உக)

தேவர்க ளாற்றன்முற்றுஞ் சிந்திடுந் தகையான்ஞேர்
மேவுறு பதங்கண்மாற்ற விதிக்கவோ ரொருவர்வல்லா

ராவயிற் சூழ்வர்யாண்டும் பூதர்க ளனந்தகோடி
போவிலப் பூதநாத ருவகையின் மிடைவர்பல்லோர். (உஉ)

கருமமெய் முனிவர்மாதர் கருவமுற் றகற்றுவான்கொ
ளாறுரு நோக்கிமால்கொண் டிணைவிழைச் சமர்ந்தமாற்குத்
தருநதம் பின்றனென்று சாற்றியாங் கவன்பாற்றந்த
வாறுறு மையன்மேவி வாழ்பத மாங்கோர்பாங்கர். (உங)

பயன்மிகு வடுகன்வீர பத்திர ருகியோர்தம்
வயமிகு பரிவாரங்கண் மருங்குறின் றேவலாற்ற
வியனா சிருந்துவாழும் விரிமணி மாடமேய
நயன்மலி பதங்களோர்க்கு நவிரமற் றதன்கணோர்பால். (உச)

கிரிசையி னமிசமாகக் கிளர்ந்தெழு மனந்தகோடி
வரிசைகொள் சத்திமார்கண் மருவிவா ழிடங்கள்பல்ல
வரியயன் வலாரியாதி யமரர்க ளமரவாங்கண்
விரிதரு மிடங்கள்பல்ல விளங்குமப் பறம்பின்மேவும். (உரு)

இயவுளர் பதினெண்பாலர் யாவருமீண்டி யென்றும்
வியலிடந் தோறுஞ்சூழ்வர் வேட்டன யாவுநல்கும்
பயன்மலி காமதேனுப் பற்பலகோடி தத்தஞ்
சயமிகு விடைகளோடு தழீஇக்கொடு வதிவவாங்கே. (உசு)

கற்பகம் பாரிசாதங் கவின்கொள்சந் தானமிக்க
பொற்புறு மந்தாரந்தான் புகலரிசந் தனப்பேர்
விற்பயில் விருக்கமொவ்வொன் றனந்தமாய் விரிந்துபூத்தவ்
வெற்பில்வந் திரப்பாரின்றி விளங்குவ வளவிலாத. (உஎ)

வரையறன் பாங்குசிந்தா மணிக்குவா லளப்பிலாத
மரைநிதி யளப்பிலாத வளைநிதி யளப்பிலாத
புரையறு பதுமராகப் புதுமணிமுதலவொன்பா
னிரைமணி பரல்களாவத் தலமெலா நிலவுமன்றே. (உஅ)

சாதரும் பத்திறாலர் தயங்குபன் மணிகளாலு
மேதமில் வேர்பாரை யிணர்தளிர் முகையலர்ந்த
போதுகாய் கனிகளாதி புணர்ந்துள தருவனேக
மீதிகழ் வல்லியோடும் விரிபொழி லாகிமேவும். (உகூ)

வருணமா வருக்கைகோளி வழைபுன்னை கன்னிகாரங்
கருமமாண் செருந்திசந்து கணிகுரால் பாடலந்தெங்

ககருசா ரங்களுாழ லசோகுசண் பகந்தமாலம்
புகலுமின் னவைமுன்னுன பொழில்கண்மேற் பொழிலளக்கும். (௫௦)

அகனிலம் பளிங்காண்பொன் ஞன்மரகதச் சோபானந்
தருமா தனத்தாற்சந்து பதிந்துயோ சனைவிரிந்து
வகையபன் மலர்கள்பூத்து வயங்குறு மனேகமேல்லை
புகலரு மமரிதன்னுற் பூரித மாகிமன்னே. (௫௧)

மாலதி சாதிமௌவல் மயிலைமுற் கொடிகடாங்கிச்
சாலதி சுகந்தம்வீசு தண்பொழில் கதிர்கண்மாய்க்கும்
பால்நிவ் வசலமேனும் பரந்தசெம் மணியுந்தானு
மேலதிண் கதிர்விளைத்தவ் விருசுட ரின்மைவீட்டும். (௫௨)

பூத்தரு தாதினுற்பொன் மலையினைப் பொழிநருவி
னீத்தவர் தானைபோர்த்த நிலையினைப் பதுமராக
மாத்தகு மொளியாற்பானு வந்துபோ மலையைமானுஞ்
சோத்தமா லயன்செய்தாங்கட் சூழுமத் துணையில்வெற்பு. (௫௩)

புறம்புசூழ்ந் திடுமண்டத்தும் புதியபல் சுகந்தம்வீசுந்
திறம்புரிந் தரியகாலச் செய்தியா னன்றியென்று
மறம்புரி வாரினுரா மம்பல னளிக்குமந்தப்
பறம்புசூழ் நெறிவிளங்கா பண்ணவர் தமக்குமன்னே. (௫௪)

பத்திரி னடிசூழ்வானோர் பார்த்திழி யருவியோட்ட
மத்தலை நின்றதென்னென் றதிசய முறவவ்வெள்ளிக்
குத்திரம் வேள்விவீதி கோத்திரத் தருகியோடி
மெத்திய வெப்பமாற வீழுத லொழியுமாங்கே. (௫௫)

கோத்திர மதிற்சுவேத குஞ்சர மமுதவாவி
சேத்திர ளமருங்காம தேனுவெண் மாடமாதி
காத்திர விடயமாய பரிசத்தா ற் காண்பதல்லா
னேத்திர விடயமாகப் பிரித்துநேர் காணெணுதால் (௫௬)

முனிவர்பூ வெடுப்பவெட்டா விடபத்தை முரண்மால்யானை
யினிதுகை நீட்டித்தாழ்த்தாங் கெடுத்தபின் விடுத்துச்செந்தே
னனிமழை மலர்பூமாரி நல்குமா வர்த்தமிக்க
புனித சங்காரித்தங்கள் பொழுதொன்றிற் பொழிதல்போல. (௫௭)

மாதவ ருடசந்தோறும் வாலதிச் சாங்கந்தானே
சோதனி யுபாங்கமாகச் சூழ்ந்துவை கறைமுற்காலத்

தாதர முறைப்பாளு மலகிடும் பணிமேற்கொள்வ
பூதர மதனில்யாண்டும் புல்லின மளப்பிலாத. (௩௮)

அலகிடு மிடக்கடோறு மலகிலா நீரக்கமங்கண்
வலனுறு காமதேனு மயசல மதனுனீவப்
பலமுகச் சிலபூந்தாதிற் பன்னிறக் கோலஞ்செய்வ
குலகரி யருவிமொண்டு குழுமினன் முன்றில்வார்ப்ப (௩௯)

கேசரி யருவியாடிக் செழுவுதஞ் செயமெருடங்கு
மாசரி முனிவர்பின்னல் வள்ளுகி ருளர்ந்துலர்த்தற்
காசரி தங்கணிட்டி யத்தொழில் புரிவவோக
டேசரி வெயிலுணக்கு மருத்துவர் சிவணமாதோ. (௪௦)

களிர்சதை யேல்வைகிர நாலையே புரையுமேனு
மொளிதிக முவரியேய்க்கு முற்பலத் தெழுமென்றூதி
னளிகள்செவ் வழிசெய்செம்மை யம்புய மலரினோர்காற்
களிமதக் கடலைநேரும் கவினுமக் கைலைப்பாங்கர். (௪௧)

அமரிபூ ரிதவலந்தை யளப்பில நீரவேலை
விமலன்பின் னுளில்யார்க்கு மளித்திட விழையிற்செய்த்தா
யமருஈம் வரவுதாழ்க்கு மண்மிப்பல் லுருவமாக
வெமைபளித் தருளயாழ்து மென்றவ ணிருத்தலேய்க்கும். (௪௨)

மாடபஃ றடத்தவாளை வாவிவான் கிழித்துக்கற்பஞ்
சாடிமா டங்கடாக்கிச் சலமலர் மணிபொன்வீழ்த்தல்
வாடிலா வர்த்தமேசம் வர்த்தசங் காரித்தங்கள்
பீடுறு புட்கலாவர்த் தம்மழை பெய்வமானும். (௪௩)

வேறு.

பூதிநிறை மெய்யர்விழிப் புனல்பெருக விருந்தசையா
தோதியர்போற் கின்றூர்க்கண் டுறுபகலின் மதிச்சிலைதான்
சேதனீர் பொழிதலென்கொல் செப்புகெனச் சிலம்பிதன்மெய்ச்
சோதியினென் நிறைதருவார் துணிபுணரா வாதிகள்போல். (௪௪)

வேறு.

சரியையே முதல்மூன் றுந் தனித்தனி புவியிற்றுங்கி
யரியசற் சாலோகாதி பதந்தோறு மமர்ந்துவாழும்
பெரியர்முன் னெறியின்மேன்மேற் பிறங்குஈன் னெறியின்மேவி
யுரியநூன் மரபினின்றுங் குவகையிற் பொலிந்துவாழ்வார். (௪௫)

மறைபார யணர்களோர்பால் வாக்கியம் வகுப்பரோர்பா
னிறைபொருள் விரிப்பரோர்பா னேதிநீத் தொழிப்பரோர்பா

லறைபொருள் சிவனேயென்று வளவைபா ணிருப்பரோர்பாற்
பொறையருளடக்கம்வாய்மைப் புனிதமா தவர்கள்பல்லோர். (௪௬)

ஆகம மிருபானெட்டு மையமுன் னுயமுன்றும்
போகமுற் றுணர்ந்துதம்பாற் போந்தவர் பாசசத்தி
யேகுறப் பசுத்துவத்தை யிரித்தருட் சிவமேதாமே
யாகவைத் தருளும்போத காரியர் மடங்கள்பல்ல. (௪௭)

வேறு

முற்றுணர் பரமன் சூத்திர வடிவின் மொழிந்துவேதத்தை யாகமத்தைத்
தெற்றென வுணரும் பாடிய வடிவிற் செய்துற வுயிர்களா மேனோர் [தா
சொற்றநூல் களினம் மறைத்துணி பாய்ந்து துளங்கலெ னவன்செ யாகமத்
லிற்றெனத் தேர்ந்து தெளிகவென் றுரைப்பா ரிவைமுடி வொன்றென வு
[ணர்ந்தோர்.

வேறு.

இத்த குங்கை லைப்புறத் தின்னுமெண் ணிலவா
மெய்த் தகுந்திரு வளனெலாம் விளம்புவா ரெவரே
யத்தனிப் பொருப் பளவதிற் சிருங்கங்க ளவற்றின்
மத்தியிற் றிருக் கோயிலின் வளஞ்சிறி தறைவாம். (௪௯)

ஓது தன்னகத் தமர்ந்தரு ளிறையென வொழியா
வேத னண்டமுட் புறம்பெலாம் விரிந்தா தியதாய்க்
கோதி லாதபல் வகைச்சிலை யுலோகங்கள் கொடிகண்
மீது பின்னு*குஞ் சம்பல விளங்குவதாகி (௫௦)

நீடு வெள்ளொளி யாங்கணு நிறைக்குமக் கைலை
நாடு மேலவர் காட்சிக்கு விடயமாய் நாற்பான்
கோடி யோசனை யுந்நதங் குலவதிற் பாதி
யாடு யோசனை யகற்சிபெற் றுடையதப் பொருப்பில் (௫௧)

பாங்க ராயிர கோடிமா சிருங்கங்கள் பரம்பி
யோங்க நாப்பணிற்† கருணிகா காரமாயுவம
னீங்கி யையிரு கோடியோ சனைவரை நிமிர்ச்சி
தாங்கி யத்துணை யகன்றொரு சிருங்கமன் றயங்கும். (௫௨)

ஆய தோர்சிக ரத்தின தடிசுலாய் முடிகண்
மேய வான்சிக ரம்பல வவற்றடி மேவிப்

---

* குஞ்சம்-லதாக்கிருகம். அது ஈண்டு முனிவர் வாசஸ்தானம்.

† கருணிகை-தாமரைப்பொருட்டு.

பாய சேண்முடி சூழுறப் படர்வன வனேகஞ்
சேய வாங்கவற் றடிமுடி செறிவன வனேகம். (௫௩)

அன்ன வற்றடி சூழ்வன வயற்றடி சூழ்வ
வென்ன விவ்வகை போரோர்சூழ் நிரைமுடி யெவையும்
பன்னு மேன்முடி யளவினிற் பதின்மட லகத்திங்
துன்னி நின்றகீழ்க் கீழ்விரி தொகையின வாகி. (௫௪)

சிகரம் யாவையுங் கணிதநூற் றேர்ச்சியிற் சிறந்தோர்
புகலுமா பெருந் தொகையினு மடங்கிடா புள்ளோர்
தகைய வானவ ரிருவரித் தொகையெனத் தாஙகள்
பகரு வெண்ணின்மால் பிரமன்பேர்ப் பொருள்பிற பரிப்பார். (௫௫)

அவகில் கோடிமா சிகரங்க ளென்னவே யமைந்து
நிலவு மாங்கவை யொவ்வொரு சூழ்நிரை யினமொத்
திலகு மாடக மிரசித மிந்திரன் சிலைகள்
குலவு நீன்மணி மரகதங் கொழுங்கதிர் வயிரம். (௫௬)

படிக மாதிய வடிவமாய்ப் பசிரண்டத் திருளுங்
கடியு மின்னவை யாவினு முயர்ந்துமுன் கழறு
முடியி னின்றதோர் முடித்திறன் யாவரே மொழிவார்
வடிவி னுலது மாணிக்க மயத்ததாய் வயங்கும். (௫௭)

இந்த மாமுடி மேலதா யிலங்குறப் பெவர்க்குஞ்
சிந்தை யாலுநின் றளப்பரி தாய்நெடுஞ் சேண்போ
யுந்து காஞ்சன மாமதி லொளிர்மணிக் கொடுங்கைப்
பந்தி யோடுமச் சிகரத்திற் சூழ்ந்தொளி பரப்பும். (௫௮)

இருங்கவின் கொளு மன்னுத னுச்சியி னிலங்கி
விரிந்த கோடியோ சனைத்துணை வியனிடத் தாகி
வரங்கொள் கோடிமா மேருவின் வயங்குகோ புரநீள்
‡பிருந்த மோடுறு வாயில்கள் பிறங்குவ தாகி. (௫௯)

அணி யுறுத்திய பஞ்சரத் தினங்களா லமைந்த
திணிய வாவர ணங்களோந் திலங்குறு சீர்த்தாய்
மணிகொ ளேமகல் லாரமல் கேமவான் றடங்க
ளிளைமி லேமவுப் யானமுன் னிலங்குவ தாகி. (௬௰)

கருது தாங்கடாந் தனித்தனி வாழ்பதங் களிளு
பிரமடங் குயர் வளந்தவா யிமாசலே யெழிற்றுஞ்

---

‡ பிருந்தம்-கூட்டம்.

சாமுகன் குகன் மாலப னரிமுகேனோர் சதத
மருவி வாழ்வுறு பதங்கண்மன் வயங்குவ தாகி. (௬௧)

கோல மேருவை பொத்தவர் குடிலமா முடியோர்
சூல டங்கதண் டங்கரம் பரித்தவர் துலங்கு
நீல கண்டத்தர் கராளதந் தத்தினர் நிலவும்
பால நேத்திர ராலயாய் நாகவா பரணர். (௬௨)

வேறு.

ஆயபல் பூதநாத ரளவிலர் சூழ்வதாகி
பேயமா வலங்காரங்க ளனைத்துமார்ந் துலகமெல்லாம்
வாயவற் புதங்கொண்மேனி யுருத்திர கணிகைமாதர்
மேய்பல் குழாங்கள்சூழும் விளக்கமிக் குடையதாகி. (௬௩)

ஆன்றவ ரகத்துளென்று மமர்ந்துவீற் றிருப்பதாகிச்
சான்றவர் துதிசாரூபந் தாங்குநந் திரர்பல்கோடி
தோன்றல்கள் சூழ்வதாகிச் சொல்லினும் விரைவினெங்கு
மேன்றுசெல் விமானகோடி யெங்கணுஞ் செறிவதாகி. (௬௪)

கிளருமிந் திரமாநீல ०கிருதசோ பானத்தாலுந்
தெளிவொளி மணிகளாற்சித் திரித்த||குட் டிமங்களாலுந்
தளர்வில்பல் வயிரத்தம்பந் §தத்தகாஞ் சனத்தபித்தி
யொளிசெயு மிந்துகாந்தத் துலப்பில விடங்கத்தாலும். (௬௫)

சவிதிகழ் பதுமராகச் சாளர வரிசையாலு
மிவைமுத லளவிலாம விலங்குறுப் பினங்களாலுந்
தவலறத் திகழ்வதாகித் தாளமத் தளங்களாதி
திவியமா வியம்படுக்கும் பல்கணஞ் செறிவதாகி. (௬௬)

வரையறு மணிவித்தார மண்டபஞ் செறிவதாகி
யுரைசெய்தம் மதிகாரங்க ளொழிந்தவ ரளவிலாத
வரிபிர மேந்திராதி யமரர்சா யுச்சியத்திற்
புரிவொடு சண்டசாமீ பம்முற்றீஇப் பொலிவதாகி. (௬௭)

தந்தொழி னிகழ்ச்சியாவுஞ் சாற்றிய வாங்குச்சார்ந்த
விந்திர னயன்மாலாதி யிமையவர் முனிவரேனோர்

---

० கிருதம்-செய்யப்பட்டது.

|| குட்டிமம்-கற்படுத்தநிலம்.

§ தத்தம்-தப்தமென்னும்வடமொழி தற்பவமாய்ப் புடம்வைக்கப்பட்டவென்னும் பொருடந்தது.

வந்துசா மீபத்தெய்தி யுட்புக வணங்கியேத்து
நந்திமண் டபமுன்மேவி நலம்பெறத் திகழ்வதாகி. (௬௮)

ஆயிர கோடிசோம ரருக்கரோ டங்கியொன்றாய்
மேயின வென்னயாண்டும் விமலதே சுடையதாகி
வாயிக மாதிமூன்றுக் ககோசர வடிவமாகிச்
சேயவென் னறிவுக்கெட்டா வளம்பல செறிவதாகி. (௬௯)

செழுந்திருச் செம்பொற்கோயி லொன்றுசேர்ந் திலங்குமாங்கே
யழுந்துறு மிடரினீங்கி யாருயிர் யாவுமின்பந்
தழுஞ்சிவத் துவப்பேறெய்தச் சகளமா யகளமாகி
யொழிந்திடா தியாண்டும்வேறற் றுறைபொரு ளொன்றுதானே. (௭௦)

திருவரு ளதனாற்பால சந்திரன் றிரைசெய் கங்கை
மருவுறு மிதழிவேணி மாணிக்க மகுடமாண்பும்
பொருவருந் தூவெண்ணீற்றுப் புண்டர நுதல்வனப்பு
மரிதில வனன்முக்கண்ணு மகரகுழை யணிந்தகாதும். (௭௧)

அருமறை யாகமங்க ளாதிமெய்ந் நூல்கணந்தி
திரிபுரைக் குபதேசிக்குஞ் சீர்நிறை திகழ்செவ்வாயு
மரியுறு வெண்மைமாற்றிக் கருமையன் றளித்தவாலம்
விரவுறு களனுநாக பூடணம் விளங்குமார்பும். (௭௨)

ஒருதிரு முகனுநான்கு புயங்களு மொழியாதென்றும்
விரிதரு கருணைநோக்கு மேருவி னருவிமானு
முரனமர் மநுமுன்னூலு முழைமழு வபயமொப்பில்
வரதவன் கரனும்பாத்த திருவரைச் சருமமாண்பும். (௭௩)

இருவினை யொப்புவாய்ந்து மலபரி பாகமெய்ந்து
திருவருள் பதியப்பெற்றுச் சிவத்துவ விளக்கமுற்று
மருவினர் மருவுகின்றார் மருவுவா ராயவெண்ணில்
பெரியவர்க் குலகாடு பிறங்கிய நகரியாகி. (௭௪)

உறைதரு மனைகளாகி யுலாவரு வீதியாகி
நிறைமலர்த் தடங்களாகி நீண்மலர்ப் பொழில்களாகிக்
குறைவிலுய் யானமாகிக் கோதிலுப் பரிகையாகி
மறைமுழங் காசமேவத் தாணிமண்ட பங்களாகி (௭௫)

சித்திர மணிமன்றாகிச் செம்மணி யணிகுன்றாகி
நித்திய நிதிகளாகி நிரந்தபன் னதிகளாகி

யர்தரு பெரியர் யாருந் தனித்தனி யமர்ந்திட் டாங்கே
சுந்தரம் பொலிதானத் தோய்வுற விரிந்த வாகி. (௭௬)

வேறு.

அரவணை பான்முன் கிடந்தோ விடுவவாகி பருமறையான் சென்னிதனக் கணி
ய வாகிச், சரவணத்தான் கைதொழுது சார்வ வாகிச் சார்ந்தார்க டமக்கெல்
லாஞ் சரண மாகிப், பரவுவார் பாவங்கள் பறைப்ப வாகிப் பதினெட்டுக் கண
ங்களுஞ்சீர் படிப்ப வாகி, விரவுகொடு வினையார்கள் குறுகா வாகி விழைந்து
குறைந் தடைந்தாரைக் காப்ப வாகி. (௭௭)

அரும்பித்தசெய்ஞ்ஞாயிறேப்ப வாகிபழசெழுத லாகாத வருளே யாகிச்,
சுரும்பித்த வண்டினங்கள் சூழ்வ வாகிச் சோமனையுங் காலனையுஞ் சீய்த்த வா
கிப், பெரும்பித்தர் சேர்ந்துபிதற் றவன வாகிப் பிழைத்தார்கள் பிழைப்பறி
ய வல்ல வாகி, விரும்பித்தவ் வையாலன் புடையா ரிட்ட விரைமலர்க டாம்
விரிந்து நிறைய வாகி. (௭௮)

ஒருகாலந் தான்றேதிரிப்ப வாகிபூதிதோ றூழியுபர் வுடைய வாகிப், பரி
வோடு பற்றுமுனி மைந்தற் காகப் பதைத்தெழுந்த வெங்கூற்றைப் பாய்ந்
த வாகிப், பொருளாளர் பொன்னுரைபாய் நிற்ப வாகிப் புகல்விசும்பை யூட
றுத்துப் பொலிய வாகி, வருமாசு மதிகழுவு மாண்ப வாகி, மந்திரமுந் தந்திர
முமாய வாகி. (௭௯)

உருவிரண்டுமொன்றேடொன் றொவ்வா வாகியுருவமெனக் குறித்துணர
வொண்ணு வாகிப், பெருகழலும் பஞ்சிலம்பு மார்ப்ப வாகிப் புகழ்வார்கள் பு
கழ்தகைய வல்ல வாகி யுரைமாலை யெல்லாமு முடைய வாகி யுரையாதி யா
லுவாரப் படாத வாகி, யரைமாத்தி ரையிலடங்கி யமர்வ வாகி யகலமனக்கிற்
பார்க ளில்லா வாகி. (௮0)

அணிபனவுஞ் சேபனவு மல்ல வாகி யடியார்கட் காரமுதப் பெருக்கேயா
கிப், பணிபவர்க்குப் பாங்காக வல்ல வாகிப் பற்றற்றார் பற்றுகின்ற பயனே
யாகி, மணியனைய பொன்னனைய மாண்ப வாகி மருந்தாகிப் பிணிதீர்க்க வல்
ல வாகித், திணியரக்கன் றனதாற்ற லழிப்ப வாகிச் செப்பருமற் றெப்பொரு
ளுஞ் சேர்ய வாகி. (௮௧)

வேறு.

இன்னன பலவு மாகி யிருநிலத் துயிர்க ளெல்லா
கன்னல முற்று மேவி நயப்புறப் போந்த வாக்கின்
மன்னொமை யாண்ட தெய்வ மாசில் வீணை யாதிச்
சொன்னலம் பெறமுன் போற்றுந் துதிக்கிலக் கியமாய் நிஃ (௮௨)

மலர்தரு தூய செந்தாமரையலர் மருவ வாய்மை
வலென்ல மமைந்த செய்ய நற்றுணைப் பதமுமேவி

யிலகெழி லருணன் மேனி யிமையத்தெமை யாளு மண்ண
லுலகமுற் றொருங்கு வாய்த்த வுமையருட் சத்தி யோடும். (௮௫)

ஆயிர கோடி ஞாயி றொங்கொருங் குதித்தா லென்னப்
பாயொளி கான்று மீது பனிமதிக் கவிகை காப்ப
மீயுற மணிவி தானம் விரைகமழ் மென்போ தார்ந்து
மாயிருங் கணமடங்கன் மடங்கின நிமிர்ந்து தாங்கும். (௮௬)

ஆதன பீடத்தும்ப ராருயிர்க் கின்ப மேவ
விரிதரு கிரீடை செய்து வீற்றிருந் தருளு மென்று
மாமிரு மலையத் தெம்மான் வழங்கின னிமயத் தன்னை
பாவெனிர் பணி§வி னவும் பரிசினைப் பகர லுற்றான். (௮௭)

திருக்கைலாயச்சருக்கம்

முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-௪௮௭.

## கௌரிதாண்டவச்சருக்கம்.

---

எம்மையா ளுடைய கோன்வீற் றிருந்தருள் கைலை மேன்மை
பொய்மை தீர் தவத்தீர் முற்றும் புகல்வதெற் கியலு மோமே
எம்மையன் னைலவி ஞவி கவுபுரி யடைந்து நோற்கச்
செம்மலெஞ் சடிலத்தெம்மான் செய்நடச் சிறப்புச் சொல்வாம். (௧)

அத்திருக் கைலை தன்னி லண்ணறன் னிடப்பால் மேவுஞ்
சத்தியெம் மன்னை யோர்காற் றனித்தெழுந் திறைஞ்சி நின்று
புத்திமுத் திகளை யன்பாற் போற்றிவே ண்டுநர் தமக்கு
நித்திய முதவ லுனே னியமங்கொ ளமல மூர்த்தி. (௨)

மின்னக வேலான் வேதன் றன்னகம் வீட்டு மேலோய்
பன்னக வரசா மங்கைச் சொன்னகங் கணம்ப ரித்தோய்
மின்னக மதிகொள் வேணி யின்னக மிதழி வேய்ந்தோ
யென்னக மெனவே யித்த மன்னகத் திருந்து வாழ்வோய். (௩)

ஆரண முதல்வ போற்றி காரணக் கரியாய் போற்றி
வாரண முரித்தாய் போற்றி மாரண ருவி போற்றி

---

§ பணிவி னவும்-பணிந்துவினவும். கிட்டுநேர்ந்து என்பதுபோல.

பாரண காள போற்றி காரண பரம போற்றி
பூரண புனித போற்றி தாரண புயங்க போற்றி. (ரு)

என்னநின் றேத்தி யன்னை யிறைவநின் னடனம் பல்வே
றுன்னுறு மியல வென்று யுலற்றிய விடங்கேர் தில்லேன்
பொன்னியன் மன்றிமுன்னி புரிநடம் புரிந்து நோக்கி
நின்னரு கொருவுருது நின்றுள முவகை கூர்ந்தேன். (௬)

கமலத்தி னறுந்தேன் மாந்திக் கடிமலர் பின்னுந் தேடும்
பமரத்தி னின்ன டத்தின் பாலுளம் விரும்பு மேலுஞ்
சமலத்தர்க் கறிவொ ணாதோய் தாண்டவ பேத மின்ன
நிமலத்த தலங்க ளின்ன வென்றிவை நிகழ்த்துகென்றான். (௬)

கிளந்தசொல் வினவி யெம்மான் கிரிசைகே ளுலகம் யாவும்
வளர்தரு நமது கூத்தின் மயமென வுணர்தி யானி
னுளந்தவ மகிழ யாமு னெப்பிலா நடனந் தில்லைக்
களந்தனிற் புரிகாற் சாம கானநீ யாங்குச் செய்தாய் (எ)

வேறு.

தயங்கிய சாம கானத்தி னின்றுஞ் சரிகம பதநியேழ் சுரங்கள்
வயங்குறு சட்ச ரிடபகாந் தாரமத்திம பஞ்சம மதன்மே
லியங்குறுத வதமே நிடாதமென் பெயர்க ளியைந்துமா யூரமே யிடப
மயங்கிர வுஞ்சங் கோகிலந் துரக† மாம்பல வோசைபோன் முறையே. (அ)

டின்றன்பி னென்று யொலித்தெழுந் தனவா லோதுமவ் வேழ்சுரங் களினு
னன்றுநம் மிடையே யெழுவித நடன நலம்பெறத் தோன்றின நளிர்பூ
மன்றலங் குழலா யுலகுயி ரோர்ந்து வழிபடீஇ யின்புற மதித்தே
யின்றுநீ கேட்டி யிவற்றெழு பெயரு மிடங்களு மிசைத்துமென் றியம்பும்.

மாதவர் பரவு மானந்த நடனம் வயங்குறு சந்தியா நடனங்
காதலி நின்பேர்க் கௌரிதாண் டவமே கவின்பெறு திரிபுர நடன
மோதுமா காளி தாண்டவ முனிதாண் டவமொடு முலகசங் கார
மேதகு நடன மெனுமிவை சிவைநாம் விதந்தநன் னுமமென் றுணர்தி. ()

வேறு.

பிரமகற் பங்க டோறும் பேறுநர் பொருட்டா லிந்தத்
திருநட மேழுஞ் செய்தாஞ் செப்புமத் தானங் கேண்மோ
வரவுமம் புலியும் போற்று மருட்டில்லை யம்ப லத்திற்
பாவுமா னந்த தாண்ட வஞ்செய்வோம் பைம்பொற் பாவாய். (கக)

---

† ஆம்பல-ஆறனுருபு விரிந்த யானையின் பிரிசொல்.

இவர்மணி மாடக்கூட லிரசித சபையி னின்று
தவராடி பரவச் செய்தாற் சந்தியா தாண்ட வஞ்செம்
பவளமென் விரதி கின்பேர்ப் பரவுதாண்ட வத்தையென் றுஞ்
செவிகு திருத் தலத்திற் சிறசபை யதனிற் செய்வோம். (௧௨)

*அத்திரி கூட வெற்பென் றறைதிருக் குற்றா லத்திற்
சித்திர சபையிற் செய்வோம் திரிபுர தாண்ட வம்பூங்
கத்திகைக் குழலி யாலங் காட்டினிற் காளிதாண்ட
வத்தைநன் மெற்று மிற்போ யிரத்தின சபையின் மாதோ. (௧௩)

தாம்பிர சபையிற் றேவ தாருமா வனமெல் வேலி
யாம்பிர பலதலத்தில் லாற்றுது முனி திருத்தங்
காம்பீரக் குறுகோ ளீசங் காரதாண் டவத்தை யாவுங்
கூம்பிர வதனி னின்று குலவுற வியற்று மிற்போம். (௧௪)

இவ்விய னடன மேழு மேந்திழா யிடத்தி டங்கள்
செவ்விதி றுரைத்தா முன்றன் சிந்தையி லார்வ மிக்க
தெவ்விய னடன மோது கென்னவென் பேர்க டங்கா
ணைவிழை வுத்தே னன்ன தலமெவ ணைநர்க வென்றான். (௧௫)

அன்னையாங் குரைப்ப வெங்கை டருள்செயு மமலைமுன்
மன்னடம் புரியு மால வாய்மது ராபு ரிக்கு
முன்னுற வடமேற் பாலின் மூன்றரை யோச னைத்தாய்ப்
பன்னுமெல் லையுண் டோர்பொற் பதமித மிதழிக கானம். (௧௬)

அவ்வனஞ் சகல தேவ சேவித மாத மாங்கே
திவ்விய மெம துருவ லெக்குறி யருவி யாகி
வெவ்வெவ் வுலகுதீங்க விலக்குமொன் றதிலெஞ் ஞான்று
மைவ்விழி யிமய மானே மன்னியீற் றிருந்து வாழ்வோம். (௧௭)

என்றிவை யருளி ஞேதி பெம்பிரா னியம்பு மேலு
நன்றிசெய் பிரணையார்த்த மாமென வுணர்த்தி நம்பா
னின்றொளிர் கொன்றை மிற்போ னிலங்களிற் றலங்க டம்மின்
வென்றிகொ ளித்த லத்தினமக்குள விருப்பு மேலாம். (௧௮)

மதிநுதற் பவளச்செவ்வாய் மதரரிக் கயற்கட் கோங்கின்
கதிர்மணி யாரக்கொங்கைக் கனக்குழைக் கௌரி கேட்டி
விதியரி புடவி காக்கர் விபுதர்கள் பிருகு முன்னோர்
கதியறி முரலக் காளிற் குழ்ச்செயை யருச்சிப் பாரால். (௧௯)

* அ-சட்டு.

சகலகா மியங்க ளுக்குந் தவமொன்றே யேது வாகும்.
வகையுயிர்ப் பயிர்க ளோம்ப வருசரி யாதிக் காலிற்
றகையரு ணன்னீர் பாய்ச்சுந் தலைவிநீ யாங்கட் பூசை
பகர்தவம் புரிதிநின் பேர்ப் பயினடந் தெரித்து மென்றான். (உ௦)

அத்தனன் மொழிவி னுவி யன்னையுள் ளுவகை கூர்ந்தங்
கித்தன தருளின் மேன்மை நினைந்தவ னடியிற் றாழ்ந்து
பத்தியி னிறைஞ்சி நீங்கா விடைபெறீ இப் பரவு மக்கா
னத்துற மதித்தெ ழுந்தா ளகிலமு நலம்பெற் றுய்வான். (உ௧)

பொன்னரி மாலை யாதி புதுமலர்த் தொடைய லாதி
நன்னரி னணிந்து சாம்பூ நதத்§தடர் குயின்ற தண்டிற்
றுன்னரி வயிரத் தாற்றித் துலங்கநித் திலமேல் வேய்ந்த
பன்னரி தாய சோதிப் பஃறொழில் விமான மாங்கே. (உஉ)

அமரரிற் சில்லோர் தாங்கி†யந்திகங் கொணருமுன் னிற்க
வெமையளித் தருளு மன்னை யிறைவனை யகத்திற் றாங்கி
பமரமெல் லோதி யார்ப்பப் பாதநூ புரங்க ளார்ப்ப
விமைகதிர்க் கலாப மார்ப்ப வியம்பதி னெட்டு மார்ப்ப. (உ௩)

மாதவர் முனிவர் போற்ற மற்றவர் மகளிர் வாழ்த்த
வேதமில் விபுதர் யாரும் புட்கலா வர்த்த மேய்ப்பப்
போதரப் பொற்பூ மாரி பொழிதரப் புவனம் வாழக்
காதலின தன்க ணுரோ கணித்துவீற் றிருந்தாண் மன்னோ. (உ௪)

வானிம கரன்பாற்பானு மண்டலத் திறைவன் போலத்
தானமர்ந் தருள ரூனி தரிசனத் துணர்த்து வாள்போன்
மேனநித் திலவி மானம் வீற்றிருந் தருளு மன்னை
தேனல ரலங்கல் வானோர் காவினர் செலச்செல் வாளால். (உ௫)

அன்னையாங் கெழுந்தன் முன்ன ரகிந்திதை கமலினிப்பேர்
மின்னனார் முதல னேக சேடியர் விரவிச் சூழ்ந்தார்
சின்னமெக் காளந் தாளந் திமிலைசல் லரித டாரி
பின்னிய முள்ள வெல்லா மியக்கினர் கணங்க ளெல்லாம். (உ௬)

பன்னிறக் கவிகை தாங்கிப் படர்குநர் பல்லோ ரம்பொற்
றன்னுகாற் கவரி வீசிச் சூழ்குநர் பல்லோ ரங்கை
மன்னுகோ டிகக்க டாங்கி வருகுநர் பல்லோர் தண்கான்
முன்னுறு சிவிறி வீசி முடுகுநர் பல்லோர் சூழ்ந்தார். (உ௭)

---

§ அடர்-தகடு. † அந்திகம்-சமீபம்.

துங்கநல் லிசைகள் பாடுஞ் சூதர்மா கதர்கள் பல்லோர்
மங்கல மெடுத்துப் பாடும் வந்தியர் பல்லோர் போந்தார்
வங்கிய முதல கோட வதிமுதற் கருவி யேந்தி
யங்கிசை யெழாலி னின்ப வமுதம்பெய் தனேகர் சூழ்ந்தார். (உஅ)

மேயநான் மறைகள் வீற்று வீற்று நின்றி சைப்பார் பல்லோர்
தூயவம் மறைக ளாலே சுவத்தியோ தூஉர்கள் பல்லோர்
சேயதர் திரங்க ளோதுஞ் செம்பொரு டிரட்டி நேர்கின்
றூயபன் னூதிக ளாங்கே யன்பொடு பகர்வார் பல்லோர். (உகூ)

புபனிறக் கோகி லங்க போதக மராளம் பூவை
பயின்மொழிப் பலாச னங்க ளாதிய பறவை தத்த
மியல்பின் வாழ் பஞ்ச ரங்க ளேந்தியவ் விசையி சைப்பித்
தயில்விழி யரம்பை மாத ரனப்பிலா ருத்துச் சூழ்ந்தார். (௩௦)

திரிமருப் பரிண மோவாத் திறல்கெழு மேட மிக்க
கருமுசு வாதி தத்தங் கைக்கொள் பொற் றொடரி னோடு
மருவுறக் கொண்டு செல்லும் வானவ ரன்ன மாக்க
டருதொழி லருமை காட்டிச் சார்ந்தன ராங்கட் பல்லோர். (௩௧)

வீரமே யுருக்கொண் டன்ன விசையையே சயையக் கையிற்
சேரமா விடப மீது திகழ்தரு பொற்கோ ளுங்கி
நேரிரு பாலுஞ் சூழ நெருக்கினை யொதுக்கிச் செல்லத்
தாரணி முழுது முய்வான் றண்ணரு ளூக்கச் சென்றான். (௩௨)

இத்தகை யோடு செல்லு மெம்பெரு மாட்டி யாங்குச்
சித்தமி தன்பு கூரச் சேடி பணிந்து போற்று
நித்திய முனிவர் வானோர் சித்தர் திறீ இப்பல் வாயி
லத்தலை யொருவிக் காத மனப்பில கடந்து சென்றாள். (௩௩)

வேறு.

என்னகத்தென் னிருந்தவத்தா லினிதமர்ந்தா னிறைமணஞ்செய் தெழுந்த காலைத், தன்னகத்துச் சார்தருளூந் தனையயிலுந் தாயகஞ்சார் தைய லார் போன், மன்னகத்து வகையோடும் வந்தனளென் மகிழ்வெள்ள மனங் கொள் ளாமற், றுன்னகத்திற் சொரிதலெனத் தூயருவி துலங்கிமயத் தோ ன்றக் கண்டாள். (௩௪)

எனையகன்ற பிரிவாற்று னென்றுரைத விளர்த்துடல மின்னல் கூர்ந்தான்
றனையனுகி மாற்றுதுமென் றருள்கூர்ந்த வருமவள்போற் சமீபத் தெய்தித்
தனையவன்கண் டகமகிழ்ந்தாங் கக்கிறம்போய்த் தன்னிறமே பாவச் சார்ந்தா
னினைவரிய சயம்பிரகா சத்தெவையுந் தன்மயமா கெத்தும் பூவை.

ஆங்ககன்று தேவர்தினத் தொருபாதி யமரர்க ளாங்கட் பாதி
பாங்குபெறப் பூசனைசெய் கேதாரம் பணிந்தேத்திப் பவள வேணி
தாங்கியமா நதிசுலவ வீற்றிருக்கு மகிலேசன் றன்னைப் போற்றித்
தேங்குபுகழ்ச் சீசைலம் பணிந்துகா ளத்திமலை சென்று சேர்ந்தள். (௩௬)

காளத்தி மலைக்கொழுந்தைக் கற்பகத்தை யற்பகத்திற் கசிந்துட்கொள்வோர்
நீளத்தம் பவத்துழலும் பிணிக்கழுந்த வருமருந்தை நேர்கண் டேத்தி
மீளத்தன் றனக்குவடு தனக்குவடு விளைத்திடவுள் விழைந்தோன் கண்ட
காளத்தன் றனையிறைஞ்சிக் கம்பமகன் றம்மை யுளங் களிப்பச் சென்றாள்.

இன்னனபல் லிடங்களெலா மியனெறிக்கண் டினிதேத்தி யிமய மீன்ற
வன்னைதிருத் தொண்டைநா டகன்றடியார் தொகைக்குவிரி யகிலம்போற்றப்
பொன்னவையி னுலகெலா மென்னுமுதல் கொண்டியற்றும் புனிதர் பல்
காற், பன்னுறுசீ ரனபாயன் மரபினர்தந் நீர்நாட்டின் பாங்கு சேர்ந்தாள்.

அந்நாட்டிற் காருயிரா யமலமதா யருண்மயமா யண்டமெங்கும்
வின்னாட்டி மறைதகா வித்தைதிக ழிடமிதென விதந்த சீர்த்தாய்ப்
பன்னாட்டிற் சூரியபவித் திரமாம்பொன் னம்பலத்திற் பரமன் மேவி
முன்னாட்டின் புலியரவுக் கியற்றுநடங் கண்டிறைஞ்சி முதமீக் கூர்ந்தாள்

அப்பதியி னேகியிளஞ் சேய்மணத்தி லெவ்வெவர்க்கு மமல மோக்க
மப்பதிய வருள்பதியு மம்மதலைக் கருண்முலைப்பால் வள்ளத் தீந்த
வொப்பதிக மில்பதியும் வயித்திய னார் மண்மருந்தீந் துயிர்க ணோயின்
வெப்பதிறுத் துடல்வளர்ப்பச் செயரசு புரிபதியும் விழைந்து போற்றி. ( )

சாயன்மயி லுருக்கொடுமுன் றூன்போற்று பதியும்பஃ றலங்கள் பாங்க
ராயதளி யினமாக வங்கணிடை யமர்பதியு மானூர் கும்பத்
தேயவிருந் திருப்பதியு மாலூரமு மால்புரமு மிகந்து மேலாந்
தூயபதி யிதுவேயென் றிறைவருமூ லப்பதியுந் தொழுது போற்றி. (௪௧)

படர்வேணிப் பரித்தகன்றிப் பதமுதனீர் பரித்தனன்சொல் பரம னென்னத்
தொடர்பாக நீறூறுந் தொல்பதியுந் தாயெனவோர் தொடிக்கை மாதி
னடர்சூத வினைபுரிந்த வரன்பதியு மற்றுமடைந் தாங்காங் கேத்திச்
சுடர்வேற்கை வழுதிதிரு நாட்டிமய மலையுயிர்த்த தோகை போந்தாள்.

பத்தனமெவ் வெவற்றினுமின் பத்தனஞ்சார் வனங்களெலாம்பல்குஞ்சீர்த்தாய்
நத்தனய னுணர்வருமக் கிலைமையொரீஇ நத்தனமென் னடைப்புன் மூரன்
முத்தனமென் முகாம்புயத்தான் முத்தனத்தான் முத்தனத்தமுளரித்தோன்றி
†யத்தனக வருண்மேனி யத்தனகம் மதிவேணி யண்ணன் முன்னாள்.

---

† அத்து—செந்நிறம். * ஆரம்—விருப்பம்.

ளார்கலை மலைதணந்து வந்ததனை மணந்தருளும் வகைமூ வாண்டி
னிளமகவாய்ச் செழியர்குல மீடேற வுலகமெலா மின்ப மேற
வளியொடுதான் முடிகவித்தாங் காசபுரிந் தருள்பதியை யடைந்து நாதன்
குளிர்மலர்ச்சே வடிபணிந்து குலவுமிமா சலைபுவகை கூர்ந்து போந்தாள்.

சேவணத்தன் சேவணத்தன் றிருவடிபார் கிளைப்பகிலங் கிளைப்பச் சென்ற
மாவணத்தன் மாவணத்தன் சமழ்ப்பமறை யவரவைமுன் வந்து நீட்டு
மாவணத்த னவணத்த னிச்சொலா சோதுபொழி லண்ட மேவும் [தாள்
பூவணத்தன் பூவணத்தன் பொன்னடிபோய்ப் புரிந்திறைஞ்சிப் புறம்புபோந்

சே-வண்ணத்தன்-சேவில்அண்அத்தன் கிளைப்ப-வந்து என்றியையும்.
சென்றமிருகத்தன்மையன். மா வண் நத்தன்.

வேறு

ஒருவாத நகவேக முடியோது பதியாய வுமைநாதனைக்
கருவாத நகடோர முயிரோந்தி யொழிவானுள் கரைவாசக
மரு*வாத நகவோது பெருமான்மு னவதார வளமேவிய
திருவாத நகர்நாத னடிபேணி முதமோடு சிவையேகினள். (௬௬)

வேறு

இத்தக வுடனிந் நாட்டி னிற்சில புரிகள் வேட்கை
யுபத்திட முழுது மேத்தி யுத்தம னுரைசெ யாற்றிற்
புத்தல ரிதழி பூத்த பொற்புறு விபின மாட்டி
னுத்தம் யணிக ளேன்கி யுற்றன ளடியர் போற்ற. (௬௭)

அன்னிய வமலை கேட்டங் கலர்க்குழன் முகிலின் கூட்டம்
வன்னவாய்க் கோப வீட்ட மணிநகைத் தளவி னிட்ட
கன்னுறக் கண்டு தோகை நடிக்கனே னிமித்த நாமிங்
கென்னிய கருமம் வாய்த்தற் கெனவிரைந் தேகி னாரல். (௬௮)

அரிக்§ நா லனியின் ருரி யணியமர் கனியி ருல்க
டெரிக்குநற் ாம தானம் யான்முழ வாகத்திப
விருக்கமோர் கானின் ருடல் விழைந்தபிற் கண்ணு னாகச்
சரிக்கைபெம் மன்னை நோக்கிச் சாற்றரு முவகை கூர்ந்தாள். (௬௯)

வனமகன் கின்னை மாலை மகரிகை பனித்தா முந்திக்
கனிகன்பன் மணிப்பொற் பூர கடகினை முதல தாங்கி
கனிமுக மலர்ந்து பூத்தாய் நாண்மல ரடியிற் சென்னி
குனிதர வணங்கி யேற்ப வுவகையுட் கொண்டு சென்றாள். (௭௦)

§ குரல், தாரி, கனியிருல்கள்—எதிர்நிரனிறையாய், தானம் யாழே
ழசை, முழுவக்கலைக்குறிப்பித்தன் கனி—வேக்கைமரம் தாரி—
இசை அரி—தவளை கனி பிரமனைக் குறிக்கும்.

அருவிலா வுலோபர் செல்வ மவரனு பவக்கு மாகா
மருளுமா பிறரா றகொள்ளப் படுமெனல் வயக்கி யாங்குக்
கருமுசு வொன்றி றுத்த கைத்தளிர் வளார்சொண் டீக்கள்
வெருளிய வடித்தி ருல்கள் பிழிந்திடு விதநோ் கண்டாள். (௩௧)

பிழிமதுக் கடக்கொள் பூக மடலுறப் பெருக்கு மந்தி
தழுவுபல் குருளைக் கீத ருன்புரி யறத்து ளொன்றாய்க்
கழியவ றன்மை யோரைக் கடிந்தவர் பொருள றத்தின்
வழிபுகுத் துய்வு காட்டு மாண்பினர் செயலாய்க் கண்டாள் (௩௨)

ஊடிய பிணவி னுள்ள முவப்பவா சினியின் றேற
லோடிய கனிகீண் டங்கை யொழுகிய விரத முன்னின்
றீடில்பொற் சுளைகண் மந்தி யீந்திறைஞ் சிடலை யானறோ்
நீடுகைச் சொன்ன தானஞ் செய்பவர் நிலையிற் கண்டாள். (௩௩)

உழைவயா நலிவு நோக்கி யுழுவையுள் ளுருகி முன்போய்
விழைமருத் துவஞ்செய் தீனும் வெண்மதி நாளத் தோடு
தழுவிநாத் தைவக் தாசு தவிர்த்தமு தருத்து மேன்மை
யிழைநுசுப் பிமயப் பாவை யினிதுள முவப்பக் கண்டாள் (௩௪)

குளிர்கொளும் விடம்பெ றக்கா கோசரக் குருளை பானு
விளவெயி லிடைகின் றூட வின்னலுற் றனவென் றெண்ணிக்
களிமயில் சிறைக விப்பக் கலுழனு னெழுக்கு பாலார்
நளிர்சமு கிநழகொ ணாந்து நயந்துட னூட்டல் கண்டாள் (௩௫)

வேறு

இவ்வ கைப்பல மாக்களங் கேயபுள்
செய்வ கைப்பல செய்கையு மேனைய
தெய்வி கத்த சிறப்பு மடைந்துளோ
ரெவ்வ நீக்குமை கண்டுகண் டேகுவாள் (௩௬)

அம்பொற் கொன்றை யலரிதழ் மல்கலாற்
செம்பொற் பூமியத் தானமத் தேவியை
யிம்பர்க் கண்டமு தாயுண் டிமைப்பிலா
தும்பர்க் கொத்தன ராங்குறை யுத்தமர் (௩௭)

உருப்புத் தூர்ந்துயி ரின்புற வுள்குவாள்
விருப்புத் தூண்ட விரைவொடு மேகினள்
கருப்புத் தூரிற் கமுகிள முத்துமிழ்
திருப்புத் தூரெனுஞ் செவ்வி வனத்தகம் (௩௮)

ஆப கானன மேவிய வன்னைதான்
றாய மாதவஞ் செய்யத் தொடங்குமு
னேய மாதவஞ் செய்தக ரிம்முறை
வாய காவ னிறவன் மாபென (௫௯)

வேறு

உலகினுக் குணர்த்து வாளா *யும்பலான் வம்ப லாற்றிற்
செறுபுதன் சத்தி யாய சேட்டையை வாமையாதி
யிலதசத் திகளோ டங்க ளொருறரைக் குரோசத் தெல்லை
நிலவுறு கம்பை பூரி னிறுவினு னிமலை பின்னர். (௬௦)

தெக்கணத் தனிற் குரோச மொன்றரை சென்று முன்னாள்
முக்கணன் சித்தி பெட்டு மூவிரு மகளிர்க் கோதப்
புக்கண வால்சேர் பட்ட மங்கையிற் பொருவில் காளி
யிக்கண மிருக்கென் றேதி யிருத்தின ளாங்கன் னாளை. (௬௧)

செப்புமொன் றரைக்கு ரோசத் திடைப்பிர தீசி யாசை
பொப்பில லாலங் காட்டி னுழைவிழிப் பூட்டை கெங்கைத்
துப்பிதழ்க் குதலைத் தீஞ்சொற் றுடியிடைக் குமாரி தன்னை
யிப்புவி யமர்தி யென்னு விமாசலை யிறைவி னால். (௬௨)

வடதிசைக் குரோச மொன்றின் னெடுமறைப் பதியின் மன்னிக்
கடிசெய வாறு கோடி கன்னிமார் தமைநி றுத்தி
யிடைமல ரிதழிக் கானின் மீளவும் புகுந்தெம் மன்னை
படிதொழ விருபா லாசை யிலிங்கமும் பணியச் செல்வாள் (௬௩)

பூருவ திசைக்கு ரோச மொன்றினிற் பொழில்கள் வானிற்
சேருபு முகிற்றொ ழிற்செய் தென்கரைப் பதியின் மேவிச்
சாருவ போகம் விடுதந் தருள் சயம்பி லிங்க
நேருநீ இயன்பு கூர நிலமுறப் பணிந்து போற்றி (௬௪)

குலவிய வாசை வீதி கோத்திரம் †கவ்வி யூதித்
தலைபமர் ‡பெரிசை யென்னுந் தண்பதி யதனின் மேவி
யலைகர் கிடந்தெறம் பெம்மா னருட்சுயம் பிலிங்கந் தன்னை
மலனிறை யன்பிற் கண்டு நயந்தடி பணிந்து போற்றி. (௬௫)

யாதிய திசைக்கு ரோச மொன்றரை யெல்லை யேகித்
தேமல ரளிகள் தேஞ்செய் பொழிற் கோயிற் பட்டி
யாமகன் பதியின் மேவு மருட்சுயம் பிலிங்க மூர்த்தி
தாமரை புரைமென் றுவளிற் றலையுறப் பணிந்து போற்றி (௬௬)

---

*உம்பலான்—இந்திரன் †கவ்வியூதி—இரண்டுகுரோசம்,
‡பெரிச்சியூர்-பெரிசையென மரீஇயது,

நிருதிதன் றிசையிற் கவ்வி யூதியி னிலவுங் கோட்டித்
திருநகர் மணிமுத் தாற்றின் றென்கரை யதனின் மாயோன்
வருமக பதிக டம்ப முனிமுனோர் வழிபட் டேத்துஞ்
சுருதிசூழ் சுயம்பி லிங்க மூர்த்தியைத் தொழுது போற்றி. (சுஎ)

மேற்றிசைக் குரோச மொன்றின் விளங்குநற் காரை யூரிற்
போற்றுசீர்ச் சுயம்பு வாகப் போந்தருள் கணேச மூர்த்தி
யேற்றுசண் டேச மூர்த்தி யிருவரும் புடையின் மேவ
வீற்றிருந் தருள்சு யம்பி லிங்கத்தை விழைந்து போற்றி. (சுஅ)

பச்சிமோத் தரத்தின் பாலோர் குரோசத்திற் பரவு நல்லூ
ரிச்சையீ னேகி யாங்க ணிலங்கருட் சுயம்பு வாய
விச்சைமா வடிவி லிங்க மூர்த்திமுன் மேவி யன்பா
னச்சிமென் மலர்க டூவி நலனுறப் பணிந்து போற்றி. (சுகூ)

உத்தர திசைக்கு ரோச மொன்றினில் வேத வோசை
நித்தலும் பரவி யோங்கு நெடுமறைப் பதியில் யாமு
மத்தரு பிருகு நாகர் குசகேச ராதி யோரும்
பத்தியி னிறைஞ்சி யேத்தும் சுயம்புவைப் பணிந்து போற்றி. (எ0)

வடகிழக் காசை யின்கட் குரோசமொன் றதனின் மாயோ
னிடரகன் றின்ப மேவற் கெண்ணியங் கிறைஞ்சி யன்பா
லடைவினிற் பூசித் தேத்து மரிபுர மதனின் மேய
படரொளிச் சுயம்பு மூர்த்தி பதமலர் பணிந்து போற்றி. (எக)

இன்னண மிமய மீன்ற விடிகிடை யிணைத்த கொங்கை
யன்னமென் னடைப்புன் மூர லளிமுர லலங்கற் கோதை
தன்னமர் காத லான்றன் சயம்பிரு நான்கும் போற்றிப்
பின்னரவ் விதழி துன்னும் பெருவனம் புகச்சென் றாளால். (எஉ)

மலைமகள் வரவு நோக்கி வனமகள் மரக தத்த
நிலவுநீள் மணிகால் யாத்த பொற்றொடை நிரைவி தானங்
குலவுற வமைத்தல் போலக் குளிர்தளி ரிடைய விண்டு
மலர்துண ரலந்த கொன்றை யடவியி னகம்பு குந்தாள். (எங)

ஆங்குற மிமயச் செல்வி யனுதியா யவனி யெங்கு
மோங்குபல் சுயம்புக் கெல்லா மூலமா யுன்னி யாங்கே
பாங்கினர்க் குதவு மூல விலிங்கமப் பசிய கானிற்
றேங்கொளி விரிப்பக் கண்டா ளன்புளந் செறுத்தச் சென்றாள். (எச)

உருவென வருவ மென்ன வோதொணா துபய மாகித்
திருவரு ளாகி வான்சச் சிதானந்த மாகிச் சிந்தைக்

கருணிறத் தாது முற்றும் வலித்தருள் சாந்த மாகி
யருமையி னேக மாகி யமர்ந்ததிங் கேன்னே வண்ணல். (எரு)

என்றினி தன்பின் வாய்மை யின்னன பலமுன் னோதி
மன்றலங் கோதை பாத மரையளி நிரையிற் சூழ்ந்து
துன்றிய*நமந்து பல்காற் றுணைவனே டலர்வா சம்போ
லொன்றுத லுருவி னுங்காண் புறத்தழீஇ யுவகை கூர்ந்தாள். (எசு)

பண்டுநேற் கணங்கள் வேண்டப் பரன்கழுக் கடையாற் கண்ட
மிண்டுறு பவமுற் றோட்டி வீடருள் சிவகங் கைப்பே
ரொண்டமர் வாவி யன்ன குறிக்கெதிர் குணக்கிற் றோன்றக்
கண்டுசென் றினிய தீர்த்தக் கரையின்மேற் கௌரி நின்றாள். (எஎ)

நின்றருளமலை பாத நேருநீஇ யனந்த னாதி
வன்றிற லுகர் வீழ்ந்து வணங்கின ரெழுந்து நின்று
ரன்றவ டிருநோக் கன்னே ரடைந்திடப் பெற்று ரற்று
னன்றிசெய் வாக்கை யுற்றா நயந்தருந் துதிகள் சொற்றார். (எஅ)

மூலகா ரணியாய்த் தோன்று முக்குண ரூபி யாகிச்
சாலவின் பருளு ஞான சத்தியா யிச்சை தானு
யேலுறு செயலி யற்று மிறைவியா யிறைவர்க் கேயுங்
கோலங்கட் கினிய நிற்குங் கோறதொடி போற்றி யென்றார். (எகூ)

போற்றிய காற்று ளுக்கொள் புயங்கர்க டம்மை யம்மை
யாற்றுநல் லருளி னேக்கி யகிகணி ரலந்தை யீதி
னேற்றதேன் னெண்ண மென்கொ னுவலுதி ரென்ன வன்னோர்
பாற்றக வுடை யனந்தன் பதம்பணிந் தினைய பன்னும். (அ0)

வனந்திகழ் முகிழக் கொங்கை வரிவிழி வினைக்கை வாழ்வே
கனந்திகழ் கண்டர் பாத முடிக்கொளக் கருதி நாயே
னினந்திக ழுடியர் போற்றுங்†கமலையி லிறைவற் போற்றி
மனந்திகழ் நாமுன் னேற்ப மதிமுடி யெதிர்வர் தென்பால். (அக)

காண்டகு மலர்த்தி ருத்தாள் காட்டினன் களிகூர்ந் தெந்தாய்
சேண்டவழ் திங்கள் வேணிச் செல்வநின் றிருத்தாள் சென்னி
பூண்டிட விழைந்து னேனுற் புரிந்தருள் புனிதவென்றே
னேண்டகு தவரி யின்று மியற்றுதி யெய்து மென்றான் (அஉ)

---

* நமந்து- பெயாடியாகப்பிறந்தவினையெச்சம்.

†கமலை—திருவாரூர்

இனியெ வனேற்ப தென்ன வெந்தைவா சுகிகார்க் கோட
னிணைபுநந் தாண்ட வத்தை நின்றெதிர் காண்பான் கொன்றை
வனமிசை மடுவி னேற்பார் மற்றவர் நாப்பண் மேவி
நனிதவம் புரிதி யாங்கு நாமுமை பொருட்டுப் பின்னாள். (அங)

கௌரிதாண் டவஞ்செய் வோமக் காலைநின் மகுட நம்பொற்
றிவியகுஞ் சிதத்தாள் சூடச் செய்துமென் றருளிச் செய்தா
னவனரு டலைக்கொண் டிங்ங னடைந்துநோற் கின்றே னன்னே
யெவமகன் றின்புற் றேனின் னிணையடி யிறைஞ்சப் பெற்றேன். (அச)

அன்னைநீ யீண்டுப் போதற் கருந்தவம் யாது செய்தேன்
முன்னுகுஞ் சிதத்தாள் சென்னி முடிக்கொள நோற்ற தல்லா
லென்னையிங் கருள வுன்னி யெளிவந்த கருணை யென்னே
பொன்னல ரிதழி வேய்ந்தோன் புரத்தொருங் கமரு மின்னே. (அரு)

அண்ணனின் பொருட்டிங் காட லறைந்தவா றுனைக்காண் பேற்று
லெண்ணியா னேற்ற பேறு மெய்திய தின்றே யென்பா
னண்ணுகார்க் கோட னாதி நாகருங் குலமு முய்ந்தோ
மண்ணுமுற் றுய்ந்த வென்னு வணங்கிநின் றிவைது திப்பான். (அசா)

வேறு.

விரிதலைக்கான் செயலொளிமாய் விசும்புநெய்ப்பி லறல்பானு விதுமுன் மாயு
மிருளான்முன் வலியின்மல மெத்தென்னு விதழி முதல் யாவுமோட்டிப்
பானுருவிற் பாதிகொள்பான் மைக்கணங்க வவன்சடைநாற் பயோதரத்தி
னிருமுகினீ பகிர்ந்தணிந்த தெனவகிர்கொண் டிலங்களகத் தியல்பு போற்றி.

இருளினைநின் னிணையின்யா மிரிப்பவினம் பற்றிவெருண் டெம்மை வாட்டு
கிரிசைகின தோதியெனக் கொளத்தவரு மிருசுடரைக் கெழுமு சீற்றந் [ங்
திருகுபுதன் காற்பிணித்த செயல்காட்டு மிரண்டணியத் தேச மென்ன
வருதாள வாதனநன் னுதலணிகள் வயங்கோதி வனப்புப் போற்றி. (அஅ)

இருகுயினுப் பட்டடித்தொன் றென்றுமழி யாதிருந்தா லேய்ப்ப தாய
பொருவரிய சிந்தூரப் பொடியொழுக்கு சீமந்த ரேகை போற்றி
பருமதிசா பக்கிரங்கித் தாதைமேன் முனிவுகொளீஇப் பாதி யாகி
வருமாவிற்றன் பால்வைத்தருளினள்கொலென்னு நுதன்மாண்பு போற்றி.

இருபுறத்தி லொதுங்கிவகுப் பெய்துகுழ லங்குரித்தற் கிடங் களாக
வருகிரைக்கொ ளிரண்டால வாலமே யிடைமறைந்த வகையா தென்னி
னருகிலைத்தாம் விந்துமதி மண்டலத்தி னிறைந்தெழும்பு மமுத மேலே
பெருவாவறப்பொங்குதலினெனப்புகன்றஃதே சிறுத்துமிளிர்புருவம்போற்றி.

காமிசைசார் தரித்திடுநற் கழைச்சாப மலர்ச்சாய கங்க ளாதி
வாமுறக்கொண் டேற்றுனை யெரித்தானை மற்றுமொரு மதனை நம்பான்
மருவுறவைத் திடுதுமிவன்வலிபடைத்துவெல்கவெனவகுத்தாள்கொல்லென்
றுரைசெயவப் பரமனுளங் கவர்ந்தொளிருந் திருவிழியி னுருவம் போற்றி.

ஆயமதி னெங்கொளிய வணிசில வாதனத்தி னமர்ந்திட் டாங்கு
மேயபடி வியன்கறப்பு மிளிர்மணியும் வெண்டாள விதானம் வேய்ந்த
சேயமணிச் செய்தொடையிற் றிகழ்கடையுஞ் செவ்வரியுஞ் செப்பும் வாயிற்
கேயவிரைத் தோரணத்தி னிலக்கிமைசார்த் திடுரோமத் தெழிலும் போற்றி.

குலவளிகட் குணவளியாக் குறித்தனுக வேனும்விடாக் கொடிய வாகி
நலனுற்சன் பகமிழித்து நயனவழி யுருகமா நயப்கூர்ந் தென்று
மிலகுகரோற் பலத்தனிக ளெழுந்தாடிக் களிகூர வியல்பிற் றூங்கி
புலவுதவிர் மணங்கமழு முயிர்ப்பெறியுந் திருநாசி யுருவம் போற்றி. (கூ

விருப்புறாக் காசிமின்மூ ழ்த்திடைந்த பரிபவத்தால் விழுமமீக்கூர்ந்
தருப்பூர வாற்றுது நான்றிறப்ப நெருற்றுங் கொளிர்முத் தோடுங்
கருப்பூர மாதிவிராய்க் கமழ்வீசு கையிற்பொலிந்து கதுப மெட்டுந்
திருப்பூர மணங்கான்று செவ்வாம்பல் வெள்ளாம்பல் செயும்வாய் போற்றி.

முல்லைமுறுங் கவிழ்ந்துடைய முருந்தவளை யினையுமேன் முதற்க யற்க
ணல்லுகா மிகாமாய்ப் பிறந்தகத்து நீத்தவற்றி நலியத் தன்பாற்
புல்லுபத முருவழியப் புதவமிரஞ் செம்மணியாற் புனைந்து வைத்தா
லொல்லுமெனவியற்கைசெயவொளிகான்றுமிளிருநகையொழுங்குபோற்றி.

ஆனுருவ வின்பாலே பாகுமெனல் பிரத்தியக்கத் தறிவித் தாங்குப்
பாவுமுத்தி புத்திவிதை பவர்க்கருளும் வலத்திடத்தப் பாமன் சாயை[பால்
விரவுறக்காண் டுருப்பணமாக்கபோலமுங்கட்கயலொடுபோர்விளைப்பத்தன்
வரிமொங்கொண் டெனவப்பெயர்ப்பணிகொடிருச்செவியின்வனப்பும்போற்
[றி

இருகார்க ளிருகனுக்க ளிருகிடைக ளிருவளைக ளிருசு கோர
மொருகாம ருபிவிம்ப மொன்றுபிறை யொன்றுமுகி லொன்று மெனவ
னிரைமேவு மாமதியோன் றனதாகி ழெருவாறு சேர்த்தி யாண்டுந்
திருவாரும் கருணைதொடர் பின்றியெழுந் திருமுகமண் டலச்சீர் போற்றி.

பணிலமெலா மிகவலறிப் பயமருவி யுடல்வெளுத்துப் படருற் றேங்கத்
தினியகல்பூ கதங்கண்முக் கதஞ்சிற்றுபுவின் விரைசெலவிற் சென்று நின்றுந்
தனிவில்சந்தா சுதியிலைப்பத் தன்னாடித் தலைவிரித்து நடுங்கச் சாடி
வலந்திகழ்மூ வரையுடைத் தனைந்திலகு திருக்களத்தி னழகு போற்றி.

நீண்டனவே சிறந்திவலை திருப்புட்டு மங்கலமுஞ் சிறைக்கு மாற்றல்
பூண்டவிட மொருங்கமின்றும் பூதேசன் மாதேவன் புரையின் றேங்கத்

கீண்டுசிப மாயோக ரூடியின்மங் கலநாம மியல்பிற் றூங்கி
மாண்டருபல் லணிக்காசாய் மலிதருண மங்கலநாண் வண்மை போற்றி.

அருந்தவஞ்செய் தானுமிணை யாதுமென வடுக்கலுறீஇ யமர்ந்து வேய்தான்
வருந்திவிய லாதுனக்கு மதித்ததனை வருந்தலமை யென்னு மாற்றந்
தருந்தகையி னப்பெயர்கொண் டதுதணியத் தனக்குவமை தானே யாக
விருந்தவிருந் திருத்தோளு மியைபுறுபன் மணிப்பணியி னெழிலும் போற்றி.

வளைதலுரு யாத்தலுறும் வல்லகியின் றண்டிரித்து வயங்கு செச்சைக்
கிளர்நறுந்தார் வாடுதலிற் கீழ்ப்படுத்து கூர்ப்பாத்தின் கெழுசீர் போற்றி
யளகமலை யாண்புகுந்தம் புயங்கோட லலைந்தென்று மமா வோட்டி
வளர்புவன போகமெலா மகிழ்தளிக்குந் திருக்காத்தின் மாண்பு போற்றி.

வித்துருமம் வகிர்ந்துநுதி வியன்வயிரம் பதித்தாங்கு விளங்குஞ் செய்ய
கைத்தலமார் விரனிரையு மன்னவற்றி னுகிர்நிரையின் கவினு மேன்மை
வைத்திலகுமேற்கோளாய்வாருணநூலிதன்பாலேவந்ததென்ன [போற்றி.
வித்துவமெய்ச் சிரோமணிகள் விரித்துரைப்ப வொளிர்வரையின் விதமும்

இன்பாவி யெவைக்குமரு ளீசனுகர் தாவெழிற்பே ரின்பவாரி
தன்பாலி னமுதநிறைத் தொளிர்நீல மூடிகொள்பொற் றசும்ப ரென்ன
வன்பாச மறப்புடவி வந்தருளெங் குலக்காழி மணிக்கு நல்கு
மன்பாரு மிருஞானத் திரட்சியென வமைந்திலகு மம்மம் போற்றி. (கஙரு)

சொன்னமலை மணிச்சிகரந் தொடுத்திழியு மருவியெனச் சுணங்கு பூத்த
வன்னமுலைத் தாளவட வனப்புங்கீழ் மலைநதி*னின்மேன் மலைச்செல் வானிற்
றுன்னலரி துருவகுத் திரச்செலவி னடுத்தோன்று தோற்றம் போல
மன்னியவத் தாளவட மத்தியிற்செம் மணியார வனப்பும் போற்றி. (கΩசு)

விண்டுவைமாத் திரங்கொள்வட தளிர்விலக்கி மூவர்முதல் விபுத ரோடு
மண்டமெலாந் தனில்வசித்தப் பவஞ்சமழி வறிவிலபாத் தமைத்த தேகொன்
மண்டுசரா சரம்பிரித்த வாம்புகொலென் மயிரொழுங்கும் வகைமூன் றுவி
கொண்டமைதேற்றுதல்போன்முமமடிமிலகுதிருவயிற்றின்கோலம்போற்றி

தற்பொறைகொள் வாளரிமுற் சமமென்ப முழுதடக்கிச் சத்தா யாண்டு
நிற்பினுமிக் கன்பினருந் தவர்க்கவரு சேர்தோன்று நிமலன் பன்னு
ளற்பினெறிந் தோல்வேணி யாதிபுனை தாற்றுதவத் தாலன் னூற்கே
பொற்புறுகைப் பரிசத்தாற் புலனுகி யுளதாகு நுசுப்புப் போற்றி. (கΩசு)

தேவரொவ்வோ ருருப்பாம்வை நிகத்தோரச் சிறவூர்க்க சிவனை யங்க
மாவதொரு தட்டானே வேறுமென வதுகொண்டாங் கணிக வார்ந்து
சேவுறசீர்க் கடிதடமும் வென்றுயிறந் துரோமமிரா விசயத் தம்பக்
தாவறநேர் குழியின்வலஞ் சுழியினமர் திருநாபித் தலமும் போற்றி. (கΩஎ)

---

* இன்—சண்டு ச்சப்பொருட்டாய ஐந்தறுருபு.

ஈற்றினுற்பா தத்தாலென் றீற்றினுவப் பின்றியினைந் தீர்வா டன்று
லாற்றறபஃ றுணியாகி யதனுரிபட் டாக்கையுற வாம்பை வீட்டித்
தோற்றபுழைத் தூசவினு டொறமலேர்து தண்டமுறச் சுண்ட மாட்டி
மாற்றயர்பொன்னுற்றேர்க்குவாழைசிறுத்தாங்கொளிர்கவானும்போற்றி.

பங்கமுருச் சலமருவிக் கால்கவைப்ப வோடியனை பதுங்கித் தன்னை
யங்குரினைத் தினைந்தலவ னதனுலே நடுங்குகுளி ரடைந்து நாளுந்
தங்குதலி னதுபெயராய்ச் சார்ந்திழியப் பவனஞெண்டந் தாத்தி லோடத்
துங்கமிகு மியலெழிற்குத் துணைவேறின் றொளிர்சானுத் துணைகள்போற்றி.

கண்ணிணையாற் கயல்புகுதுங் காரகமே தன்பாடி காவ லாக
நண்ணிவரா லலேர்துவெள்ளத் துள்ளுண்டு நிலேயின்றி நலியவாவர்
திண்ணியர்முன் னில்லாது பின்னின்று பிணிப்புண்டு தெறலே செய்வன
கண்ணினவம்புக்கிடனுய்க்கடைப்படவென்றேங்கிநிகர்கணைக்கால்போற்றி

எத்துணையு முணர்ந்தாரு மியற்கருவி யாலனந்தே யீதல் போல
நித்தியமா ருயிரெவைக்கு நிகழ்கன்ம பலமொர்தட்டி னிறுவிப் போக
வத்துவொரு தட்டினிதி இ வழங்கியபின் சிற்பததா மரைக டம்பால் [ற்றி.
வைத்துளபொற்றாசகொலென்வகையமைந்தமணிப்பரட்டின்மாண் புபோ

அறனிறைநின் றைந்தமக மடக்குபுனோற் றுனுசிக ராதுமென்றுங்
குறகமடப் புறவடியு முளமொருங்க னோற்றல்புற வுறப்பி னுலுங்
குறிதரவைர்தும்மொருபாத்கொண்டனகொலெனச்சாரங்குலியுமாங்க
ணிறைதரளமவற்றினுதிநிரைத்துவைத்தாங்கிலகுமுகிர்நிரையும்போற்றி.

பழுதணங்கல்குவிதன்முதற்பலகொன்றுமின்றியண்டப்பகுதியாவும்
வழுவில்வியாப்பியமாகமலர்ந்தருட்டேன்பிரவகிப்பமணந்தெஞ்ஞான்றுங்
கழிபுலவிக்காலான்செங்காத்தொளியும்புறங்கொடுப்பக்கடிந்துகண்ணீர்
மழைபொழியுமன்பருளமலர்த்தடஞ்சார்திருவடித்தாமரைகள்போற்றி.

அண்டர்பிரான்புலவிதணிப்பான்றொழுமப்பதமறையோனுமாளம்
பண்டுமுடியண்டமெலாம்பறந்துழன்றுங்காணுதுபரிந்தநின்னுட்
கண்டனமக்கன்றுதல்சேகரமெனமாமறையெனங்கலித்தல்போல
வண்டாளமாமறைநூபுரமிசைக்குமருளொலியின்வண்மைபோற்றி.

ஆரமிகண்கெளியான்பாரேன்கழைமுதல்வேம்பாகவினை
சாரியைசார்பெயராகச்சாரிகையேகாளகண்டந்தைவேயின்
சிகொடியதாகவான்றிருவருட்பாவினிற்போலத்திகழ்பேரின்பஞ்
சாரவருள்பழுத்தொழுகுதண்குதலைமழலைமொழித்தருசீர்போற்றி.

பேட்டனமுற்பிடியுமலர்ப்பிரமனூர்பெருங்காணிற்பெதற்றேட
வாட்டுமெழில்வாய்நடையுமபிலுடைந்துமகற்சமப்பவைத்தவாய்மைச்

சேட்டியலுந்திருந்துமியற்றிருமேனித்தெய்வமணச்சீரும்போற்றி
தேட்டமெலாஞ்சிறப்பவருள்சிவகாமசுந்தரியென்றிருப்பேர்போற்றி.

வேறு.

என்றரவிறைதுதிப்ப விமாசலை யெம்பாலன்பா
னன்றுநீ புகன்றவிந்த நற்றுதி யினிது வந்தே
மொன்றிய வன்பினோது மூவரெவரவரி வற்றை
மன்றவிங் கினிதுவாழ்ந்து மறுமைவீ டடைவர் திண்ணம். (ககஎ)

அனந்தநீ யமல னங்கா ளறைந்தவா றடுத்திவ் வேல்லை
நனந்தலை முன்னரேபோ னயந்துநோற் றமர்தி யெம்மா
னினந்தர வனந்தரம்போந் தெண்ணியாங் கருளு மென்னுத்
தனந்தனி னின்றோர் காணுந் தற்பரையேவிப் பின்னர். (ககஅ)

பங்கய மலரிற் சேக்கும் பகவன்மா லாதிவானோர்
தங்கரஞ் சென்னிகூப்பித் தாழ்ந்தருச் சனைசெய் தேத்தி
யெங்களை யருடி யன்னே யென்னநின் றிரப்பநாளும்
மங்கலமளிப்பாள் பாங்கர்க் கூளியர் வதன நோக்கி. (ககக)

ஈண்டுநா மீசன் பூசை யியற்றுதற் குரிய வாக
வேண்டுப காணம் யாவும் விழைதரக் கொணர்மி னென்னுத்
தூண்டின டன்பால் யாவுந் தோற்றிவைத் தருளும் வாய்மை
பூண்டவெம் பிராட்டி யாவி போற்றிய புரிந்தீ தாற்றும். (கஉ0)

தவமதற் குரிய வங்க நானமே தருப்ப ணுதி
யவைதமக் கேது தீர்த்த மாகுமென் றமலை யெண்ணி
பவன்மலர்க் கரத்தின் மேவும் பாசினை நினைவிற் கொண்டா
ளவிர்மழுப் படையாங் கெய்தியடியிணை யிறஞ்சிற் றம்ம. (கஉக)

அப்பர சதனுல் யாவு மாடினர்க் களிப்ப தாய
திப்பிய தடமொன் றுக்கிச்சிவன்முடிச் சகிமேற் சிந்தை
வைப்பவக் கங்கை யாண்டு வந்தன ளன்ன வாவி
யிற்பய னிறைத்துத் தூய்மை யியற்றிட விமயப் பாவை. (கஉஉ)

அத்தரு மேல்வை தன்னி னருளினுன் மாபி னுடி
நத்தெறி திரைநீர் வைய நவிற்றிய காட்டு வாளா
யுத்தம முனிவர் வானோ ரிரவிமுன் னவர்க்கு ளோகை
பொத்தவம் மனுக்க ளோதித் தருப்பணம் புரிந்து பின்னர். (கஉ௩)

கூந்தலை வேணி யாக்கி மாவுரியுடையாக் கொண்டு
வாய்ந்தபை ங்குசையி னுய பவித்திர மலர்க்கை பூண்டா

ளாய்ந்தசா பாலத் தங்கி யாதியா யைம்மு கத்திற்
போந்தவம் மனுக்க ளால்வி பூதியுத் தூளஞ் செய்தான். (கஉச)

உத்தம வங்க நெற்றி மார்பக முந்தி சானு
கைத்தலங் கண்ட முன்னுக் கவினிறை யங்க மெங்கு
மெய்த்திரி புண்ட ரங்க ளணிந்தனள் வேத கெர்ப்ப
முத்திரைந் தெழுத்துஞ் சான முறமுறை செபிக்க லுற்றாள். (கஉரு)

வேறு.

தேவிமுன் னருள்பணி சேக்குஞ் சென்னியர்
சேவடி யிணைமலர் சேக்குஞ் சிந்தையர்
மேவிய பரிசனர் குழாங்கள் வீற்றுவீற்
ருவரு பொருளெலா மடைவி னீட்டுவார். (கஉசா)

போகித னுலகினிற் போகி பைந்தரு
வாகமர் மணிநிதி மருந்து தேனுமுன்
னுகிய* தெவ்வி மீண் டவனி புக்கவ
னேனைய னொருபுடை யுறுவிப் பார்சிலர். (கஉஎ)

மயனைமுற் கூவியொண் மணிபொன் னுதியாற்
பயனிறை வட்டகை கரகம் பாசனம்
வியனுற மஞ்சன கடமுன் மேதகு
நயமிகு பொருள்பல நவில்கிற் பார்சிலர் (கஉஅ)

ஐந்தரு வாதியி லாரங் கண்டிகை
யுந்தொளிக் கோளகை யோதுகங்கண
மூந்துபொன் மகுடங் குண் டலமுன் னுபவு
வந்தனர் கவர்ந்தவண் மலிவிப் பார்சிலர். (கஉகூ)

திரனுற நந்தைபத் திரைசு சிலையே
சுரபிசு மாசை யென் பெயரிற்றய்யகோ
புரமுற மைவகை க்கபில போதர
கிரையுறக் கொணர்ந்தவ னிரைவிப் பார்சிலர். (கஙo)

உலகிலெண் ‡ணும்பரி னும்ப ரிம்பரி
னிலவுபஃ றீர்த்தமு கிரம்பு பொற்றசும்
பிலகுவாய்த் துகிலொடுக் மணிந்தி ருத்தியாங்
கலைவற நடத்திவந் தமர்விப் பார்சிலர். (கஙக)

---

*தெவ்வுதல்—கவர்தல்.

‡உம்பர்—ஈறுபோலி.

கந்தமிக் கூட்டிய தைலங் காணரி
தந்தவெண் பொடியரி சனத்தின் வண்பொடி
யுந்துமா மலகத்தி னுலர்ந்த வொண்பொடி
வந்தவ ணோர்புடை மலிவிப் பார்சிலர். (கஙஉ)

அரனமர் சிவபுரக் கணிய தாயகோ
புரமதிற் கொணர்தரும் பொருவி றேனுவிற்
பாவுறு பஞ்சகவ் வியமும் பாசனத்
தானுறு மாயிடை யுறுவிப் பார்சிலர். (கஙங)

மாபுளி யமைத்தவான் கீரம் வண்டயிர்
கிருதமொண் மதுச்சருக் கரையிக் கேழ்கிளர்
பொருள்களைத் தொருங்குறப் புணர்த்த நல்லமு
தரிறப வமைக்கு நராங்க ணோர்சிலர். (கஙச)

முக்கனி யுடன்றெகு முறைசெ யைந்தமு
தக்கடம்ப லநிறைத் தமைப்ப ரோர்சிலர்
தொக்க வான் பய நறுந் துகிலி னுல்வடித்
தொக்காற் கடம்பல நிரைப்ப ரோர்சிலர். (கஙரு)

தயிர்நெயி னிறைகடஞ் சமைப்ப ரோர்சில
ரயிர்முதி ரிக்குத கம்ப லார்சுவைச்
செயிரறு கனிகளி னிரதந் தெங்கினீர்
வயினிறை பொற்கட மலிவிப் பார்சிலர். (கஙகா)

நறுங்குற டிரிஞ்சிய தேய்வை நானஞ்சால்
புறங்கருப் புரம்புழு கொளிய குங்குமம்
பிறங்கிம சலமுதற் பெய்து சால்களிற்
றிறங்கெழு கலவைகள் சேர்ப்ப ரோர்சிலர். (கஙஎ)

சொற்படு சுரியதூய வாலரிப்
பற்பல வகைய செம்பாகச் செய்கையி
னற்புத விதவமு தபூப வர்க்கங்கள்
பொற்புற வமைத்தனர் புலவ ரோர்சிலர். (கஙஅ)

அவ்வகை யுணக்களுங் கடவு ளான்றருஞ்
செவ்விய வயினியுஞ் செய்ய மாமணித்
திவ்விய பாசனத் தமைத்துச் சேர்ப்படாத்
தவ்வயின் மூடிவைத் துவப்ப ரோர்சிலர். (கஙகூ)

உயிர்ப்பினுஞ் சுருட்கொண் மெல் லிலையொண் பாக்கதி
சயத்தகற் பூரமி லவங்கஞ் சாதிக்காய்

முயக்குறு மேலந்தக் கோல மேமுக
வியத்தகு வாசங்கண் மிகுவிப் பார்சிலர், (கசய)

தொண்டகந் தமருகம் படகந் தூரியந்
திண்டிமம் வளைகிணை திமிலையானகந்
தண்டுமைத் தளமுழா தக்கை தண்ணுமை
கண்டமுன் னியம்புநர் களுல்வ ரோர்சிலர். (கசக)

ஆடக நவமணி யாதி யாற்புரி
தோடவிழ் பூகத மரம்பை தோரண
நீடுறு கழைநிரை நிறுவி யாங்கணும்
பீடுறு மணியெலாம் பிறக்குவார்சிலர். (கசஉ)

கற்பக மலரிழை யாதி காமரு
பற்பல பொருளிற்பூம் பந்தர் நாட்டியாங்
கற்புத மணிமல ரலங்க லாக்கமேற்
பொற்புறு விதானங்கள் பொலிவிப் பார்சிலர். (கசங)

அலகிடன் மெழுகுத லாங்கு வெண்சுதை
யிலகுற வொழுக்குத லிவைவிப் பார்சிலர்
புலனெலா மிபசலம் பொழீஇந றும்புகை
பல்மல ராதிகள் பரப்பு வார்சிலர். (கசச)

மரபுளி வருமலர் மாலை யிண்டைதார்
நிரைநளு மவ்வன நிலாஞ்சு வன்னக
விரைதளிர் மலர்கள்கூ விளம்பைந் தார்வழு
னுரைசெய்பல் பொருள்களு முறுவிப் பார்சிலர். (கசரு)

ஒன்பது கண்டமு முரைசெய் தீபமு
மன்புவி முழுதினும் வயங்கு மாண்பொரு
ளென்பன யாவையு மீட்டி யாயிடை
யன்புள மகிழுற வமைவிப் பார்பலர். (கசசு)

வேறு.

இன்னன பலவு மிவர்செய லாக விறைவிமுற் செபமுடித் தெழுந்து
தன்னமர் காதற் சிதளி நாதன் சபரிவைக் குறுந்திரவி யங்க
ளென்னவு மமைந்த வகையெலா நோக்கி யிலங்குமத் திருத்தளி நாதன்
முன்னுற வடாது முகந்திருந் தென்று முடிவிலாப் பூசையின் முயல்வாள்.
கருத்துறப் பிராணா யாமமுஞ் சகளீ கரணமு மியற்றிமுன் னிலங்கும்
பருத்தபன் மணிச்செய் வட்டகை களிற்சிர்ப் பாத்தியா சமனமர்க் கியநீர்

திருத்தக வமைத்துச் சிவார்க்கனைங் கரன்முற் றிகழ்தரு துவாரபூ சனைக
ளருத்தியின் முடித்தா ளகில முந் தனையே யருச்சித்தாங்கருள்பெற னின்றாள்.

ஐவகைச் சுத்தி யந்தரி யாக மாற்றியா தனங்கற்பிப் பாளாய்
மெய்வகைச் சத்தி யாதிசத் தியந்த மேதகப் பூசித்துப் புவன
முய்வகை யமர்ந்த வருட்குறி சூழ மூர்த்திபி வேசன முனுற்றிப்
பெய்வளைக் கரத்தாற் றண்டமே முண்டம் பிறங்கிடும் வத்திர பங்கி. (கசக)

மும்மையும் புரிந்தாங் கிலிங்கவா கார முன்னுறு தொருபது கரங்க
ளைமுசம் பதினைந் தருள்பொழி விழிக ளைங்கலை யாதிய வமர்ந்த [செய்
செம்மைகொள் வேணி யெண்ணிரண் டாண்டிற் றிகழ்பளிங் குருவபாவனை
தெம்மையா ளுடையான் வித்தியா தேகத் தினைக்குறி யிடைநிய சித்தாள். ()

நேத்திர நியாச மைம்முகங் களினு நிலவுறப் புரிந்துபன் மலர்கள்
சேர்த்திமென் கரங்க ளஞ்சலி யாக்கிச் செப்பியைந் தெழுத்தை யச்சிவனைக்
கூர்த்தமெய்ஞ் ஞான னந்நிட் களவி யாபியாய்க் குறித்தவஞ் சலியை
மீத்திகழ் துவாத சாந்தத்தி னளவு மெல்லென வுயர்த்தியவ் விமலன் (கடுக)

அலரிகாந் தியனுப் புருநடு வளவு மாங்ஙனின் றிறக்குபு கோடி
நிலவுகாந் தியனுய் மெல்லென விதப நிறுத்தியவ் வஞ்சலி யதனுண்
மலரிரோ சகத்தான் வந்திலங் குறுபா வனைபுரீஇச் சத்தியோ சாதத்
திலகுமக் குறிமா முடியினுய்த் துலகின் பெய்சவா வாகன மியற்றி [கடுஉ]

திருமிகு மனைய நிட்கள சிவன்றான் றிகழ்சதா சிவனருட் குறியின்
பிரமரந் திரத்தா லிருதய கமலப் பீடசா விடநித்தினி தமர்ந்து
மருவிவீற் றிருப்ப தாகிய நினைந்து வயங்குதா பனசந்நி த்தான
முரியசந் நிரோத முனுற்றியம் முடியி னும்மருக் கியங்களைந் துரவி []

ஆயபின் னிதயா தியவியா சமஞ்செய் தடியிணைப் பாத்தியம் வதனத்
தேயவா சமன முடியருக் கியந்தந் திருகர நிறைபுட்ப தான
நேயமோ டளித்தம் மாலிய நூழுதா நீக்கியோர் மருமலர் புனைந்து
வாயவன் சுகந்த தைலமுன் னுய மஞ்சனந் தரமனம் புரிந்தாள் [கடுச]

அன்னது நோக்கு கூளிய ரதற்கா மரியன திரவியம் யாவு
முன்னாங் கமைத்த சால்களி னின்று மூழுமணிக் கலசத்தின் முகந்து
மின்னிரு கரத்தாற் றாத்தர வாங்கி விமலனார் திருமுடி மீது
துன்னுமூ விரண்டங் குலவள வுயர்த்தித் துணைக்கர கலசத்தி னொழுக்கும் []

மஞ்சனம் பசுக்கொம் பக்கிரத் திழியும் வனப்பிர மாண்மா வாக்கி
மஞ்சனம் பரமன் றிருவுருங் குளிர்ப்ப மலிதைத லாதிகார் மிடற்ற

மஞ்சனம் பலுக்காங் கன்பிரெவ் வொன்று வருமுறை வரிசையி னூட்டி
மஞ்சனம் படுக்குங் குழனடைக் கௌரி வயங்கிய வவற்றிடை யிடையே. []

விரைமலர் புனைந்து நறும்புகை சுடர்கை வேத்திய மாதிதந் தலர்சேர்
புரையகல் சுத்தோ தகமுட னூட்டிப் போற்றுமென் பாலொரு பதமென்
றுரைமறத் திசமு முருத்திர மூலமுள முறவோதி யாங் கனைத்தும்
வரைபட வாட்டி யிற்றினிற் சாந்த மணிப்புனல் மணமலர்த் தோயம் (கருஎ)

மறைபுக றிரிசு பன்னகன் கமைத்த வனம்விசே டார்க்கியோ தகமு
முறைமையி னூட்டி முடித்தபி டேக மொழியுமக் கணங்கழி முன்னம்
பொறைபெழிற் றிருவொற்றுடையிட்டாம்புலர்த்தினள்புகன் றுதன் றனைத்த
னிறையை யாட்டு நர்கட் கருட்புனலாட்டி விருங்கதி யளித்திடு மியல்பை ()

யாவரு முணர்ந்தாங் கச்செய றலைநின் றின்புறக் கருதியிவ் வுலகை
யேவினன் றருளெம் பிராட்டிமஞ் சனஞ்செய் தீரமும் புலர்த்திய வளவே
தூவிய விறு சாந்தமக் கதைபைந் தூர்வைகூ விளமணிந் ததன்பின்
மேவுபொற் கடிருத் திரங்கொள பீனம் விலையிலாப் பீதநேத்திரமும். (கருகூ

நவமணி குயின்ற கோவகை மகுட நன்மணி கண்டிகை யாரஞ்
செவியணி யுபவி தந்தொடி யாதி திகழ்தொடை யிண்டைமுன் னணிந்தன்
பவிரிலு யாங்கம் வெண்டல்போ காங்க மருச்சித்தாங் கலர்நிறைத் தங்கைத்
திவியவஞ் சலியான் மும்முறை தூவிச் சேர்க ளாணவ வலியை. (கசு0)

வாட்டமெய்ஞ் ஞானம் வழங்கிய புரியும் வரத்தவாந் தூபதி பங்கள்
கோட்டுபு குடிலை வரைந்தென வதன்பிற் கோதறு பூசனை புரிவோர்
சேட்டின மதிசேர் வேணியெம் பிரான்பாற் சேர்தர முனையதற் போதங்
கூட்டுமுட் செயலை வெளியறி குறியாக் குயிற்றுமா நிவேதனம் புரிவாள் ()

கூளிய ராங்கட் பரப்பிய வுணவின் குவால்மு முதங்கர மலர்நீர்
நீளுற புரோக்சணம்நு ன மியற்றி நிரீக்கண முதலிரு நான்கென்
றுளமச் சமக்கா ரம்புரிந் தவற்றி னமைவுறும் விடத்துவ மகன்று
கோளிலா வமுதத் தவம்பெறு மறமுற் கூறியப் பாவனை குயிற்றி (கசுஉ)

இன்றுரை மறுவோ டெம்பிராற் கூட்டி யிலகுபா னியமு மீந்து
பன்னுமா சமனுர்க் கியமளித் தினிய பாகிலை யுடன்முக வாச
முன்னளித் தரிய புகைசுடர் கோட்டி முறியமா நீபமுன் னவையு
மன்னுற வெத்து வந்தாப் புரிபா னிறமலி தீபமும் வயக்கி (கசுந)

அருட்டிரு நீற்றை யங்கையா லள்ளி யணிந்துதர்ப் பணநிழற் கவிகை
சுருட்டியா லவட்டங் கவரிவீ சனமுற் சொல்லுப சாரங்க ளெல்லாங்

தெருட்டியபுரிந்துசெம்பொற்பாசனத்திற்றிருத்தியாங்கமைத்தகூவிளத்தைப்
பொருட்டிரு நாம மாயிரம் புகன்று புராதனன் சேவடிப் போதில்.

செங்காத் தொளியான் முன்னிற மறைந்து செந்நிற மாகவோ ரொன்று
விங்கிதத் தோடு சாத்தின ளமலை யெம்மனோர் மும்மலத் தியல்பை
யங்கினி தடக்கிச் சிவமய மாக்கி யடிநிழற் புகுத்துபே ரருளை
யெங்களுக் குணர்நி தரிசன மாபி னிலங்குறக் காட்டுத லிழைய. (கசரு)

விமலைபின் னறுகக் கதைகண்மா லூரம் விரைமலர் காமலர்க் காந்த
டமிலுற நிறைத்தாங் கஞ்சலி புரிந்து தருமியற் பவித்திரஞ் சாத்தி
யமலவைந் தெழுத்து மழுத்திய வுளத்தி னன்புறு செபமினி தாற்றிக்
கமைகொளச் செபமுங் கன்மமு முயிருங் கண்ணுதல் வாதமென் காத்தில்.

ஐயவேற் றருள்கென் றங்கைநீ ரலரோ டளித்தன டுதித்தனக் தாநூற்
றுய்யமாண் சிவாங்கி வினைமுறை முடித்துத் துதிசத வுருத்திர மாதி [க]
செய்யன புகன்றிம் முறையின்மூப் போதுந் தினந்தொறுஞ் செய்துல குயிர்
ளுய்யநற் சானம் யோகமே சாந்தி தாங்கிக ளுறத்தழீஇ நோற்றாள். (கசஎ)

வேறு.

ஆன பாலினைப் பானெயை யம்முலை வெண்ணெய்
மேன கக்கொளுஞ் செய்தியின் விரிந்தெங்கு நிறைந்த
மான மெப்பா சிவம்வெளி வயங்குறக் காணுந்
தூந லச்செய லருச்சனை யென்பதூ றுணிந்தோர். (கசஅ)

அனைய தன்றியு மைம்புலப் பகைதெறு மறவீ
ரினிது கேண்மினீ ருலகுயிர் யாவையு மீன்ற
புனிதை யொப்புயர் விகந்தவள் பூரணி பொருவாத்
தனித வாச்சிய மறைமுழு துணர்தாத் தகையாள். (கசகூ)

எம்மை யெம்மையும் புரத்தலே யியற்றொழில் பூண்ட
வம்மை யப்பர சிவத்தொடு மபின்னையா யன லம்
வெம்மை தண்மைநீர் விரைமலர் மணியொளி வியோமஞ்
சும்மை பால்சுவை பண்ணிசை முதலிய தொகைபோல். (கஎ0)

ஏக மாகிநின் றறிவிச்சை செயல்களா யினையர்துந்
தேக மாதிகொள் சிவரை யுய்விப்பான் சிறந்த
வாக மவ்வனைத் தானுங்கொண் டன்னதற் கியைய
போக மோக்கங்க டருந்திரு நாமங்கள் பூண்டு (கஎக)

செழுவு மாசகல் கூடத்தப் பிரமவைக் கியமே
யுழுவ லன்புகொண் டுறுபசு பதிகள்சய் யோகந்
தழுவு மின்னன தத்தம நெறிபுரை சாற்று
மழிவி லாச்சிவ சாயுச்சி யம்பெறற் கமைந்த. (௧௭௨)

உத்த மோத்தம நிபஞ்சிவார்ச் சனையென வுலகோர்
வைத்த லத்தினு மலகத்திற் கண்டுளந் தணிந்து
மெய்த்த பத்தியிற் சீலத்தின் விதியினிற் புரிந்தே
பொத்து மாசறுத் தானடிப் புகுதுபே ரின்பம். (௧௭௩)

உற்று வாழ்வுறக் கருதியவ் வொருபதி முதலா
மற்று மிப்புவி யிடைப்பல தலங்களின் வதிந்து
முற்று மந்திரங் கிரியைபா வனைவிதி முறையிற்
கற்றை வேணிபூ சனைபுரிந் தினிதுகாட் டிடவும். (௧௭௪

வேத வாகம புராணங்க ளாதிய வியனூல்
சாதுர் மாமறை யந்தங்க டன்னிகர் தானு
மேதை யாகமாந் தம்மெனு மெய்கண்ட சுருதி
சீத நால்வர்வாக் காதிய திராவிட வேதம். (௧௭௫)

பன்னு மின்னமெய்ந் நூலெலாம் பதிப்பொரு ளொன்றே
யுன்னு மப்பதி யுமாபதி யேயவன் றனே
முன்னு சாருவ வியாபக னநாதிமா முத்தன்
மொன்று டைச்சரு வஞ்ஞதை யாதிய குணத்தோன். (௧௭௬)

அவனை யல்லவ ரரிபிர மேந்திர ராதி
திரியர் மாலுட னாதியர் யாவருஞ் சீவ
ருவரி சீர்புரை வியாப்பியர் சிற்றறி வுடையோ
ரெவரு மாற்றல்சா லநாதிமா மலபெத்த ரெனவும். (௧௭௭)

அம்ம லத்தவ நீங்கியவ் வான்மகோ டிகடாஞ்
செம்ம கத்துவ சிவத்துவப் பேற்றினைச் சேர்ந்தே
யம்மை யப்பரு யமர்ந்தரு ளவ்வர னடிக்கீழ்
மெய்ம்மை புற்றுவாழ் பேரின்ப மேவுதற் குரிய. (௧௭௮)

சிறந்த காரண மகம்புற மிரண்டினுஞ் சிவனை
நிறைந்த வன்பொடு நாடொறு நியதியிற் புரியும்
விறந்த தொண்டெனுஞ் சிவார்ச்சனை யென்னவு மேலா
யறைந்த வாருயிர் பேறுமீ தில்வழி யறவீர். (௧௭௯

ஆவி நீங்கிய வாகமே யொப்பன வாக
மேவு மேனைய தவமெலாம் விபலமா மெனவு
மோவி லாதுபன் முறைமுறை கையெடுத் துரைத்தே
யாவு மீன்றவ ளியற்றியிங் கிலகுறக் காட்டும். (கஅ0)

நேரில் பூசனைப் பெருமையை விளக்கவு நிலையா
யாரு மம்மரி னுய்த்துணர் வின்மையி னானே
சோரு மாந்தரை மருட்டுவஞ் சகத்தினே துணியே
மோரி னும்பிர மம்பிறி தில்லையென் றுரைத்தும். (கஅக)

பினைய கண்டித மாம்பரி பூரண பிரமந்
தனையொர் மூர்த்தியிற் கண்டிதப் படுத்துதா பனமாம்
வினைய பூசனை புரிபவ ரறிவிலா வீண
ரெனவும் பூசகன் பூச்சிய னென்றிரு பொருள்கள். (கஅஉ)

இன்ற தாகவிற் பூசனை யாற்பயன் யாதோ
வென்றும் வானர கிருண்மல பந்தமே மோக்க
முன்றி கழ்பொரு ளியாவையு முயலிடத் தலவை
யொன்று காயவம் போருகங் கமடத்தி னுரோமம். (கஅந)

இலகு வந்தியின் மைந்தனே யிரச்சுசர்ப் பாதி
புலனு ளுதவிப் பொருள்களிற் பொய்மையே யென்றுங்
கலதி வாய்பறை யாகநாக் கடிப்பறைந் தருணா
னலனு றப்புக ளியதிகண் மேற்கொடு நடத்தும். (கஅச)

வலிம னத்திலார் மாட்டுட லாதியை வருத்தி
யலைத லன்றியோர் பயனில வயனெறி யதனி
னிலகு விற்பய னுறுநெறி யிந்நெறி யெனவந்
நிலையர் தம்மனச் செலவினுக் கிணங்கவே நிகழ்த்தும். (கஅரு)

போத காரிய ராயுவ மாதிகள் பொருந்த
வோதி யாரையும் வசித்தவ ருவந்தன ளிக்கு
மேத யார்பொருள் கொண்டுபோக் கியப்பொரு ளியாவுங்
காத லாற்கொளார் வித்தவை நுகர்ந்துளங் களித்தே. (கஅசு)

தீமை யொன்றிலாச் சிவனடி யார்களிச் சிறந்தோ
ராமெ னுவுல கறிந்தவர் தடுத்திடற் காகத்
தாம நீறுகண் டிகைமுதல் வேடமுந் தாங்கிக்
காம மாதியுட் காந்தநற் றொழில்வெளிக் காட்டு. (கஅஎ)

நாமுந் தம்புக ணம்பியே சார்ந்தவ ரெவரு
நாம வெச்சிர யத்தரு நன்னெறி நயந்தே
சேம ரருல கத்திடைச் சிற்சிலர் திரிவார்
தோமு ளாரிவ ரூழ்வலி சொல்லுதற் கெளிதோ. (௧அஅ)

இனைய பாதகர் வஞ்சக மார்க்கமெய் யெனவே
கனவி னுங்கரு தாமலெம் மன்னைதான் காட்டும்
புனித மார்க்கநின் றுலகுய்ய வீண்டிது புகன்று
முனிவிர் காளுமை யாங்கன முயறவஞ் செயுநான். (௧அ௯)

ஆண்டு நாறுசென் றிடப்பிரி வாற்றெரு தவன்போ
லீண்டு மாதவங் காண்டர வெள்ளிவெற் பிகந்து
மாண்ட குங்கட மதிமகம் பருவம்பொன் வாரம்
பூண்ட நற்றினத் தறனிறை பிறைமுடிப் புனிதன். (௧௯0)

வேதன் மேதரு மாதவ ராதிய விபுதர்
மாதபோதனர் நந்திமுன் னோர்குழீஇ வயக்கும்
பாதசேவையர் காவையர் துதியினர் பரவிப்
போத மால்விடை யூர்ந்துமை திருமுனம் போந்தான். (௧௯௧)

போதல் காண்டலும் பொன்னெனப் புடவியி னெழுந்தா
ளாத ரப்பெரு வெள்ளமீர்த் திடவிதந் தமலன்
பாத மீதுறப் பலமுறை நிலமுறப் பணிந்தா
ளோத கம்பக மழையுட னினைந்தன ளிமலை. (௧௯௨)

உளத்தின் மிக்கெழு மன்பினைப் பானரு ளொருவா
வளத்தின் வாய்மைகள் வழுத்திய மனக்கொளீஇ வருந்தன்
களத்தின் விம்மலுத் தழுதழுத் தலுமுறக் கனற்கட்
குளத்தி னூனவாய் குழறிய துதிபல கூறி. (௧௯௩)

மறைபி னந்தழ மொருசிறி துணர்வுற மாபி
னிறைவ நீயிவ ணெய்திய வெய்திய தென்கொ
னிறைகொ ணற்றவ மெனக்கெனப் புவிதொழ நிகழ்த்து
முறைபி னின்னன பற்பல வற்புரை மொழிந்தாள். (௧௯௪)

அடியின் வீழ்ந்துமுன் வேண்டியாங் கம்பகங் குளிர்ப்ப
நடன நாயக காட்டியிக் கருளென நயவா
நெடிது போற்றுபு நின்றன ளத்துணை நிறைநீர்த்
தடமு னேற்றிடு மனத்தனு தியாவட் சார்ந்தார். (௧௯௫)

சார்ந்த நாகர்க ளாங்கரன் ருளிணை மலர்க்கீழ்க்
கூர்ந்த வன்பொடு பணிந்தெழுந் திருகரங் குவியா
சேர்ந்து நின்றனர் துதிபல புகன்றனர் நிமல
ஞர்ந்த தண்ணருள் வெள்ளத்துட் டிளைத்தன ராங்கே, (கசுஎ)

முன்னெ ழுந்தரு ளண்ணலக் கௌரியுண் மோத
மன்ன வவ்வனத் தழகிய சிற்சபை மாடே
மின்னி லங்குபன் மாமணிப் பீடிகை மீது
கன்ன லஞ்சொலெ மன்னைகண் களிப்புற நின்றான். (கசுஎ)

மந்த காசமு காம்புய ஞகியவ் வாத
னுந்து மற்புத வடிவுகொண் டருளியு வுன்னி
யிந்து கோடிநேர் மேனியி னைந்துதோள் வலத்த
மைந்த சூலமொண் மழுத்துடி சிலீமுகம் வாளும். (கசுஅ)

வாமம் வீசிய மலர்க்கரம் வன்னிநீள் பாசந்
தோமில் கேடகம் பிணுகமுஞ் சொற்றிரி சுபன்னங்
கோம ளந்தரு சுவன்னகங் கொக்கிற காதி
நாம மார்தரு மணிப்பணி விதுமுது நதிமுன். (கசுக)

கலவு றப்பெறு செக்கர்வே ணியுமிரு காதின்
வலமும் வாமமுங் குண்டல தாடங்க வனப்பு
நிலவ பாற்கர நயனமு நெற்றிக்கண் முகிழ்ப்புங்
குலவு மாமணி கண்டமு மாரத்தின் கோப்பும். (உ00)

மனுமூன் ஹாலுந்தோ லாடையு மறைச்சிலம் பார்ப்பு
நனியி லங்குருக் கொண்டுமை காண்கென நவின்று
சினவு மாமுய லகன்புறம் வலப்பதஞ் சேர்த்தி
யனக ஞங்குறு மனந்தனே யணியுற வழைத்தே. (உ0க)

பாங்கு மாமணி ராசி*வி ராசித படமேற்
றுங்கு மாறுவா மாங்கிரி குஞ்சிதந் தரித்துத்
தேங்கு வாமசா னுவினிற்கார்க் கோடனைச் சேர்த்தவ்
வோங்கு மங்கிரி வாசுகி தனையுறப் பிணித்தே. (உ0உ)

வனை மாப்பணி யாவையு மேனைய வுறுப்பிற்
கான மாப்பணி யாவணிந் தாடக யேருத்

---

* விராசிதம் - விளக்கம்.

தான பூவதில் வனத்தென வுரைத்திடத் தயங்கு
ஞான மாசபை யாப்பணின் றருளின ஞதன். (௨௦௨)

வேறு.

இந்துவின் காந்த பருப்பத மாக வெம்பிரா னிற்றுரு வால
கந்தா நீர்பெய் கந்தா மாகக் கவின்சடை நடித்தநாத் துடிக்கண்
வந்தெழு மோசை மணிமுகின் முழக்கா மலர்விழி பொழியருண் மழையாப்
பைந்தொடி யுமையா மோடதி குளிர்ப்பப் பவனமுற் றுயிரெலாந் தளிர்ப்ப

கொன்றையங் கானி விருண்மலக் கிளைகள் குமைத்துயர் சிவானந்த போக
நன்றருந் துறவோன் பியற்றுமா தவரா மூழவர்க ளயந்தலீ தருந்த
வென்றவெண் மதிமண் டலங்கர் தாள மெண்கண னிருகரம் பிடிக்க
நின்றமால் குனில்கொண் டதிர்முழ வடிக்க நிரம்பிசை நாமகழ் படிக்க. ()

ஐம்முக முரச மருணந்தி முழக்கந் தருவக மட்டைஞ பகமே
விம்மிசை யடமே கந்திரி புடைசம் பையென விசைமறை விளம்புங்
கொம்மைநற் றுள மேழுமவ வகையிற் குலவுறக் கௌரி தாண் டவத்தை
நம்மையா ளுடையா னம்மையுள் ளுவந்து நயனங்கள் களிப்புற நடித்தான் ()

கனியுமை நயன வனிகளாம் நாட கப்பத கமலநன் மதுவை
யனியொலி யதன்கட் சிலம்பொலி யாகவருந்துபு களிக்கட லழுந்தக்
கிளர்மணி ராசி விராசித வாமாங் கிரிமுடி தரித்தா னிறையு
ளளியிக வேணி யொளிபுவ னமிற்போ யன்னதைக் கதிரூல காக்க. ()

நீற்றொளி பிறங்கி மிக்குமண் டலந்தா னிற்றலென் கொல்லென நிலவ
வீற்றுறு மிரைங் கரங்களென் டிசையு மேவுற வுமைதிரு வுளத்தை
யேற்றகட் கருணை நோக்கிரு ளிரப்பி யெழின்மிகு மனையதாண் டவம்பப்
வேற்றமை திகழ நடித்தல்கண் டரிமுன் விண்ணவர் முனிவரர் தொழுதார்.

சனகர்முன் னுல்வர் துதிபல தொடுப்பத் தகுமிரு வோரிசை மடுப்ப
வனகபா ரிடர்தூந் தரவொலி யெடுப்ப வரம்பையர் மணிவிளக் கடுப்ப
வனமலர்க் கரத்தின் மலரொளி கடுப்ப வானவர் மலர்மழை யுடுப்பக்
கனகதூந் துமியந் நாத்திசை படுப்பக் கன்றுநல் புரிகடங் கண்டாள். ()

சலதரங் கண்ட சாதகம் போலத் தபனனைக் கண்டதா மரைபோ
னிலமதி கண்ட சகோரம்போ லுவகை நிமிர்தர நெஞ்சநெக் குருகித்
தலைவன்ன் னடக்கண் டியான்புரி தவந்தான் சபலமா கியதனி யென்று
லகிளை னந்த வெள்ளமுள் ளமையா தாங்கெதி ரொடுத்தலே போல. (௯௪)

அரியநற் சிவாதி காமினி சிவாதி சுந்தரி யம்பிகை கௌரி
யுமைபிர சன்ன கோமள வதனும் புயத்தின ளாகியுள் ளுவந்து
வரசிவ கிருத சனனமா வுதறி லங்கன மங்கள சொருப
பரமகல் யாண மங்களப் *பிரத மாநடம் பார்த்திவை துதிப்பாள். (௨௧௧)

வேறு.

ஓதும் பவாதி யட்டகப்பே ரொடுசேர் தாரநி யெட்டுருவன்
காதும் பவாம்பு நியின்முழுகிக் கலங்குமு லருக்கா தாரன்
நாதன் பவனே சிவன்கோடி ரவிசங் காச மேனியன்சொல்
வேதன் பவாய புவிமூர்த்தி விமல பரம சிவாயநம. (௨௧௨)

விறல்கொண் மகாச லாதியவாய் விளைசா ருவசா காமூர்த்தி
யிறைகொள் சீத ளாம்புவரு டத்தா லிமையோர் நரர்மிருகம்
பறவை முதல தரு பூதல பயிர்முன் னிருபா லுயிர்புரப்போன்
முறைமை புரிசர் வாயவம்பு மூர்த்தி பரம சிவாயநம. (௨௧௩)

பசர்மா சண்ட வெங்கிரண பந்தி களினுற் சகம்விளக்குந்
தகையோன் ககன சரகிரக தாரா தாமன் கபாலகர
னிகமார் போக மோக்கமரு ளிறைவ னளவாக் கருணைநிதி
தொகுமீ சான ரவிமூர்த்தி தூய பரம சிவாயநம. (௨௧௪)

வலமார் வலாரிக் ககல்சுவர்க்க மருவ வருள்வோன் வேள்வியர்க்கப்
பல*தா யகனு பத்தேவர்க்கும் பாற்றி ள்வேயருான் பசுபதிப்பேர்
நலனு லமைந்த சருவான்ம நாத னமலன் பசுபதியாம்
புலமார் யமான மூர்த்தியருள் பொழியும் பரம சிவாயநம. (௨௧௫)

உரமார் சண்ட மாருதத்தா லுலக முழுதோம் பாதாரன்
சரமார் பலபே தானிலத்தாற் சருவான் மாக்க டமில்வசிப்போன்
வீரமார் தருமுக் கிரப்பெயரால் வன்னி சகனு யமர்ந்தருள்வோன்
மூானு ருக்கி ராயவளி மூர்த்தி பரம சிவாயநம. (௨௧௬)

இயங்கு கடோர வன்னிரவி யிந்து விலோச னத்திரையன்
றயங்கு பாலாம் பகமதனுற் சம்ப ராரி புரந்தகிப்போன்
பயங்கொள் கடோர வுருத்திரநற் படிவாற் பவஞ்ச முற்றொழிப்போன்
முயங்கு முருத்தி ராயவன்னி மூர்த்தி பரம சிவாயநம. (௨௧௭)

இரவி கிரக முதலமா ரினமா லிகையன் றனதொளியில்
விரவு சிருட்டி யுறவெளியாய் விரியு மண்ட ரூபங்கண்
மருவு முதனுப் பண்ணிறுதி மருவாப் பெருமைத் திருவுருவன்
வருபீ மாய நபமூர்த்தி வரத பரம சிவாயநம. (௨௧௮)

---

*பிரதம்-கொடுப்பது. *தாயகன் - கொடுப்பவன்.

சகல பயிரு மாவமுத கலையால் விருத்தி தரப்புரிவோ
னகில வுலகுக்.ககனசா தேசா லொளிசெய் தருண்முதல்வன்
றிகழு மிதழி சானவிகட் செவிமுன் னமர்சந் திரமௌலி
தகைமை மகதே விதமூர்த்தி தரும பரம சிவாயநம. (௨௧௧

வேறு.

பாவுசங் கானே யொப்புயர் விகந்தோன் பராற்பரன் றனக்கிவை பணிவென்
றூரிமையிற் செனரி யகிலலோ கத்தி னுயிரொலாந் துயர்தரு மலநோ
யரியவீ தோதி யகற்றுற நினைந்தே யடிக்கடி யிறைஞ்சின டுதித்தாள்
வருபசங் குழவிக் குறும்பிணி நீக்க மருந்துதா யருந்துமா போல. (௨௨௦

இவ்வியற் றுதிசெ யுமைமுகாம் புயத்தை யென்றுமன் விகசித மியற்றுஞ்
செவ்விய ஞானு னந்தசா கரத்திற் றிகழ்ந்தன வரதநின் றருளுந்
திவ்விய தேசோ மயசொரு பகமா தினகர னென்றுரை யாடு
நவ்வியங் கரத்தோ னருண்மிக நோக்கி நங்கைகே ளென்றிது நவில்வான். ()

உலகெலாந் தழைப்ப நீநினைந் துமையீண் டுரைத்திடு பிருதுவி யாதிப்
பலர்புக ழட்ட மூர்த்திக ளுடனுப் பவாதிமந் திரங்களோ டியைந்தே
யிலகியோ துநர்கட் கிட்டகா மியங்கள் யாவையு மீவதா யெமக்கீண்
டலகிலா னந்த மளிப்பதா யமைந்த வருந்துதி கேட்டுள மகிழ்ந்தேம்(௨௨௨

நீயுளம் விழைந்த வரமெவை யுரைத்தி நேரிழா யெனவுல கருளு
நாயகி மகிழ்ந்தெம் பெருமவின் டுள்ள நயப்புற நின்னையான் றுதித்த
மாயிருந் துதியைப் பாதகம் பலவு மருவிய பதிதரே யெனினு
மோயமிக் குரைப்பி னவையெலா மொருங்கே நீங்கிமா புனிதரா யிடுக.

பின்னல கிலவாம் பல்பொருட் பெருக்கும் பெறற்கரு நன்மகப் பேறு
முன்னுற யாவும் பெற்றவாழ்ந் திம்பர் முகுந்தனு தியர்க்குமெட் டாத
நின்னடி நிழலிற் பின்னுற மருவி நித்தியா னந்தராய் வாழ்க
வென்னவ நீயித் தலத்திலென் னேடு மிடையறு திருக்கவென் ஞான்றும்.

நின்புரி சடையி னின்றமுன் னமுவி நிரம்புசா னவிநதி யொருவா
றென்பெயர் வாவி தனிலன வரத மிகபர மோக்கதா யகமாய்த்
துன்புற சகல பாவமோ சனஞ்செய் தூயதா யமர்கவென் றமலை
யின்புற வுரைப்ப விறைவினு யுமைரி யெண்ணியாங் காகென விசைத்தான்.

அறைதரு வியந்தோ விறுதிவாக் கியந்க.ளாலுமை விளுவிய தவைகள்
விறல்விதி வினைய மாயுயிர்க் குறுதி விளைத்தளந் தெளித்திடற் கென்ப

நிறையுமா தவத்தி ருமைக்கரு ணிமல னிலத்தினிற் றிலக்மென் றுரைக்குஞ்
செறியுமவ்வி தழிவனத்திலெஞ்ஞான் றுஞ்சிவையொடுஞ்சேர்ந்துவீற்றிருக்கும்
கண்ணுதற் சிவன்செய் திருநடங் கௌரி காமமுற் றினிதுகண் டமையா
லெண்ணுநர்க் கெவையு மருள்சிவ காம சுந்தரி யெனும்பெய ரேய்ந்தவ்
வெண்ணகைக் கொடியத் தளியினீசான விசும்பில்வீற் றிருந்தருள் புரிவா
ளண்ணறன் னேடுங் கிரீடைசெய் தென்று மமர்ந்துவீற் றிருந்திட மாதோ
இறையரு ணடனம் புரிந்தவத் தினத்தி னிலங்குகோ கிருததீ பாதி
குறைவிலர்ச் சனைகள் சீதளி யாற்குக் குளிர்தரு மகாவபி டேக
நிறைசுவை வருக்க நிவேதன வகைக ணிகேதனம் வலம்வந் மறையோர்க்
கறுசுவை யுணுக்கள் கூவிள மிதழி யாதியா லருச்சனை முதல. (௨௨அ)

புரிகுநர் விசேட தினங்களின் விசேட பூசனை பொருந்துமெய் யன்பாற்
றருந்தந ரிரதோற் சவமுறை மைமிற்செய் தகமைய ராதுதரி சிப்போர்
துருவிமெய் யடியார்க் கமுதருண் மாகே சுரர்கடம் பூசனை தொடங்கும்
பெரியரின் னவர்பல் போகமு நுகர்நதெம் பிரானடி மலர்நிழல் பெறுவார்.)

என்றுரைத் தருளு மலயமா முனிதா ளிறைஞ்சுபு முனிவரெந்தாய்
துன்றுசீர்க் கௌரி தாண்டவங் கேட்டுச் சூழ்வினை யொழிந்தனங் கமலை
யன்றரி பாலென் வினவினன் வியையா தறைந்தன னிவ்வனத் தவள்செய்
நன்றியென் சிவன்பாற் பெறுவா மென்னை நயந்தருள் கெனமுனி நவிலும்.

## கௌரி தாண்டவச் சருக்கம்.

முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௭௪௫.

---

## இலக்குமிதாண்டவச்சருக்கம்.

திருத்தளி யமலன் வாமச் செல்விபேர் நடனு னந்த
மருத்தளி நுமது கேள்வி மடுத்தனங் கமலை மால்பாற்
கருத்தளி யுறவி னுமிக் கானினேற் றிருந்து கண்ட
வுருத்தளிர் நடன மேன்மை யுறுவர்கா ளோது கிற்பாம் (௧)

கீரசா கரத்தி னுப்பட் கௌர்மணித் தீவின் மேவுஞ்
சாருவ போக மிக்கூர் சுவேதமா புரத்திற் சாலத்
தேருறுப் பமைந்தி லங்கு சினகர மதனின் மிக்க
பாருறு முடிப னந்த பரியங்க மதனின் மேவி. (௨)

காண்டகு சிரத்திற் செம்பொற் கதிர்மணி முடியின் றேசும்
பூண்டகுண் டலமு மெல்லாப் புவனமுந் திகழ்செய் வாயு

பாண்டமெக் கமலப் போதின் மலர்விழி வனப்புந் தோளிற்
சேண்டவழ் கதிரை நக்குந் திகழுமங் கதத்தின் சீரும். (௩)

வரதகல் லபய மாழி வாரண மமைந்த நான்கு
காமுமா மறுவி னோடு கவுத்துவ மணிகொண் மார்பும்
விரவுறு சுவண வாச விளக்கமுங் கழல்க ளார்க்கு
மருவளர் நறிய செந்தா மரையடித் துணையின் மாண்பும், (௪)

சிரநுதன் மார்பு முன்றாத் திருத்திய வங்க மெங்கு
மருவுமுத் தாள னந்தான் வயங்குபுண் டரங்கொ ணீற்றிற்
றிரைமறி கிர வாழி திருவுருப் போர்த்த லேய்க்கும்
பொருவிலா வெழிலு மீசன் விழிமணி புனைந்த பொற்பும். (௫)

கருமுகி லனையநீல மேனியுங் கவினுற் றோங்க
வரிவையர்க் கெடுத்துக் காட்டு முவமனா யமருஞ் செல்வத்
திருமகள் பொறையின் மிக்க நிலமக ளென்று செப்பு
மிருவரு மிருபான் மேவி யின்புற விருப்ப வேனை. (௬)

எண்டரு விகங்க ராச னெண்டிசைக் காவ லோர்மற்
றண்டர்மா தவரெண் சித்தி யாதியோர் பணிந்து போற்ற
வண்டயின் மதுவார் செந்தா மரைமலர் விழிமு கிழ்த்துக்
கொண்டறி துயில மர்ந்தான் குவலய முண்ட கோமான். (௭)

அனந்தவி னெழுந்த மாயோன் சிரமிசை யங்கை கூப்பி
நினைந்துதென் முகத்தி ருந்து நிமலதன் பொருட்டிக் காளிற்
கனந்தரு கண்டன் செய்த தாண்டவங் கருத்துட் கொண்டு
வனந்திகழ் கண்ணீர் பாயப் பதுமவா சனனுப் மன்னி. (௮)

ஆனந்த *பரித ஞா†மோத வடிவி மேய
வானந்தம் மிக்கு வேணி வாதனை வாம பாக
மேனந்தம் விளைக ரப்பனென் மீற்றிருந் தருளும் வான்மை
சானந்த முறழ்மி டற்றெங் கௌரியைச் சாவித் தானும். (௯)

அனந்தர மிவ்வா றன்றே யூர்வசிக் குளத்தி னென்றுங்
கனந்தரு மலர்மென் கூந்தற் கயலிய னயன நல்கூர்
நனந்தலை யரம்பை யூரு நனிர்குனிர் புரையுஞ்சானு
வனந்தரு முகிழ்க் கொங்கை மலயா சனித்த நங்கை. (௰)

புசனைத் தவத்தின் பெற்றுப் புதுமலரிதழிக் கானி
லீசனை நடனங் கண்டா னென்னியாங் கன்பர் தேர்ந்த

* பரிதன் - நிறைந்தவன். † ஆமோதம் - கொன்றை.

பாசனை புரிய நல்கப் பாவையே யான்மற் றியானு
மாசனை யனைய மானுந் தோன்றிட மொன்றே யாமால். (௧௧)

பெட்டுநான் வழிபட் டேத்தும் பிரியகா ரணியப் பூவை
தட்டகல் பிருகு பூமி தம்மொடு மங்கி ருத்தங்
கிட்டிமுன் காணப் பெற்றேன் கிளக்குமவ் வனத்திற் றனே
யிட்டமிக் கமர்கின் றேனு லமிசத்தோ டென்று மன்றே. (௧௨)

அப்பரிச மர்கின் றேனுக் கங்கடந் தன்னின் மேலுந்
தப்பரு மார்வங் கூர்வ தென்றிவை தானே யெண்ணிச்
செப்புத லின்றி யானெய் சித்திர பானுச் சேர்ந்த
தொப்பவுண் ணெகிழ்ந் திருந்தா னுவணகே துயர்த்த செம்மல். (௧௩)

வேறு

மனநெகிழ்ந் துருகு மெய்ம்லயிற் றிருவம் மாயவ னடிதொழு திறைஞ்சிக்
கனமுடைந் திரிய வந்தரத் தோட்டு காத்திர நேத்திர கமல
மனனமர்ந் தெனைநன் மார்பகத் திருத்தி வரமருள் பரமகல் யாண
புனைதுள வலங்கற் கந்தமார் ‡கந்த பூதர சிதர போற்றி. (௧௪)

வாரண நேமி கதைசா சனம்வாண் மலர்க்கரத் தெடுத்தருள் வாத
வாரணம் பரவு மாதவ போத வங்கண பங்கய வதன
நாரண முகுந்த கேசவ பதும நாபபா ரணாவ நீத
பூரண முராரி வாரண சோகம் போக்கிய பாக்கிய போற்றி. (௧௫)

குலமறை கவர்ந்து சலதியின் மறைந்த கொடியனைத் தடியமீனுய்த்தன்
செலுவினுட் கடனீர் முழுதடைத் துடனத் தெம்மடித் தம்மறை மீட்டு
மலரய னிடத்து நிலையுறக் கொடுத்த மாதவ யாதவ வாத
புலனெறி நீத்த நிலையின ரேத்து புராதன சுராதிப போற்றி. (௧௬)

ஆதா நினைந்தாங் காதரம் பெருக வாதரங் கடைவுறு வருளாற்
பூதரந் தனைக்கைப் பூதர மலரும் புவிநிழற் கவிகையாப் பொறுத்தே
காதர மோட்டிக் காதர நீட்டிக் களிப்புறத் துளிப்பெயல் கடிந்தோய்
போதரச் சுரர்முன் போதர விறைஞ்சும் புண்ணிய கண்ணிய போற்றி. (௧௭)

என்றுரைத் திறைஞ் யஞ்சலி புரிந்த தென்னிவ னுளங்கொண்ட தென்னை
யொன்றுமூ வுலகுக் கதிபனீ வணங்கு முயர்பொருள் யாதஃ துணக்குந்
தன்றுவா னவர்க்கு மூலகா ரணமாய்த் துலங்குறு மதனியல் சூழின்[த்தாள்
மன்றவிம் மிதமா மென்றனக் கதன்சீர் வகையெலாந்தெரித்தி யென் றுரை

‡கந்தம் - தோள்.

பிரமர முரல முகையவிழ் கமலப் பெற்றியிற் பொற்றிரு மகடன்
வரிவிழி நோக்க மருவுற காய்ந்து மந்தகா சத்தொடு வயங்குந்
திருமுக மலர்ந்து கருமுகி லனையான் றேங்கமழ் பூங்கடிக் கையங்கா [ம்
ளரிதுமுன் னிகழ்ந்த சரிதமிங் குரைத்து மணியிழாய் கேட்டியென் றறையு
புகலுமுத் தொழிற்கு மூவர்க்கு முன்னோன் புந்திமுன் மூன்றுமுக்குணமும்
பகுதியுங் கடந்தோ னுளனொரு புருடன் பராற்பர தரனவ னவனே
நிகரின்மெய்ப் பாதத் தவபர சிவன்மன் னித்திய னவனில்யா முதித்தேஞ்
சகளமா முருவிற் றனதரு ளாகுஞ் சத்தியை யிடத்தினிற் றரித்தான். (௨௰)
அனையளைவ் விதழி யடவிமுன் னடுத்தா ளாங்கன மருச்சனை புரிந்தாள்
கனையிருண் மிடற்றெங்கண் ணுதற்பெருமான்காட்சிநேர்பெற்றனள்கதிர்கால்
பனிவரை யுயிர்த்த பான்மொழித் தொடிக்கைப் பவளவாயுமையவட்பார்த்தப்
புனிதனுன் னுவகை நனியுற வருளிப் பூவைகேளீதெனப் புகலும் (௨௧)
பொன்னலர் கடுக்கை நமக்கதி காதல் புரிதலி னதனையிப் புவியின்
மன்னுறக் கிருத மாலையென் பெயரன் மலிவுற மலர்மகன் படைக்கு
மன்னகற் றருவை யலர்செறிந் திலக வடைந்துகாண் பவனெவ னவன்றன்
றன்னுறு கனன பாவமுற் றொழிக்குஞ் சரதமீதென் றுரை தந்தான். (௨௨)
அளிமுரல் கமலத் தணங்குகே ளுமைசெ யருச்சனைப் பயத்தினு லவட்கு
நளிர்மதி முடியோன் காட்டிய நடன நாகர்பூ மகன்சன காதி
தெளிவுறு முனிவர் பிருகுவா னருக்கர் திங்கண்முன் னிமையவ ரோடுங்
களிமிகு மவனி யாரொடுங் கண்டேன் கண்களாற் பெறுபயன்கொண்டேன்
அந்திவெம் பெருமான் பைந்தொடி யுமைகேட் டருள்வர மாங்கனமளித்தாங்
கிந்திரை யென்பாற் பிறக்கவோ மரிய வின்னருட் சிறப்பு நோக்கருளி
முற்றுமச் சபையின னந்தவே யெனைக்கூய் முகுந்தநீ யுகந்தநம் பூசை
சந்தத மியற்றி நந்தம தருகு தங்குகென் றங்கரு டந்தான். (௨௩)
மன்றலங் கூந்தல் வரிவிழி மலர்க்கை மணிமுலை மதிநுதால் கேட்டி
யன்றொர்நா ளிரணி யாக்கனென் றொருவ னசலமே யனையகாத் திரத்தன்.
வன்றிற லவுணன் வகிர்மதி புரையும் வக்கிர *தமிட்டிர னுளனங்
கன்றிய மனத்தன் கொடுந்தொழி லுனே கைவிடாப்பொருளெனுங்கருத்தன்
அம்மற மிகுந்த வரக்கனேற் றடைந்த வருவர வலியினு லவனிக், கொம்மை
வெம் முலையைப் பாயலாச் சுருட்டிக் கொடுங்கரை கடல்புகுந் தொளித்தான்
விம்மலுற் றயர்ந்தார் மண்ணவர் விண்ணோர் வேறொரு புகலிட மின்றி
யெம்மைவந் தடைந்தா ரிறைஞ்சின ரினைந்தா ரிதுபொரு துளமிக விரங்கி
மேலுயர் வரைக ளெவற்றினு முயர்ந்த மேருவி னெண்மடங் குயர்ந்து
வாலிய வரோம முடல்செறிந் திருகண் வழங்கிடும் வடவனல் கதுவிப்

* தமிட்டிரம் - தந்தம்

பாலெல்லாந் தகிப்ப வெருத்தமேற் போகும் பற்களோ டிலங்கிடும் புதிய
கோலமாங் கோலங் கொண்டியா னண்டங் குலைந்திடக் குமுறொலி பரப்பி.

அவுணனுண் டேகு மவ்வழி யேகி பாழியு மளறெழ வலைத்துக் (நேர்ங்
குவவுமால் வரைக ளனைத்தையு முருட்டிக் கொண்டுசென் றிரணியாக் கனை
துவமனில் பெருர்போர் புரிந்துயிர் செகுத்தாங் கொதுங்கிய வசுந்தரை த
னைமீட், டவமகன் றிருப்ப வராமுடி நிறுவி யனந்தர மப்புவி.மகளை. (௨௮)

அவளுடைத் தாதை பிருகுமா தவன்பா லரண்புகுத் தவுணனை யாவி
கவர்செருக் கறிவை மறைத்தலின் மான்று கதிர்வரு வாளவெற் புடைத்துப்
புவனியெண் டிசையு மலைத்தன னதனாற் புன்கணுற் றிமையவ ராதி [ய்தி
யெவருமெஞ் ஞான்று மிடுக்கண்டீர்த் தருளு மெம்பிரான் கைலைசென் றெ
மணிமிடற் றிறைவன் றிருவடிக் கமலம் வணங்கியீ துரைப்பரெம் பெரும
தணிவிலா விரணி யாக்கனு லெமக்குச் சார்ந்தபே ரிடரினும் பெரிதாத்
திணியமா லேன மாகிநின் றலைக்குந் தீங்கிது தாங்கிலே மெந்தாய்
பணியணி முடியெம் பரமவித் துயரும் பாற்றினை போற்றெனப் பகர்ந்தார்.

ஆயிடை யமலன் சேயினை நோக்க வயிலுடைத் திருக்கரத் திளைய
சேயவன் கமலத் தூயசே வடிகள் சென்னியிற் றன்னிய விறைஞ்சி
நேயமிக் கெதிரே நிற்பநேர் நோக்கி நிமலன்மால் புரிதுயர் நீக்கி
மாயன்மற் றவன்கொள் செருக்கினைமாற்றிவருகநீமைந்தவென் றுரைத்தான்

தாதைதாண் மீட்டு மிறைஞ்சுபு குமரன் சடக்கென வெண்†களிற் றுருவின்
மேதகு செருக்கி னின்றவென் னருகு மேவலும் வெகுண்டியா னுருத்தவ்
வாதிதன்சேயொடமர்த்தனனிளையோனயிற்படை தூண்டியென்செருக்கைக்
காதிவெள்ளெயிற்றைக்கவர்ந்துசென் றீசன்கழலடிதொழுதுமுன்வைத்தான்.

கந்தரம் புரையுங் கந்தர னுங்குக் கடவுள ராதியோர்க் கருளி
நுந்தம்வாழ் பதியி னேகுதி ரென்று நொடித்தனன் விடுத்தயிற் காத்தெங்
கந்தனை மனமு கந்தருட் கரத்தாற் கந்தமார் தரவினி தணைத்து
மைந்தநீ யீண்டுப் புரிசெயற் கிதய மகிழ்ந்தன மென்றுவாய் மலர்ந்தான், ()

கூற்றுறழ் தடங்கட் குவவுமென் முலைப்பூங் குழற்பிறை நுதற்றுடி நுசுப்பிற்
கோற்றொடி கேண்மோ வனந்தர மெனது கோலத்தின் கோலத்தை நீக்கி
மேற்றிக பூவனி மாதைவேட் டுவப்பான் விருப்பியச் சுவன்னக விபினத்
தாற்றுபு தவஞ்சீ தளியா னடிக்கீ ழருச்சனை புரிந்தவ ணமர்ந்தேன். (௩௪)

இருநில மகளு மென்னைவேட் டுவப்பா னீசனைப் பூசனை புரிந்து
மருவின ளாங்கெம் மிருவருட் கோளு மதிமுடி திருவுள மதித்தெம்

---

† களிறு - பன்றி.

மருங்கெழுந் தருளி நம்புளக் கருத்திங் காகெனப் பணித்தன னுங்கன்
பிருதுமா தவனு மணமுறை யவனிப் பெய்வளை தனையெனக் களித்தான். ()

வதுவைநன் மாபின் வந்தவவ் வதுவை மணந்தியா னத்திருத் தலத்தின்
விதுவைமா முடிபெஞ் சேதளி நாதன் வீற்றிருந் தருளி வடபான்
மதுவையுண் டளிகள் குழல்பயில் குழற்று மாதொடு மாதரந் தருசிற்
பொதுவைபொற் கமலச் சேவடிப் பூசை புரிந்திருக் கின்றன னுங்கே.(௩௬)

இவ்வகை யாங்க னமர்ந்திடு நாளிவ் விறையவன் மறைநணுன் கலரோ
னெவ்வமின் முனிவ ரெவர்க்குமெட் டாத வியல்பின தாயதன் சொரூபத்
தவ்விய லனைத்து மெனக்குப தேசித் தருளின னவன்புரி நடமே.
மைவிழி யெனதுள் விழையுமென் றுரைத்தான் மாதவன் மலர்மகள் வழங்கும்

நாதனே யெனைய னாதரித் தவனி நங்கையோ டங்கெழி னடன
மாதரக் காண்ட லெம்முறை யமைக வருளினி யென்னிடத் துளதே
னீதவை கூர்ந்தந் நடனம்யான் காணு நெறியினை யுரைத்தரு ளென்னு
வோதலு முதுகேட் டுலகெலா முதித்த வுந்தியா னுவட்கிவை யுரைக்கும். ()

அரியன வாகு மசாத்தியப் பொருளு மருந்தவஞ் சாத்திய மாக்கும்
வருணனற் குறு பிருகுவுக் குரைத்த வாறிது கேண்மலர் மானே
யுரியவத் தவமோர் மூன்றவை மனம்வாக் குடம்பினு லுஞற்றுவ வாகுந்
தெரிவுறு மிவைதா மிலௌகிகஞ் சிறந்த தெய்விக மெனவிரு திறமாம் ()

இருவகை விரிக்கிற் றெய்விக மூன்றி லௌகிக மூன்றென விசைப்ப
வரியலௌ கிகந்தான் *பரார்த்தநிட் காம §மனசூயை யாதிமா னதமு
மருவித வசனஞ் சத்திய மாதி வாசிக மும்முப வாசங்
கருதுறு தீர்த்த சேவை ‡தானாதி காயிக மும்மென மூன்றே. (௪0)

எய்தியா னுதி மனஞ்செபா தியவாக் கியாகமுற் காயமிம் மூன்றுந்,தெய்விக
மாமி லௌகிகஞ் செய்தே தெய்விகம் பின்செயன் முறையாந், துய்யலௌ
கிகத்தை யொழிந்துதெய் விகத்தைத் தொடங்கல்வே ரற்றிடு மரத்தின்,
பெய்கனிக் கிச்சை கொள்வது போலும் பின்னையீ துண்மையென் றுணர்தி

இப்பரி சுணர்ந்தா ரேவத வனத்தி லெய்திலௌ கிகதெய் விகமாந்
திப்பிய தவங்க ளிரண்டுநீ யன்பிற் செய்கெனச் செங்கண்மா லுரைப்ப
வப்பொலங் கமல சம்புசா நித்தி யந்தரு மேதுவா மவைநான் [றும்.
றப்பிலா தியற்றும் விதியருள் கென்று தாழ்ந்துமுன் னிறைஞ்ச மால் சாற்

---

* பரார்த்த நிட்காமம் - பிறர்பொருளின் விருப்பமின்மை.

§ அனசூயை - பொறாமையின்மை.

‡ தானாதி - தானமுதலியன;

## வேறு.

வன்சை கேண்மதி யிவ்விரு வகையுமெய் யன்பி
னனகன் வெள்ளியஞ் சைலத்தெம் மண்ணரு ணினைந்தே
யினிது செய்திடத் தக்கதா மித்தகு வாய்மை
தனைம றந்தவர் தாமவற் றுறுபயன் சாரார். (௪௩)

பவள மெல்லிதழ்ப் பான்மொழிப் பைந்தொடி கேட்டி
யிவை யிரண்டொருங் கியற்றென் முராரிமுன் னிசைத்தாங்
கவிர்ச ரோருகத் தமர்ந்திடு மனையவ ளவண்போய்த்
தவமி யற்றுதற் கமைவுறு வேடமுஞ் சாற்றும். (௪௪)

அளிந ருவுணு மலர்க்குழல் வேணிய தாக்கி
யொள்ிகொள் பூந்துகி லாமர வுரியினை யுடுத்து
வளரு மன்பொடு தரிப்பவர் பசுத்துவ மாற்றித்
தெளிவு றுஞ்சிவத் துவஞ்செய்வெண் ணீற்றைமெய் திகழ. (௪௫)

நிறையுத் தூளன மேதிரி புண்டர நெறியே
மறைமுற் கூறுசா பாலத்தின் வயங்குமைந் தாறென்
றறைம னுக்களா லணிந்துபின் சதவுருத் திரமந்
நெறியிற் கூறியப் பதந்தொறுந் தருப்பண நிகழ்த்தி. (௪௬)

பாத்தி யாசம னார்க்கிய மேநறும் படீரங்
கூர்த்த வக்கதை தூருவை கூவிள மிதழிச்
சீர்த்த மாமலர் முதலுப கரணங்கள் சேர்த்தி
யேத்து சத்தியோ சாதமா தியமனு வியம்பி. (௪௭)

ஆண்டு சீதளி நாதனை யருச்சனை யாற்றி
மாண்ட குஞ்சிவாக் கினிவளர்த் தமுதுநீ வார
மீண்டு பிப்பில மாதிய பொருள்களா னீற்றிற்
பூண்ட வாகம விதிமுறை யோமமும் புரிதி. (௪௮)

ஓது மன்பினர் விளைவெலா மொருங்கினி தருளு
மேத குந்திர லந்தெழுத் தினைவிரை மலர்மேன்
மாது தாரக மசலமா மாயைதன் பீசங்
கோதி லாதநின் பீசமுங் குலவ முன் சேர்த்தே. (௪௯)

மறைசொல் சம்புவைக் கிருட்டின பிங்கள வடிவி
னெறிம லர்க்குழ லுமையொரு பாகனு நினைந்தே
முறைகொ ணற்செபம் புரிகுதி முளரியஞ் சேக்கை
யிறைகொள் பொற்றொடிச் செங்கரத் திந்திரை யிவைசீ. (௫௦)

யாமு ரைத்தவா தேர்ந்தினி தியற்றினீ நினையுங்
காமம் யாவையு முடிக்குவன் கண்ணுதற் கடவுள்
வாம மாதவ னென்றவண் மாதவ னிதழி
நாம வல்லியின் வல்லைசெல் கென்றுரை நவின்றான். (நுக)

வேறு.

என்றுமா லுரைத்த யாவையுங் கமலை யிருசெவி மடுத்துளத் துவகை
தன்றனே ரிறைஞ்சி விடைபெறீ இயிதழித் தலங்தபேர் முளரியிற் புலங்கள்
வென்றநோற் றமலன் புரிகடங் காண்பான் விரைதரு நிறையவா வுந்தச்
சென்றுசேர்ந் தனைய வனப்பிர நீசித் திசையிரு குரோசத்திற் றிகழும்.

அகலி காரை நகர்தனிற் சுயம்பு வாமருட் குறியினை யாம்பன்
முகவனைச் சண்ட சனைவிழி குளிர்ப்ப முன்னுறக் கண்டனண் முதமே
தகவுளத்தெழுமெய்யன்பினுடன்பூதலமுறப்பணிந்துமுன்றுதித்தாள்
விகசித வருண வம்பயப் பொகுட்டின் மேவிவீற் றிருந்தருள் விமலை.

காரையூர்த் தவன்றனிளவன்மார்பகத்தாள்காரையூ ரதனிலோர் தடந்தன்
பேரையூர் தாக்கண்டதனிடை மூழ்கிப் பிறைமுடிக்கறைமிடற்றிறைவ
ஞரையூர் பதத்திற் சிவாகம விதியா லருச்சனை யன்பினுற் புரிந்தாள்
வாரையூர் முலைபா கனுக்கத னுற்சி வந்திய நாதப்பேர் வாய்ந்த. (நுச)

உரைத்த நூல்விதியா லனடிப் பூசை யுஞற்றியக் கமலையாங் கிருப்ப
வரைத்தனுக் கோட்டிப் புரத்தெரி யூட்டு மந்தகா சந்தரும் வரன்மா
விரைத்தமர் போதின் மாதிரு காதுக் கின்னமு தொழுக்குவ தென்ன
நிறைத்தவம்புதஞ்சு ழம்பரத்திடம்பினிலவுருமொழியிவை னிகழ்த்தும்

நித்தநல் யாண மங்கள ரூப நிலவுற வுலைவிலா துளத்திற்
பத்திமை யோடுமையருச்சனை செய்பவளவாய்ப்பதுமைநின் றனக்கிண்
டத்தரு பத்தி யென்றுமே லோங்க வகிலமும் பாவுறு மிதழிக்
கொத்தலர் வினைத் திமகரர் குலம்பல் கோடிசூழ்ந் தொளிர்வது போல.

முதிருட் சயம்பி லிங்கமொன் றெமக்கு மூலமா யிலகுமத் தலனிற்
றிதலைவெம்முலைநீசென்றுசேர்ந்தவணச்சிவக்குறிதனையருச் சனைநூல்
விதிமுறை புரிதி யென்னலும் வணங்கி விரைந்தன ளவ்வன மேவிக்
கதிதரு வியனீர்ச் சேதனி மேல்பாற் கவிழிணர்க் குரவமு லத்து. (நுஎ)

இந்திர னாதி யெண்மரு முலக மெட்டினின் றூங்ஙன மெய்திச்
சிந்திய வலியின் பெற்றுவாழ் வுறுவான் றிருந்திய வருச்சனை புரிய
முந்துநல் வரங்க ளளித்தது மேதை முனிவர ரருக்கரா தியர்செய்
தந்தபூ சனைகொண் டவரவர்க் குரிய தருவரம் பலவளித் ததுவும்.(ருஅ)

ஆயதோர் சுயம்பு லிங்கமிக் கிலங்கி யணிமணிப் பிழம்பென வாங்கே
மேயவெண் டிசையுந் தனதொளிபரப்பி வீற்றிருந் தருள்வது கண்டாள்
சேயவா ரிசத்தி லிருந்துல களிக்குந் திருமக ளருகுசென் றமர்ந்து
பாயவன் பொடுமெய் மாமனைப் பணிந்து பகர்சிவா கமவிதிப் படியே. ()

பூசனைக் குறியபொருளெலாந் தொகுத்தப் புராரிதன் றிருவடி மலர்க்கீழ்
மாசறு மினிய சபரியை புரிந்தாண் மனநெகிழ்ந் தரியன துதித்தா
ளாசறு கமலை யாங்குநின் றொருவா றகன்றுசீ தளிவட கரையிற்
றேசமிங் குறூஉந் றவம்புரி கருத்தாற் சென்றுநின் றூங்கிது செய்தாள்

கருபபித் தாங்கொன் றவனியிற் பதித்தாள்கார்முகந் தனையாங்குரித்துத்
தொகுபலகிளைகொண்டெழு தருவாகித்துலங்குமாபெய் தனள்வளர்த்தத்
தகையபூ ருகமே யுடசமாக் கொண்டு தான்புரி தவக்கிட ருறாது
வகைசெயக் கருதி மலர்ந்தசெவ் வனச மலர்வரு தலைவியீ தாற்றும். ()

கவிர்புரை யதரத் தனையவன் முகுந்தன் காத்தசெங் காத்தசக் காத்தை
யவணுற நினைத்தா ளஃதுணர்ந் தாழி யத்தடத் தான்றிசை மேல்பாற்
குவலைய நேமி தீர்த்தமென் றுரைப்பக் குளித்தெழுந் தலர்மகட்குறுகிப்
புவிதொழு மடிக்கீழிறைஞ்சிமுன் னிற்பப் பூவையத்திகிரியை நோக்கா.

பரிதியைப் பழிக்கும் பரிதியிப் படிநாம் பயிறவ பாலனம் பரிக்கென்
றரிதவ ணிறுவி நோற்றமர் காலை யற்புத மொன்றவட் கண்டாள்
வருமதன் வாலா றுரைக்குவங் கேண்மின் மாதவத் தீரொரு சேன
மருமலர் செறிசீ தளியுறு மீன்முன் வாயினற் கவர்ந்துண வீழ்ந்து.(சுங)

ஒய்யென மீனென் றெடுத்துவிண் ணேக வுறுகய னழுவுற வுடன்வீழ்ந்
துய்யுநீ ருடல நனைவுறப் பெற்றவ் வுருவமே திவ்விய வுருவாச்
செய்யபொன் னிறமுநேத்திரமூன் றுந்திகழ்புலித்தோல்விளங்குடையுங்
கையன லபய வச்சிர சூல கந்தர கந்தாக் கவினும். (சுச)

பணியணி வேணி மதிநதி யாதி பலவுமுற் றிலகுறு மீச
னணியசா ரூபம் பெற்றவா நோக்கி யாரைநீ யென்னவப் புருட
னிணையிலங்கீர்தோய்கலத்தின்முக்கால*மெய்திறனெய்தலினிசைப்பான்
மணமலர்த்திருவே மாளவ தேய மன்னன்யான் மணிப்பிர காசன்.(சுரு)

* எய்தல்—அறிதல்.

தரணியிற் றரணி குலத்தில்வந் தானைச் சபரியை முப்பொழு தாற்றி
யரசரி நீதி வழுவிலா தியற்றி யறநெறிப் பொருண்மிக வீட்டி
யுரியவெண் கவிகை நீழலி னுலக மொருங்குவாழ் வுறப்புரீஇ மதமாப்
புரவிதேர் பதாதி யளவில வாக்கிப் பொன்னரித் தவிசமர்ந் தளித்தேன்.

அளவிலாச் செல்வப் பெருக்கினுற் செருக்குற் றரித்தவி சமருமக் காலை
வளரொளிச் சடையும் புலியத ளுடையு மலர்க்கர கரகமும் வயங்க
விளையருந் தவஞ்செய் மிருகண்டு முனிவன் வெம்பசி பம்பமெய்வாடிக்
களையகற் றுணவு விழைந்துநண் பகலிற் கடிதென தருகுவந் தடுத்தான்.

ஈசனே யாக வழிபடற் பால ரீசன்மெய் யடியரொன் றெண்ணு
வாச்சே ருளத்தா ரன்றியு மிகழ்வக ரருப்பசி யுற்றடைந் தவரை
நேசமோடுணப்போம்பொழுதினுமழையார் நிறைவுறத்தாந்தனி யுண்பார்
நீசரின்னவர்நிரவினெஞ்ஞான் றுநிலைப்பரொன் றறிந்துவைத்திருந்தும்.

போகனூழ் வலியா லவனடி பணிந்து போற்றிடா திருந்தன னதனைத்
தீகனூழ் சாபம் வல்லனே யாயுந் திருவளத் தடைத்திடா திருந்தா
னுகொடும் பதக னுயநான் றனிச்சார்ந் தயின் றுபின் வருந்துய ரறியா
தேகியம் முனிமுன்வருதலுமிருகண்ணெரியுகக் கொதித்தெனைநோக்கி

அரசநீ*யாக னுகவின் னுமலி யாயினுந் தலைபணித் தகன்றுங்
கொருவுறும்வாந்தியனமெனவெமர்நீத்தொழித்தனர்பழித்தவிச்செல்வம்
பெருமித வாழ்வென் றதனையே யிறுகப் பேணுபு நித்தியப் பொருளாக்
கருதினையனைய செருக்கினுற் பசித்துன்கடைத்தலை யணுகியநமையும்.

வழிபடல்புரியாதொருதனிப்புகுந் தூண்மடுத்தெதிர்புகுந்தனைமடவோய்
பழியித னுனீ பருந்துருக் கொண்டு பசிக்கன றகிப்பவெங் மகங்கு
முழலுபு திரிகென் றுறவர்கோன் சபிப்ப வுளநடு நடுங்கியவ் வுரவோன்
கழலடிதனில்வீழ்ந்தெந்தையெம்பெருமகடையனேன்பிழைபெரிதேனும்

ஐயநின் கருணை யதனினும் பெரிதா லப்பிழை தன்னையுள் ளடக்கித்
துய்யவக் கருணை மேற்படன் முறையே சொல்வதி யாதினி நாயே
னுய்யுமாறருள்கென் றுடன்பலதுதித்தவ்வுறவர்கோனடிக்கிடந்திளைந்தே
னையுறலரசவெழுகவென் றுரைத்தானவையினேனைதுவினுயெழுந்தேன்

அஞ்சலி கரமென் சிரமுறநின்றே னறவர்கோனெனதிரவ னெனைப்பார்த்
தெஞ்சலி லருளான் மன்னகேள் முன்னு ளொறுழ்வலியசுரருஞ்சுரரும்
விஞ்சுபோர் புரிகாற்சுரருடைந் தகல்பால்வீரையின் முராரியையடைந்து
தஞ்செயலுரைத்தாங்கினைவுறவயர்ந்துனைவர்தமையெதிர்ந்தடர்த்தான்

* அ-இன்மைப்பொருட்டு.

அரியிகன் றசுரர் யாரையுந் துமிப்ப வஞ்சபு சிலருடைந் தோடி
மருவல ரிதழி வனத்திற்றங் குரவன் மந்திரி தந்தையாம் வாஞ்சால்
பிருகுவி னுடசத் தொளித்தன ரிருப்பப் பின்றொடர்ந் தாங்குறு மாலப்
பெருமுனி யாங்கன் முன்னரே புரத்திற் பிரிந்தமை தெரிந்துழைபுகுந்தான்

வேறு.

புகுதலு முனிவன் பன்னி புகலுற்றோர் தமைத்தம் மாவி
யுகுமிடர் வரினு மோம்ப லுத்தமர் மரபென் றோதுந்
தகுதியி னுறைத்து நின்று ளாதலிற் றகைய மாலை
யிகலின்முத் தொழின டாத்து மிறைவரு ளொருவ னுயும். (எஙு)

திதித் தொழி றடைதே யாயு மூழ்வினைத் திறத்தி னானே
விதத்தசத் துவகு ணந்தன் றொழிற்கலா தியல்பிற் சாரா
விதத்தினே கடலி னுளுந் துயிலுதல் கரிய மேனி
வதத்தொழின் முதலி யற்கைத் தமகுண மருவ லானே. (எசு)

அனையமா றகையு நாரி யறவர்கோன் சுபன்னி யொன்றோ
வினையற்று சூலியாக விரங்குவ தறிந்து மந்தோ
கனலெழ வாழி யோச்சிக் கற்புடை யவளைக் கொன்றான்
பிணவுறு மசுரர்க் கொன்றான் பெயர்ந்துடன் விரைந்து சென்றான்.

அந்தின்மா லேய பின்னா ரருந்தவப் பிருகு வாங்கு
வந்தன னிகழ்ந்த தோரான் மனைவிதா னவர்கண் மாட்சி
சிந்தைவெந் துயரின் மூழ்கத் தெரிந்திட ருழந்திச் செய்கை
யெந்தவெம்பதக ராணி கழ்ந்ததென் றுளத்தி னெண்ணி. (எஅ)

மாலெனும் பெயரை வாய்ந்து மயக்கமே யியற்கையாக் கொண்
டோலுறம் வஞ்ச னேயிக் கொலைஞனென் றகந்துணிந்து
சாலும்வெங் கோப சாபந் தந்தன னனந்த யோனி
மேலள விலாப்பி றந்தை மேவிமா றுயர்க வென்னா. (எகூ)

அரிகரத் தமர்ந்த செங்கே ழரிகறை தோயு மாழி
விரிகறை யுறுக வென்னா விரிகறை மேலோன் கூறும்
பரிகா மிலாத சாபம் பரிகா வளையை மாலை
யெரிசுடத் தொடர்ந் தலைப்ப வெரிசுடர் மணிகொண் மார்பன். (அ०)

கதிதரு காஞ்சி மாந கரத்தடைந் தமலன் றாளை
விதிமுறை நமர்ந்து வந்த விளைவவின் னப்பஞ் செய்து
துதிபல கூறி வேண்டத் துவரிதழ்க் கௌரி கொங்கை
பதிவுறக் குழைந்த மேனிப் பரமனங் கருளிக் கூறும். (அக)

சாபத்தை நினைந்தினைந்து தளர்வுறு முகுந்த கேட்டி
யாபத்தை யகற்றி யின்பே யருள்கொன்றை யடவிசேரிப்
பாபத்தைத் தணிவித் தின்பாற் படர்தரு படரைத் தீர்க்குஞ்
சோபத்தை யொழிதி போதி யென்றனன் சுருதி நாதன். (௮௨)

அம்மொழி வினவி மாயோ னவ்வனத் தணித்தி னேகிச்
செம்மைசெ யீச னாசைச் சிவபுரத் தமலன் றன்னைக்
கைம்மலர் தூவிப் பூசை காலங்க டோறுஞ் செய்தே
யிம்முறை வருட மொன்றுங் கியல்புற நோற்றி ருந்தான். (௮௩)

தவமுவந் தமல னாங்குச் சார்ந்தெதிர் சலசை கேள்வ
விவணடைந் தெம்மைப் பூசை யியற்றுதி யென்கொ லென்ன
வவனடியிறைஞ்சி மாயோன் விளைவெலா மடைய வோதி
யெவமுறு சாப மோசித் தெந்தையெற் புரத்தி யென்றான். (௮௪)

மாதவ னுரைப்ப வெம்மான் வருதிமா லெமக்கன் போரம்
மாதவப் பெரிய ரற்றால் வருந்துயர் புரிந்த வந்த
மாதவன் றன்னா லன்றி மாற்றொணா தெம்மா லென்று
மாதவ ழிதழி வேணி பிருகுவை மனஞ்செய் தானால். (௮௫)

சிவபுரத் தமல னுள்ளஞ் செய்தலு மனத்திற் போந்து
தவமிறை பிருகு வெம்மான் சரண்முடிக் கொண்டு தாழ்ந்து
பவநெறி துறிய னேகம் பாவியொன் றினுக்கும் பற்றா
வவலனேன் றனையு மிங்கோர் பொருளென வகத்துட் கொண்டோய்.

இந்திர னயன்மா லாதி யிமையவர் முனிவ ரேனோர்
புந்தியின் வழிபா டாற்றிப் போற்றுபு சூழ்ந்து நிற்ப
வெந்தைநீ யாது மோரா வேழையாஞ் சிறிய னேனைச்
சிந்தைசெய் தருளிற் றென்கொ றெரித்தருள் பெரும வென்றான். ௮௭

திறநவில் பிருகு மாற்றந் திருச்செவி மடுத்து முக்கட்
பிறைமுடிக் கறைமி டற்றெம் பிரானருள் பெருக நோக்கி
யறனிறை பொறை முன்னாய் வருந்தவத் தங்க மெல்லா
நிறைவுறு முனிவ கேட்டி நீலோதன் கேள்வ னின்பால். (௮௮)

ஆற்றிய தீமை யம்ம வறைவதன் றதுகு றித்துச்
காற்றிய சாப மேற்கத் தக்கதே யெனினு நம்மைப்
போற்றிய தொழின்மேற் கொண்டோன் புரப்பவன் புன்கண் ணுற்றாற்
பாற்றிய வருளல் யாவர் பாலதெங் கடமை யன்றோ. (௮௯)

அன்றியு மிவண டைந்தே வருடமொன் றளவு நம்மைப்
பொன்றுறு வன்பி னோடு பூசிக்கு நியமம் பூண்டான்
நன்றுல களிப்பா னின்றே லகிலமு நலத்தி னீங்கி
வன்றுயர் பலவுட் பட்டு வருந்துறு மாத லாலே. (கூ0)

வேறு.

பவவினை புரிந்து வருந்துமால் சாபம் பாறுமோர் பரிசுரை யெனவப்
பவனருள் சிரமேற் கொடுமுனி யுரைக்கும் பங்கயக் கண்ணநீ யளவில்
பவமென லகன்றீ ரைந்துமட் டடைந்தப் பவங்களுட் டசர்தன் மகவாம்
பவமதின் மனையை யிழந்துசின் னுளிப் பாரினிற் கானிடைப் பயில்க.

சக்கர நீயா தவகுலத் துதிக்குஞ் சனனத்தோர் முகூர்த்தமா மளவு
மிக்கபேரொளிபோய்க்கறையுருவடைந்தவிளம்பியசாபமேற்றெழுதிகென்
றுக்கட வுண்மா முனிசெல வான்று ளரிபணிந் தமலனே யடியேன்
புக்குறைதருமப்பிறப்பிடைமயங்காப் போதமீந்தருள்கெனப்புகன்றான்.

திருமறு மார்பன் பணிந்துரை வாய்மை திருச்செவி மடுத்தா னருளு
மரிநின தொருபான் பிறப்பினு ளெந்தே யனுக்கிர கம்பெறத் கமைவ
வுரியநிக் கிரகம் பெறுவமற் றைந்து முவற்றினு மீற்றினி லருள்வோம்
பரிவுறேல் விழைந்தவாறுமெய்ஞ் ஞானம்பாலித்துன்பதம்புகவளித்தும்.

எனவா னுரைப்ப விறைஞ்சிமா லகன்று னிவ்வரி பூசனை செயலா
லனகவப் பதிபி னரிபுர மெனும்போத் தாயதப் புரத்தினீ யாச
முனமுறைத்தாங்குச் சேனமாயடைந்தம் முன்னவன் றனிமெய் யன்பாற்
றினமுமர்ச் சனையீ ரைம்பஃ தாண்டு செய்தவ னினிதமர்ந் திருப்பாய்.

இன்னண மாங்க ணமர்ந்திடு காலை யிரும்பசி யுடற்றநொந் தொருநாண்
மன்னுபொன் னிதழிவனத்தினிற் திருப்பேர் வாவியின் மீன்கவர்ந் துன்பான்
முன்னுபு பறந்தம் முயற்சியா லுடல மூழ்குறப் பெற்றதன் பயனு
னின்னையான் முனிந்து புகன்றவிச் சாப நீங்குறப் பெறுதி யான்மேலும்.

செப்பருஞ் சிவசா ரூபமும் பெறுதி சேறியென் றுரைத்தனன் றிருவே
யப்பெரு முனிவ னருளிய வாறே யடைந்தனன் பருந்துரு வதனைத்
தப்புறு தனைய வரிபுரஞ் சார்ந்து தாணுவை யருச்சனை நாளுந்
துப்புற வியற்றி வழிபடீஇ யாங்கட் டேயகன் மனத்தொடு மமர்ந்தேன்.

அப்பதிக் கிறையான்பணிந்தத னுற்சேனே சனென் றொருபெயரடுத்தா
னெப்பராத் திருவே சார்ந்ததன் வணமா யுயிருறல் புதித
லிப்பருந் துருவை யடுத்தயான் பசிநோ யீர்ப்பவந் திக்கயத்
றுப்புறு வாகச் சலசாம் விழைந்து தோய்ந்தனன் வாய்ந்ததிப் படிவம்.

காமுயர் தவத்தோன் ர்னையிகழ் பதகன் கயலுணக் கருதுமா கொலைஞ
ஞழிய நிரயக் குரியனே யாயு மானருட் டிருவுரு வடைந்தே
னாழினும் வலிய யாவுள வேறொன் றுறவரு மேனுமவ் வூழ்முன்
குழுபுகருந்தன்பயனையேயென நூல்சொற்றதுவெளிப்படத்துணிந்தேன்

என்றுமா லசலத் தடத்தமர் சலசை யின்புற முன்புகன் றங்கு
நின்றவா விமான மேலிவர்ந் தரிய நிகரிலாச் சிவபுரம் புகுந்து
மன்றவாழ்ந் திருந்தா னணிப்பிர காச மன்னவ னின்னது வனசை
நன்றுணர்ந் தினைய தீர்த்தமே யாவு நல்குவ துடனெனி தென்பாள். ()

சிதளி யதனுத் தராதடத் தனதன் றிசைக்கரு கடுத்தகீழ் பாலி
னுதாம் பெருக மாபினின் மூழ்கி யருக்கிய முதனிய மஞ்செய்
தேதமி லதன்பே ரிலக்குமி தீர்த்த மெனப்புகன் றியாமிய திசையிற்
போதுபு கௌரி பூசனைக் குவகை புரிகௌ ரீசன்முன் புகுந்தாள். ()

அன்புளஞ் செலுத்த வடுத்தன ளுலகி னருட்குறி யாவைக்கு மூல
மென்பதுதோற்றுந்திருவுருப்பொலிவுமிலங்கொளியினங்களெல்லாந்தன்
முன்பொடுங் குறநீ ளொளிப்பிழம் பாகு மூலமுங் கோலமுங் கண்டா
டன்பர மிழந்தாள் சிவவச மாகு டரையின்முன் வீழ்ந்தனள் சலசை.

பின்னொரு வாறுங் கெழுந்தனண் மீட்டும் பிரானடி முடியுறப்பெருகன்
பின்னனி போற்றிப் பன்னுமஃ றுதிக ளியம்பியங் கரிதக ன்றேகி
மன்னிசிற்சபையெம்பிரானைமுன்பணிந்துவந்துகாற்றிசையிலத்தளியுள்
முன்னருச் சனை-யான் புரிதரு மிலிங்க மூர்த்திதன் சேவடிபணிந்தாள்.

அனந்தா மனைய விலிங்கத்தின் வடபா லத்தளி யுள்ளினி தமர்ந்து
கனந்தரு குழலி புடலிமா தடனுய்க் கலந்துவீற் றிருந்தருண்முகுந்தன்
வனந்தரு கழற்கால் வணங்கினள் பிருகு மாதவற் கண்டுள மகிழ்ந்தாண்
முனந்தருமாயன்வாய்மையைநினைந்தம்முதல்வனதாணையின்முயல்வாள்.

சிதளி யதனை மாதவன் முன்னாட் செப்பிய விருமுறை சிந்தித்
தோதுறும் விதிகள் யாவையுந் திகழ வுழுவலன் புளத்திடை நிகழ
மாதவ லரிய வுபசா ரங்கண் மலிவுற வீட்டுபு வாய்மைப்
போதமோ டரிய நான்முறை நாடிப்பூசனை புரிந்தனளுளும். (௧௦௪)

நாடொறும் பூசை புரிந்தன ணாற்தன் றைதனுண் டுரைத்தவா நயந்து
பீடுறு திருவைந் தெழுத்தையு முளத்தாற் பேணுநற் செபம்புரிந் திற்றி
வாடுறு சிவாக்கி வ்திவழி யியற்றி யாண்டுமுந் நாறுநோற் றமர்ந்தா
டேமெம் பெருமா னுவந்துபங் குனியுத் திரம்புகர் வாரமுஞ் சேர்ந்த.

---

—யான்என்றது அகஸ்தியமுனிவர்.

நற்றினத் திடப மீதுமை யோடு நான்முக ஞதிவா னவரான்
புற்றிடு சனக ஞதிவே தியர்யா ழோதிடு மிருவர்நற் கணங்கள் [யப்
சுற்றிட வெழுந்து தோன்றினன் கமலை தொழுதுளத் தானந்தம் விளை
பெற்றுநன் மிடறு விம்மவன் புருவாய்ப் பிஞ்ஞகன் ருண்மலர் துதிப்பாள்.

வேறு.

வேத மலர்கா யத்திரியின் விளங்கு பொருணீ யேயென்ப
வீது தெளிய நின்னுமத் திடையே யிலகும் பற்கநம
போத னரிமே லரனுகப் புகலு நாம வியாசத்தா
லோது தொழின்மூன் றுஞற்றியுமே லுஞற்று தொளிரு மொருவநம.

மலரோன் முதற்கீ டாந்தமென வருதா பரசங் கமரூப
வுலகி லுபாதி பேதத்தா லுணரார்க் கனேக ரூபநம
நிலவும் வலிசேர் தத்துவத்தி னிறைநோக் குடையார்க் கேகநம
நலனுர் கௌரி நிருத்தநம நதியார் மதியார் மௌலிநம. (கoஅ)

சுரர்க ளதிகொ ளரவநம துலங்கு முருத்தி ரேசநம
கரிய கால காலநம கவின்கொ ணீல கண்டநம
புரமுத் திறத்த வயிரிநம பொன்னுர் சைல வில்லிநம
வரிதன் னெருபா லழகநம வனல நுதற்க ணனகநம. (கoகூ)

புருட பாவங் கடந்தமையாற் புகலவ் வியத்த னுகின்ருய்
புருட னுக்கொள் புத்தியினுற் பொருவி லேக னுகின்ரு
யிருமை பெறுதி பெண்மையினு வினைய னெனவோர் வரியநம
திரியம் பகமுக் குணுதீத சீத ளீச சிவாயநம. (ககo)

என்று துதிக்குஞ் சலசைமுக மினிது நோக்கி யெம்பெருமான்
மன்றல் கமழு மலர்த்திருவே வருதி யுனது துதிமகிழ்ந்தே
மொன்று முணர்வி னமைப்பூசை யுஞற்றி நோற்ற தெதுகருதி
யுன்றன் வேட்கை யாதுரைத்தி யருள்வோ மென்று னுமைநாதன். ()

அந்தண் கமலத் தனிக்கோயி லரசி யதிகேட் டெவ்துரைப்பா
ளெந்தை யெமது பெருமானே யெமையா ளுமையாள் பொருட்டொருநீ
முந்து புரிந்த திருநடன முறையி னின்றென் பொருட்டினிது
வந்து புதிதி னியற்றுமயான் காண்பான் விழையு மனமென்ருள் (ககஉ)

கமலை யுரைத்த வதுவினவிக் கருணை பொழியுந் திருவதனத்
தமல ஸினைத்த வுடனெவையு மன்பர்க் கருளு மதுதொழிலோன்
விமல மனத்த திருவிரும்பி வேண்ட வருளா தொழியுங்கொன்
முமல மகற்றி யெமையளிக்கு முனைவ னதுவே புரிகின்றான். (ககங)

தெக்கி ணாபி முகத்தமர்வேற் செங்கைக் குமரன் றிருநந்தி
மிக்க போத னரியவனி விபுதர் குலங்க ளிருடிகுழா
மெக்குள் ளுருகு மனந்தன்முத ளுகசெனையோர் நெருங்கமற்றை
யொக்க முழங்க வப்பான்முன் புகுற்று நடத்தி னும்புதிதாய். (ககச)

ஓத வரிதா யுணர்வரிதா யுன்ன வரிதா மன்னடமே
நாத முழங்க வியங்கள்பல நலத்த குரலின் விரழுளர்யாழ்க்
கீத முழங்க மிடற்றிசையுங் கிளர்ந்து முழங்க வொருநான்கு
வேத முழங்க வன்பர்துதி விம்மி முழங்க வெம்மிறைவன். (ககரு)

வேறு.

அருந்தவம் புரிந்த வனந்தன்மா முடிக்கோ ரணிகல னுயபொற் பதமும்
வருந்திறன் முயல கன்புறத் தூன்று மலருமீ ரைந்துசெங் காமுந்
திருத்தொளி முகமண் டலமும்புன் னகையுந் தேவசா லந்தெறு கூற்றுங்
கிருந்தொளிர் நீல கண்டமுங் கண்டத் திலங்குபொற் கலங்களி னெழி
லும்.

தொன்றைசெஞ் சடையிற் சூழ்ந்தொளிர் வனப்புங் குலவிளம் பிறை
யொளிர் வனப்பும், பொங்கரவி மேரு வருவியின் மார்பிற் புரளுமுந்
நூலொளிர் வனப்பும், வென்றிவெண் ணீறு பரந்தசெம் பவள மேனியி
னெழுகொளி வனப்பும்,மன்றலங்குழல்வெற் பணைபா ணேக்கி மகிழ்
வுறுங் கடைக்கணின வனப்பும். (ககஎ)

இன்னன பலவு மெண்டிசை களினு மிலங்குறத் திருநடம் புரிந்தான்
முன்னர்நின் றிருகண் களிப்புறக் காணு முளரியங் கொடியுள முருகத்
தன்னிரு கரங்கள் சிரமிசைக் குவியத் தரையுறப் பலமுறை யிறைஞ்சித்
தன்னிரு கண்க ணீர்மழை பொழியத் தொழுதுநின் றிவ்வாம் வேண்
டும்.

தேவகா யகனே யுமைபொருட் டன்றுட் செய்க்ட மென்பொருட் டிங்
காவருங் காண வுமுற வியற்றி யென்குறை முடித்தனை யிதனுன் [நான்
மூவுல கிறைஞ்ச விப்பெருந் தலத்தை முதலிலென் பெயர்கொளவருளா
காவரும் பெருமை வுமைதிரு மணுள வடியனே னருச்சனை யாற்றும். ()

நினதரு ளுருவாய் மூலமா யிலகி நிலையுறு மினையமா விலிங்கந்
தனையுநா ளேற்றங் கமர்தடத் தினையுந் தமியனேன் பெயர்முதற் சார்வா
னினிதருள் புரிதி யிவையொழிந் துலகி னிலகுறு முயர்பொரு ளெவற் [றும்
வினைதெறு பரம வென்பெயர் முதலின் மேவிய வருடியால் விமல. ()

அன்றியு மெந்தா யித்தட நாப்ப ணன்பொடென் பூசனைத் தொழிலே
யென்றுநான் புரிந்தாங் கிருந்திடு மாறு மினிதருள் புரிகெனப் பணியத்
துன்றிய கருணை நோக்களித் தளிசூழ் சுரிகுழல் வரிவிழித் தொடிக்கை
மின்றரு தசுப்பி னணங்குரைத் தாங்கு மேவுகென் றருளியவ் விமலன்.

கமலைகே ணின்ஞ வருச்சனை புரிந்து கருதியேத் திடப்பெறு நமைநீ
யமலமா கௌரி தாண்டவ மூர்த்தி யாகவே சந்தத நினைந்து
விமலையா யமர்தி யெமதுபொன் வேணி மேவுமா கங்கையா னிறைந்து
கிமலமுற் றுளதுங் கௌரியாற் பாசா னிருமிக்கப் பெற்றசீர்த் தியதும்.

அரிவைநீ யெமையாங் கருச்சனை புரிந்தே யமர்வது மாயவத் தடத்திற்
புரியொடு மூழ்கி நமையும்வந் திறைஞ்சும் புண்ணிய னெவனவன் றனக் [கும்
பரிவினன் மோக்க மளிக்குது மென்னாப் பகர்ந்துமா சகிதனு யாங்கே
விரிமலர்த் தவிசிற் றெரியிழை பரவ வீற்றிருந் தருளினன் மாதோ. ()

பின்புமக் கமலை யர்ன்புது நடனப் பெருந்திருக் கோலத்தின் பொலிவை
யென்புநெக் குருகக் கண்டுகொண் டுள்ளத் திடையறு வானந்தம் பெருக
வன்புரு வாகி நாத்தழு தழுப்ப வகத்தடங் காதெழுந் தாங்கு
முன்புநின் றரிய வாக்கிய வகையான் முன்னவன் றன்னையேத் தெடுப் [பாள்.

ஆதியு நடுவு மந்தமுங் கடந்தோ னனாதியன் சனாதனன் விசால
மேதகு பவஞ்ச ரூபகன் பரனவ் வியயனே விபுபல கோடி
யாதவர் மதிக ளங்கிகாந் தியனல் லடியவர் மனோரதம் யாவுந்
தீதற வருளு மருட்பெருங் கடலெஞ் சிதளி நாதன்றாள் போற்றி. ()

வாஞ்செறி யுலக சிருட்டிமுன் னாக வயங்குமுக் கிருத்தியம் புரிவோன்
விரிஞ்சன்மா தவனே டுருத்திர வடிவன் வியத்தகு முக்குண நீதன்
சராஞ்சன விசால பலபுரு டார்த்தந் துதிப்பவர்க் கருளருட் டேய்மைத்
திரஞ்செயு முருவன் பாவனா சகனெஞ் சிதளி நாதன்றாள் போற்றி. ()

அனந்தவெம் பூத சங்கா யகனல் லருணிதி சனத்தன ஞதி
யனந்தமா யோக முனிகுல பூசி தாங்கிரி பங்கய னரஞ்சே
ரனந்தமா மருட பூடண மாக வம்புயாங் கிரிதரித் தருள்வோ
னினந்தொழு மனந்த நாமரு பகனெஞ் சிதளி நாதன்றாள் போற்றி. ()

வெங்கதிர்த் தாணி யங்கிதன் சோம விலோசனத் திரையன்மின் புரையு
மங்கதிர் வேணிக் கங்கையிற் றனிக்தோ னரையினிலுரகசூத் திரன்றான்
பொங்குசார்த் தூல சருமவம் பான்றாள் போற்றுநர்ப் புரக்குமங் கண்
[ணன்
றிங்களென் றென்றும் வலஞ்செலுஞ் சிகரச் சிதளிநாதன்றாள்போற்றி.

சகர்தமா லதிமுன் ஞமலர் வேதந் துதிதிரி சுபன்னமுன் னணிந்து
திகர்தமா மணங்கூர் சுசந்தன படீரந் திமிர்ந்தா தனந்தா ளாதி
யுகர்தபூ டணசந் தாத்தொடு மெளியேற் சோங்குமா சிற்சபா பதியாய்ச்
சேகர்தளி வீடு பேறுற நடஞ்செய் சிதளி நாதன்றாள் போற்றி. (கஉகூ)

இன்னிசை மிருதங் காதிதா ளங்க ளியைந்தசங் கீதங்கள் யாவுந்
தன்னு*சா மியமாத் தாண்டவப் பிரியன் றுலங்குமா மறைச்சிலம் பாற்
பொன்னட வாமகுஞ்சித பாதன்புயங்கபூ டணனரி போதன் [றும்
சென்னிதாழ்த் திருபாற் றுதிசெயுந் தலைமைச் சிதளி நாதன்றாள்
போற்றி. (கங௦)

உமைகராம் புயத்தா லுவந்துசெய் பூசைக் குளமகிழ் பவன்புவி முராரி
யமார்கண் முனிவருலகபா லகர்க ளனந்தன்முன் னவர்தொழு மமல
னிமமலை புதவு நிமலதன் ஞத னேத்துநர் காமியப் பிரதன்
றிமிளிமி ரிடப மூர்ந்தருள் பரமன் சிதளி நாதன்றாள்போற்றி. (கங௧)

புரந்தா ஞதி யமாச மூக பூசித பாதவம் புயன்றாங்
கரந்தாம் பனவா ளிலாம்பரேந் திரவி யான்மக வட்டமூர்த் தியன்பூ
வரந்தரு பிருகு வருச்சனைக் குவந்தோன் வானான் புராந்தகன் மறலி
யிரந்தரு மூர்த்தி ஞேச்சபங் கயனெஞ் சிதளி நாதன்றாள் போற்றி. ()

என்றபன் மொழியாற் றோத்திரம் புரிந்தாங் கிலக்குமி யிதயமீ துவகை
துன்றுறக் கசிந்து கண்மழை பொழிந்துதுணைக்கரஞ்சிரமிசைக்குவிந்து
நின்றிட வரினைத் திகம்பராற் பரனை நிகழ்சபா நடனநா யகனை [ழிவான்
முன்றனி யிறைஞ்சி யெழுந்துதின் றமல முதல்வனைப் பார்த்திது மொ

* சாமியம் - சமானத்துவம்.

அமாகா யகனே யிட்டுதற் கரிய வமலே பேர்த் தாண்டவ மளியேன்
றமமற விருகண் களிப்புறக் கண்டேன் சன்மசா பல்லிய முற்றேன்
பமரமா துரிய மதுநகர்ந் திசைகள் பாடுமிச் சீதளி நாப்பண்[ரைத்தாள்.
விமலநீ யுரைத்தாங் கென்றுநிற் றொழுதே விழைந்தமர்ந் திடுவெலென்று

அம்மொழி வினைய வமலனுங் கமலே யானன நோக்கியீ தறைவான்[டோ
செம்மலர்த் திருநீ புகன்றவித் துதியைச் சிந்தித்தோ ருரைத்தவர் கேட்
ரிம்மையி னினைத்த விட்டகா மியங்கள் யாவையும் பெற்றுவாழ்ந் தேனை
யம்மையின் மோக்க மடைகுவ ரைய மன்றிது திண்ணமென் றறைந்
தான். (கஙச)

இவ்வகை யருளு மீசவாக் கியங்க ளிலக்குமி வினையுள மகிழ்ந்தச்
செவ்விய விதழிக் கானன மொருவாள் சீதளி நாப்பண்வீற் றிருந்தா [த்
லவ்வணி யிழைபூ சனைபுரிந் ததற்பின் னமலனைத் தலத்தையத் தடத்தை
திவ்விய நாமஞ் சீதளி நாதன் சீதலஞ் சீதளி யென்ப. (கஙரு)

எத்தகு பொருளு மத்திரு முன்னு விலைந்தன சீதளி யென்னு
மத்தடத் தீசா னுையதா தடத்தி னவிர்தரு மருச்சுன விருக்கங் [ஞ்சார்
கொத்தல ரலங்கற் குழற்றிரு வென்றுங் குறித்தமர் வெறித்தவம் புய
நத்துல வனைய சீதளி யமோக நனிநியென் பெயரையு நணுகும். (கஙசு)

பொன்மகள் காணப் புதுநடஞ்செயுமப் புராதன நகரியின் புத்தூ[மீசன்
றென்னவும் யாண்டும் வழங்கிடப் பெற்ற தியார்க்குமுன் னவனெனு
பின்னரா மயன்மான் முதலினோ ரிறந்து மிறந்திடாப் பெற்றிய னுகி
மன்னிநின் றிளமை புதியவ னுக வயங்குதல் போன்மென மாதோ. ()

வேறு.

[யோன்
செங்கமலத் திருக்கோயில் வீற்றிருக்குஞ் சேயிழையச் செங்கண் மா
றங்குதிருப் பாற்கடலின் முன்புநடந் தரிசித்த தகைமை யுள்ளத்
தங்கனுற வெழுந்திருகை சிரங்கூப்பு மஞ்சலிபார்த் தவன்பா லந்தத்
துங்கநெறி வினவியிரு வகைவிதிகேட் டுள்ளன்பு தூண்ட லாலே. ()

செவ்விதழி வனஞ்சார்ந்து பிருகுமுனி தனைக்கண்டு சிவனைப் பூசை
யெவ்வமக லுறப்புரிந்து கௌரிதாண் டவந்தரிசித் திறைஞ்சி யந்த
வவ்விமறி திகழங்கை நாதனருள் பெற்றுடனெஞ் ஞான்றுந் தூய
பௌவநிகர் சீதளியி னிடையிருப்ப வரம்பெற்றப் படியே வாழும். ()

திருத்தலமு மத்தகைய சீதளியு மாக்கருளே செய்தெம் முள்ளந்
திருத்தமல னருளுருவா யமர்மூல வருட்குறியுந் திகழும் மூன்றுந்
திருத்தருபல் புராணமிதி காசமுதல் யாவுமுணர் சிந்தை யான்மு
திருத்தமர்சர் வோத்தமமென் றங்கையெடுத் தனலேந்திச் செப்புவாரால்

பவித்திரமாய்க் கமலசெந்நாப் பவித்ததுதி யட்டகமப் பான்கை நாக
பவித்திரன்முன் றுதிப்போரப்பானருளாற்றிருநோக்காற்பல்குசெல்வம்
பவித்திரப்போர்க் களித்தினிய மகப்பேறுமுதற்பேறுப்டைத்துமேலுற்
பவித்திரங்கு படர்ந்த்துப் பரமசிவ பதநிழலிற் பயின்று வாழ்வார். (கச௬)

என்றமல யத்தமரு மெந்தைகுறு முனியியம்ப வினிது கேட்ட
நன்றுமுனி வரரெந்தாய் தூயபரன் மாந்தனந் துகளர்ந் தின்ப
மொன்றுறநீ புகன்றனகேட் டடலெடுத்த பயன்யாவு முற்றே மந்த
வென்றிவடு கேசனருட் காதையினி விளம்புகென விரிக்க லுற்றான்.

இலக்குமிதாண்டவச் சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - அ௪க.

---

## வைரவச் சருக்கம்.

---

சிந்தை யன்புற மந்தணி
ரிந்தி ரைந்நட மியம்பினு
முந்து சீர்வடு கன்கதை
புந்தி யாதரப் புகலுவாம்.

வேறு

முன்னொருகற் பாரம்பத் திரவி யிந்து முகிழ்க்குமுனம் புவிவானை
முழுது மூடித், தன்னுமிரு ளேபரம்பி மறைப்ப வானிற் சூழ்ந்துநிறை
சுரக்கடமைத் தொலைவி வாற்றந், கொன்றுனவே லசுரர்குழா மடர்ப்ப
வஞ்சிக் குலைகுலைந்தார் புவிநரரைக் குறுகி யாங்கே, வன்னிலைய வெம்
பூத மீவதா னக்கன் வல்விடக்கன் பல்பிணிகள் வருத்த நொந்தார். (உ)

இன்னவகை பரிபவமுற் றொடுங்க விண்ணோ ரிருநிலத்தா ரொழிந்
தோங்க னெவரு மீற்றிற், றன்னியெழு மெழுகடலி னொலியே போலத்
தளர்கினர்வாய் விட்டாற்றித் தொல்லை வேத, முன்னவிலுந் தாரகத்
தை யமல னுக்கே மொழிந்திறக்கு முயிர்க்குரிய முத்தி நல்கும், பன்ன
ரிய வநந்திரத் தூமி யாய பைம்பொனெயிற் காசிநகர்ப் பாங்கு சேர்ந்
தார். (௩)

வேறு.

அன்னரவி முத்தமெனு மப்பதியுற் ருங்கே
மன்னுபல மாதவர்கு ழாத்தைமுன்வ ணங்கி
யின்னுயிர்க ளுய்யமறை வேள்விகளி யற்றித்
துன்னுநல னேயருளுந் தூயமுனி வீர்காள். (ச)

என்றினைய நற்றுதியி யம்பினரி றைஞ்சி
யன்றியசு ராதிகள்செ யார்த்திமுழு தாங்கே
நின்றெதிர்மொ ழிந்தவைக ணீங்கும்வகை செய்வீ
ரின்றுநும தின்னருளின் யாங்களுய வென்ருர். (இ)

ஆங்கவர்க ளிவ்வகைய யர்ந்தனரி சைப்பப்
பாங்கமரு மாமுனிவர் பற்பலவ ருள்ளே
தாங்குமளி யார்பிரக தார்ணன வர்க்காந்
தீங்கறுமு பாயமிது வென்றுநனி தேர்ந்தே. (சு)

ஓவரிய தீவினைகள் யாவுமுட னோட்டித்
தாவரிய வின்புபொரு டாம்பலவு மீட்டி
வீவரிய வாழ்வருளு ருத்திரநல் வேள்வி
யாவதென வெண்ணியஃ தாற்றவுள மேற்ருன். (எ)

வண்பிரக தாரணனென் றேத்துறுமத் தீர்த்தன்
விண்பரவு ருத்திரநல் வேள்விசெய வேண்டு
மொண்பொருள்க ளீட்டிமறை யோதுவிதி காட்டி
வண்பெயன னிட்டிவள ராகுதிகள் கூட்டி. (அ)

ஆற்றிவர வேள்வியினை யாங்கதனி னுப்பட்
போற்றுபல கோடிரவி போன்றொளிரு மேனி
யேற்றறுகு ணப்பகவ னேத்துறவெ ழுந்தான்
கூற்றிறநிகர் தானவர்கு லங்களைநடுங்க. (௯)

வேறு.

செய்ய வேணியு முக்கண்ணுந் தாடங்கந் திகழுந்
துய்ய கன்னமும் புருவநன் னெறிப்பொடு துலங்குந்
தெய்வ வாண்முக மும்பகிர் மதியினைச் சிவணும்
வைய மஞ்சுறு வக்கிர தந்தமும் வயங்க. (௧௦)

கரமி ரண்டினுந் தண்டமுங் கபாலமுங் கவினத்
தாள மாலே*மஞ் சிரமங் கதமுதற் றயங்கப்
பொருவின் மந்திர பூடண ணய்வடி வாகிப்
பரம யோகியாய் நின்றன னண்டெழு பகவன். (கக)

நின்ற போதிமை யவர்முதல் யாருமந் நிமலன்
முன்ற வாதபே ரன்பினுன் முறைமுறை பணிந்து
நின்று கண்களா லருந்துந ராமெனத் துவன்றி
நன்று நோக்கியாங் குருத்திர மகத்திலந் நாதன். (கஉ)

தோன்று தன்மையாற் றமக்குறு மாபத்தைத் தொலைப்பா
னேன்று நிற்றலா லியைபெய ருருத்திர னென்றுஞ்
சான்ற வாபதுத் தாரண னென்னவுஞ் சாற்றி
யகன்ற துன்பற வையநீ சரணென வடைந்தார். (கங)

வேறு.

அடைந்து நின்றெமை யாளுடை யண்ணலே
படர்ந்த வேணிப் பகவ பராபர
தொடர்ந்த டர்த்திடு தீமை துமித்தரு
ளிடந்த ரற்கிவண் வந்தரு ளெந்தையே. (கச)

சேரு மாருயிர் மாசு சிதைத்தலுஞ்
சாரு மாசி லியற்கையுந் தற்குள
தியாரு மோர்ந்திட வேகொ லெரிமகத்
தார வந்தனை யாபதுத் தாரண. (கரு)

ஐய னேயா சேயமு தேயருண்
மெய்ய னேயொளிர் வெண்மதி வேணிய
துய்ய னேயடி யார்க்கருள் சோதியே
குய்ய னேயள வாவருட் குன்றமே. (கசு)

தேவ தேவ திகழ்வடு கேசனே
காவ லான பிரம கபாலனே
பாவ லோர்துதி பண்ணவ வுண்ணடுக்
கேவ தாமிடர் தீர்த்தியென் றேத்தினர். (கஎ)

---

* மஞ்சிரம் - நூபுரம்.

இன்ன வாறுநின் றேத்தி யிரங்கிய
வன்னர் பாலசு ராதிக ளானனி
துன்னு பேரிடர் தோய்ந்தமை தேர்ந்தவ
னுன்னு மாரரு ளாலொன் றுஞற்றுவான். (கஅ)

அன்ன வூர்திய னுய வலர்மிசை
மன்னு நான்முகற் கூவி வரந்திகழ்
பன்ன ரும்மொளி யார்மதி பானுவை
யின்ன நீரவுண் டாக்கென் றியம்பினன். (ககூ)

ஓது மாற்ற முணர்ந்தனன் மாமதி
யாத வன்றனை யம்முறை யாக்கினன்
ஏவ தனேக விராட புரியினிற்
போத வுன்னியப் புண்ணியன் போந்தனன். (உ0)

வேறு.

..பாந்திடு மமல னுங்குப் பொருவிலா வசுர ராதி
யாக்துயர் புரிவார் தம்மை யாவத்தா லழிப்ப வெண்ணி
நாந்தரு மனைய வார்ப்பி னலிகுவர் கால மொன்றின்
மாய்ந்திட வுலக மெல்லாம் வந்ததோ வொலியீ தென்ன. (உக)

நம்புக லடைந்தோ ரென்ன வெண்ணுபு வடுக நாதன்
றன்பெரு மாயை தன்னாற் றனித்தனி யனைய மாந்த
ரும்பர்தஞ் செவித்து வார மொருகண மடைத்து வைத்திட்
டெம்பிரா னுகாந்த வார்ப்பே யென்னநின் றுரவித்தான் மன்னோ. உஉ

வீறுமா புருடார்த் தங்க ளளித்தருள் விமலன் றன்னைக்
கூறுமா வுருத்தி ரப்பேர்க் குழகனை விநாசன் றன்னைப்
பாறுசூழ் சூல கால பைரவன் றன்னை முன்னர்த்
தேறுவா னவர்கண் மாந்தர்க் கிடர்புரிந் தாரிற் சில்லோர். (உ௩)

தமதுபே ராற்றல் குன்றிச் சரணடைந் தார்கள் சில்லோர்
ஞமலியி னுருவு தாங்கி நண்ணின ராங்குச் சில்லோ
ரமைவுறு மறிவு நீங்கி மூர்ச்சித ரானார் சில்லோர்
சமரகா மிகளா யெம்மான் றன்னெதிர் சார வந்தார். (உச)

அனையர்க ளெவரு மஞ்சி யழிதரக் கொன்று சூலந்
தனிலுடல் கோத்து விண்ணிற் ருங்குபு கர கபாலத்
தினிலவ ருடலிற் பெய்யுங் குருதிமுற் றேந்தி புண்டா
னனியொளிர் களமே யன்ன குருதியா னனைந்த தம்மா. (உ௫)

அன்னவெங் குருதிச் செம்மை யக்களந் தன்னின் முன்னர்த்
துன்னிய கால நீலத் தொடுமணி யாகித் தோன்ற
மன்னிநின் ருங்கெம் பெம்மான் மறைகளே ஞமலி யாகித்
தன்னைவெஞ் சுமக்கு மாறு சமைத்தனன் கொண்டு பின்னர். (உ௬)

அணியகிங் கரர்க ளாக வடைந்துள பூத நாதர்
திணியபல் வேதா ளங்கள் தேவர்மா னுடர்க ளாதி
பணிகுநர் காண நின்று பயினடஞ் செய்தாங் கச்சம்
புணருமா ரவம் புரிந்தான் பொங்கருள் வடுகநாதன். (உ௭)

வேறு.

மிக்குறு*பீ தரு§ ரவத்தைப் புரிதலினு லாங்கவற்கு விளம்பு நாமந்
தக்கபை ரவனென்று வமாரெலா மகிழ்ந்தினிது சாற்றி னுர்பின்
செக்கமலத் திருக்கரத்திற் றிகழ்தண்ட மேந்திவரு சிறப்பி னுலே
யக்கடவு டனக்குரிய பெயர்தண்ட பாணியென வறைந்தார் மன்னே. ()

வாயில்செலா யோகியென வருதலினுல் யோகியென வழுத்தி னுர்கண்
மேயமல ரயன்றனைக்கூய்ச் சுடர்களையுண் டாக்குகென விதித்த லாலே
தூயமுனி வோரவனைப் பிரமேசனெனும்பெயராற் றுதித்து வாழ்ந்தார்
பாயபலப் பலபூத வேதாள மாதிகண்முன் பாவிச் சூழ்ந்தே. (உ௯)

நயந்துரிய பணிபுரித லாற்பூத நாதனென நவின்றுர் முன்னு
னியைந்தமகன் றனிற்பால ரூபகனுய் வந்தருளு மியல்பு நோக்கி [காங்கு
யுயர்ந்தபெயர் வடுகனென வுரைத்தனரெத் தலத்தினிலு முறைந்தாங்
கியந்துசெய்பா லனத்தாற்க்ஷேத் திரபால னென்றியற்பேர் விளம்பி னு
ரால். (௩௦)

இத்தகையி னிவர்திருப்பேர் புகன்றுதுதித் திடவாங்க ணிலங்கி நின்ற
மெய்த்தகுருத் திரகால வைரவனவ் விடைநின்றும் விழைவி னேடு
முத்தமமார் திருச்சைலத் தாழ்வரையின் மாபுரத்தி னுறையு மொன்பான்
சித்தர்களா லுபாசிக்கப் பட்டவனு யவரெதிரே சென்று நின்ருன். ()

---

* பீ—அச்சம். § ரவம்—ஒலி.

ஆங்கவர்பா லுளத்தருள்கூர்ந் தணிமாநி யட்டசித்தி யவர்க்கு நல்கி
யோங்குமகா வுருத்திரனு யுற்பத்தி யொடுக்கநிலை யொழிந்த யோகி
பாங்குறுதன் னமிசத்தா லட்டவை ரவர்கடமைப் படைத்தா னன்னோர்
தாங்கருட்பே ருவகையொடு தற்சூழ்ந்தா ரவர்திருப்பேர் சாற்றுவாமால்.

மாற்றருஞ்சீ ரசிதாங்க வைரவனே ருருவைர வன்னென் றாழ்மெய்ப்
போற்றுசண்ட வைரவனே குரோதவை ரவனேசெம் பொன்னார்மேனி
மேற்றிகழுன் மத்தவை ரவனேகா பாலவை ரவனே வென்றி
யேற்றுயர்பீ டணவைர வன்னெடுசங் காரவை ரவனென் றெண்மர்.

வேறு.

பொற்பமரும் வடுகேச னுயிர்க ளோர்ந்திப் புனிதநெறி கைக்கொண்டு பொலியுமாறு, *தற்பரனு யனைய ரெண்மர் தமையுநீத்துச் சைலமதின் பாங்கமர்ந்து தன்னே ரில்லோ, னற்பொடுதன் னுதிகா ரணமெய்ஞ்ஞான மறிந்திடுவான் றவமியற்று மவர்கள் போல,நற்புவியுய்ந் திடுகுறிப்பி னேற்றா னங்கே நலந்திகழும் பொலஞ்சுடர்வேன் ஞானமூர்த்தி.

அச்சமயஞ் சுவேச்சையினன் மைஞ்ஞை மேற்கொண் டருகணைந்தானன்ன துகண் டன்பி னோடு, முச்சகமும் புகழ்வடுகன் பூசித்தென்றன் முன்னமென்று முடியுமென்று மொழிதல் கேளாச், செச்சைநறுந் தொடைபுரளுந் திரண்முந் நான்கு திண்டோளான் வண்டோலஞ் செய்தருளும், விச்சையரு ளிதழிவனஞ் சேறி யாங்குன் வேட்கைமுடி மென்றினிது விளம்பிச் சென்றான். (ரு௫)

மறவர்மகன் மணந்தபுயா சலவேள் கூறு மாற்றமுள மேற்றனைய வடுகநாத, னறனவிலு மறையுருவ னமலி நீயிங் கமர்தியென நிமலனருளாணை தந்து, திறனவில்கிங் கரர்கடமைப் பூதநாதர் திரளினையங் கழைத்திதனைச்செப்பு நீவிர், பொறையிதனின் பச்சிமத்தி னமர்திர் நாமப் பொன்னிதழி மன்னுவனம் போது வோமால். (ரு௬)

அவ்விதழி யடவியினி லன்பர் பூசை யாற்றியநாம் வீற்றிருப்போமாங்கு நீவிர், செவ்வியநற் பிருகுதினத் திரவிற் போந்து செய்பலிகளவைகவர்ந்து திரிய வும்போந், திவ்வரையின் டச்சிமத்தி லமர்தி ரென்று விசைத்தவரை முடிவறனை யிருத்தி யாங்கே, யெவ்வாமுந் தவத்தாலேசித்தி யாமென் றெண்ணிநறுங் கடுக்கைவனத் தெய்தி னானல்(ரு௭)

---

* தற்பரம்—விருப்பம்.

வேறு.

ஆக்குறசி தளியனற்றீர்த் தக்குடபா லாடியஃ தவன்பே ராகத்
தாங்குமதன் கரையருகு பரமனிகே தனமெனுஞ்சி தளியி னுள்ளாற்
பாங்குறசிற் சபைவடபாற் சருவசித்தி பூமியெனும் பதத்தின் மேவி
யோங்குறபச் சிமமுகனுப் பரியங்க யோகமுய லுளத்த னாகி. (ங௲அ)

பாதமிரண் டையும்பிணைத்தப் பெருவிரலு முழந்தாளும் பாரி லூன்றி
யேதமகற் றவ்விருகாற் குதியினுறச் சகனமிரண் டிருத்திக் கேச [துச்
மோதுமுட்டி னிடமென வுறச்சூழ்ந்து நுதல்விழித்தீ யொடுங்க வைத்
சோதிமணிச் சருடோடு மணக்கமழு முற்பலமுந் துலங்கு காதும். (ங௲௯)

வக்கிரதந் தங்களும்புன் னகையுமொளிர் முகாம்புயமு மனுமுந்நூலுங் [ந்
தொக்கமுத்தா ரக்களமும் பதக்கமணி யகன்மார்புந் துணைப்பொற் றோளு
தக்கழிதப் புதாமுஞ்ச ஙாபியுமஞ் சீரமொளிர் தருபொற் றாளு
மிக்கவிரு காவிரையும் கங்கணமு மங்கதமும் விளங்குவோனாய். (ச0)

வலக்கரத்தி லசனிதரித் ததன்புறமவ் வூருவினில் வைத்திட் டேனை
நலக்கரம்வா மத்தொடையின் வைத்தருண கமலதள நயனத் தோனா
யிலக்கமில்பல் கோடியிளம் பானுவொருங் குதித்தெனமெ யிலங்கித்தோ
ன்றக், கலக்கமறச் சுழுனைவழி மூலவன றனையெழுப்பிக் கருத்தினாலே.

உச்சியிந்து மண்டலத்தி னொழுகமுதுண் டாங்குசிவ முவந்து நாடி
நச்சி•நிமி லனபால நயனியா யார்வமுற நயந்த யோக
மச்சமற வெண்ணாறன் டரைக்கணம்போற் கழுவுறவங் காற்றி னுறை
லிச்சையுட னவன்றனுதல் விழியிலொரு மகாபுருட னெழுந்தானன்றே.

வேறு.

சாந்தமிகு மதிகோடி யிரவி கோடி தழல்கோடி யொருங்குதித்த தன்
மைபோலக், காந்திசெறி திருட்டினபிங் களனு யன்றோன் கருத்துறச்
செ யோவினையுட் களிப்ப நோக்கிப், போந்திவணத் திருச்சைல நின்று
மைந்த புடவியின்பம் பொருந்துறச் புரியு மேன்மை, யாந்தவத்தா லுளத்
துவகை யடைந்தோ மிப்பா லன்போடீச் வேண்டுவன வறைதி யென்
றான். (சங)

---

சுசீவனம்—ஜீவேதல்

அவ்வுரைகேட் டருள்வடுக நாத னென்ற னருச்சனையின் கண்மனு க்கள் செயங்கள் சித்தி, வெவ்வியயோ கினிக ணங்கள் வேதா ளங்கள் வெம்பூத கணங்க ளென்பான் மேனுட் டோன்று, மெவ்வமிலா வட்ட வை ரவர்கண் முன்னோ ரெற்சூழ விருக்கின்றே னிருந்து மென்னை, கவ்வையகற் றெம்பெரும வென்ற ஞதி காரணமு மெய்ந்நூல்சொல் காட்சி தானும். (சச)

உள்ளபடி யுணர்ந்திடுவா னுள்ளம் வேட்டே னுத்தமவென் ருன து கேட் டுவகை யோடும், வள்ளலெதிர் நின்ருங்கைம் முகனுய்த் தேவி மருங்கினனுய்ச் சதாசிவனுய் வயங்கித் தோன்றித், தெள்ளமுத நிகர்ம துரி வாய்மை யாலே செப்புவா னெமக்கினிய சிறுவ மேனுள், விள்ளரிய பெருஞ்சீர்த்தி புவனம் போர்ப்ப விளங்குதிருக் கைலாய வெற்பின் மாதோ. (சரு)

நமதருளா முமையொடுநாங் கிரீடித் தாங்கு நண்ணினமெம் மமிசத் தானம்பி நீயவ், வுமையிடத்து மகவாகத் தோன்றி னுயவ் வுமைக்குரிய புத்திரனீ யுண்மை யீதா, நிமலமுறு மெமதுசுத நாமே நீயா னீயேயா மையமிதி னினைக்க வேண்டா, மமைவுறுநம் பஞ்சமுகத் தொன்ற தான வகோரமுக னீயென்ருங் கமலன் பின்னும். (சசு)

புவனமெலாம் பரம்பியுள பூதம் யாவும் புகலுளத்திற் றிருத்திநனி பொருந்து மாறு, மவைமுழுதும் புரந்திடவு நீநம் பாலி னமிசபுர னுயு தித்தா யருமை மைந்த, வெவர்கணினைக் குறித்துரிய செபந்தி யானம் யாகமருச் சனையாதி யியற்றினலும், தவறிலவை யாவுநமக் களவி லாத சந்தோட கிருத்தியமாந் தவத்தின் மேலோய். (சஎ)

உன்னமிசத் தாலுதித்த வெண்ம ரான வோதுதிறல் வைரவரே யொழியா தென்று, மன்னுலகி லெங்குமுள புரங்க ளெல்லாம் வாரியெ லாம் வனம்பூமி மலைக ளெல்லாந், துன்னுமவற் றெல்லைவரை யுன்ற னுஞ்ஞைத் தொழில்பூண்டு புரந்திடுக அலங்கு மன்போ, டன்னவர்க்குப் புரிபூசை நின்ன தேயா மையநீ யிவண்யோகத் தமர்ந்தா யேனும். (சஅ)

எப்புவனங் களிலுநம தால யங்க ளெவற்றையுநம் மடியர்குழாத் தினை யு நீயே, செப்பமுறப் புரந்திடுக நீயிக் கானிற் செயற்கரிய பரியங்க யோ கஞ் செய்த, தப்பில்வரத் தால்யோக குருவென் றுன்பேர் சாற்றுக பல் லுயிர்புரக்குந் தன் மை யாலே, யொப்பில்பசு பதியெனவும் புகல்க வெ ன்ருங் குரைத்தருளி ஞானவிய லோது கின்ருன். (சக)

வேறு.

ஆங்குறசி தளியனற்றீர்த் தக்குடபா லாடியஃ தவன்பே ராகத்
தாங்குமதன் கரையருகு பரமனிகே தனமெனுஞ்சீ தளியி னுள்ளாற்
பாங்குறசிற் சபைவடபாற் சருவசித்தி பூமியெனும் பதத்தின் மேவி
யோங்குறபச் சிமமுகனாய்ப் பரியங்க யோகமுய லுளத்த னாகி. (௩அ)

பாதமிரண் டையும்பிணைத்தப் பெருவிரலு முழந்தாளும் பாரி னூன்றி
யேதமகற் றவ்விருகாற் குதியினுறச் சகனமிரண் டிருத்திக் கேச [துச்
மோதுமுட்டி னீடமொ வுறச்சூழ்ந்து நுதல்விழித்தீ யொடுங்க வைத்
சோதிமணிச் சருடோடு மணக்கமழு முற்பலமுந் துலங்கு காதும்.(௩௯)

வக்கிரதந் தங்களும்புன் னகையுமொளிர் முகாம்புயமு மனுமுந் நூலுங்[்
தொக்கமுத்தா ரக்களமும் பதக்கமணி யகன்மார்புந் துணைப்பொற் றோளு
தக்கமிதப் புதாமுஞ்ச நாபியுமஞ் சிரமொளிர் தருபொற் றாளு
மிக்கவிரு காவலயுங் கங்கணமு மங்கதமும் விளங்குவோனாய். (௪0)

வலக்கரத்தி லசனிதரித் ததன்புறமவ் வூருவினில் வைத்திட் டேனை
நலக்கரம்வா மத்தொடையின் வைத்தருண கமலதள நயனத் தோனு
யிலக்கமில்பல் கோடியிளம் பானுவொருங் குதித்தெனமெ யிலங்கித்தோ
ன்றக், கலக்கமறச் சுழுனைவழி மூலவன றனையெழுப்பிக் கருத்தினாலே.

உச்சியிந்து மண்டலத்தி னொழுகமுதுண் டாங்குசிவ முவந்து நாடி
நச்சி•நிமி லனபால நயனியா யார்வமுற நயந்த யோக
மச்சமற வென்னூருன் டரைக்கணம்போற் கழுவுறவங் காற்றி னை
லிச்சையுட னவன்றனுதல் விழியிலொரு மகாபுருட னெழுந்தானன்றே.

வேறு.

சாந்தமிகு மதிகோடி யிரவிகோடி தழல்கோடி யொருங்குதித்த தன்
மைபோலக், காந்திசெறி கிருட்டினபிங் களனு யன்னோன் கருத்துறச்
செ யோகினையுட் கரிப்ப நோக்கிப், போந்திவணத் திருச்சைல நின்று
மைந்த புடவியின்பம் பொருந்துறச் புரியு மேன்மை, யாந்தவத்தா லுளத்
துவகை யடைந்தோ மிப்பா லன்பொடுச் வேண்டுவன வறைதி யென்
றான். (௪௧)

---

சக்ஷிவனம்—முதல்

அவ்வுரைகேட் டருள்வடுக நாத னென்ற னருச்சனையின் கண்மனு க்கள் செயங்கள் சித்தி, வெவ்வியயோ கினிக ணங்கள் வேதா ளங்கள் வெம்பூத கணங்க ளென்பான் மேனாட் டோன்று, மெவ்வமிலா வட்ட வை ரவர்கண் முன்னோ ரெற்சூழ விருக்கின்றே னிருந்து மென்னை, கவ்வையகற் றெம்பெரும வென்ற னாதி காரணமு மெய்ந்நூல்சொல் காட்சி தானும். (சச)

உள்ளபடி யுணர்ந்திடுவா னுள்ளம் வேட்டே னுத்தமவென் றுனவு கேட் டுவகை யோடும், வள்ளலெதிர் நின்றுங்கைம் முகனாய்த் தேவி மருங்கினனாய்ச் சதாசிவனாய் வயங்கித் தோன்றித், தெள்ளமுத நிகர்ம துரிவாய்மை யாலே செப்புவா னெமக்கினிய சிறுவ மேனாள், விள்ளரிய பெருஞ்சீர்த்தி புவனம் போர்ப்ப விளங்குதிருக் கைலாய வெற்பின் மாதோ. (சரு)

நமதருளா முமையொடுநாங் கிரீடித் தாங்கு நண்ணினமெம் மமிசத் தானம்பி நீயவ், வுமையிடத்து மகவாகத் தோன்றி னையவ் வுமைக்குரிய புத்திரனீ யுண்மை யீதா, நிமலமுறு மெமதுசுத நாமே நீயா னீயேயா மையமிதி னினைக்க வேண்டா, மமைவுறுநம் பஞ்சமுகத் தொன்ற தான வகோரமுக னீயென்றுங் கமலன் பின்னும். (சசு)

புவனமெலாம் பரம்பியுள பூதம் யாவும் புகலுளத்திற் றிருத்திநனி பொருந்து மாறு, மவைமுழுதும் புரந்திடவு நீநம் பாலி னமிசபுரா ணாயு தித்தா யருமை மைந்த, வெவர்கணினைக் குறித்துரிய செபந்தி யானம் யாகமருச் சனையாதி யியற்றினாலுந், தவறிலவை யாவுநமக் களவி லாத சந்தோட கிருத்தியமாந் தவத்தின் மேலோய். (சஎ)

உன்னமிசத் தாலுதித்த வெண்ம ரான வோதுதிறல் வைரவரே யொழியா தென்று, மன்னுலகி லெங்குமுள புரங்க ளெல்லாம் வாரியெ லாம் வனம்பூமி மலைக ளெல்லாந், துன்னுமவற் றெல்லைவரை யுந்த ஞன்றைத் தொழில்பூண்டு புரந்திடுக துலங்கு மன்போ, டன்னவர்க்குப் புரிபூசை நின்ன தேயா மையநீ யிவண்யோகத் தமர்ந்தா யேனும். (சஅ)

எப்புவனங் களிலுநம தால யங்க ளெவற்றையுநம் மடியர்குழாத் தினை யு நீயே, செப்பமுறப் புரந்திடுக நீயிக் கானிற் செயற்கரிய பரியங்க யோ கஞ் செய்த, தப்பில்வாத் தால்யோக குருவென் றுன்பேர் சாற்றுக பல் லுயிர்புரக்குந் தன் மை யாலே, யொப்பில்பசு பதியெனவும் புகல்க வெ ன்றுங் குரைத்தருளி ஞானவிய லோது கின்றான். (சகூ)

வேறு.

சாற்று மறையே யுருவாய சார மேய வூர்தியநீ
போற்றும் வகைய ஞானநெறி புகல்கென் றிசைத்தா யதுகேட்டி
யாற்றும் யோக முற்றினுறு மதுதான் கிரியை யகம்புறஞ்செய்
பேற்றி னுறுமா லக்கிரியை சரியை புரியப் பெறும்பேறும். (ருo)

அனைய ஞானக் கிவ்வைமுறையே யேது வாகு மாதவினு
வினைய முறையே முன்னியம்பி யிசைத்தும் ஞான வியலென்னு
நனைய விதழி மலர்வேணி நாத னருளு நங்காதற்
றனைய வருளுூன் முற்றுணரா சானை யடைந்தி தயத்தன்பால். (ருக)

நற்றாள் வழிபட் டவனருளா னல்குஞ் சமய தீக்கையினைப்
பெற்று னையினு விடத்துலகு பெற்று ளமரெங் நிகேதனத்திற்
சுற்று ழியிற்செங் கதிரெழுமுன் றாநீ ராடிப் புரிநியதி
முற்று வடைந்து திருவலகிட் டதன்மேன் மெழுக்கு முறையாற்றல். ()

புலரு முனம்போய்த் திருநந்த வனத்திற் பழுது புணராத
மலரும் பருவத் தாம்பலநன் மலர்பூங் கூடை மல்கநிறைத்
திலகுங் கணிதா ரிண்டைமுத லியற்றி யெமக்காம் பதத்தளித்த
றலமா ரொருநால் வகைமலர்நந் தனங்க ளமைத்துத் தான்போற்றல். ()

நமதா லயத்திற் றிருவிளக்கா னறுநெய் வாக்கி நனிதருத
லமையா வன்பி னமக்கினிய துதிகள் பாடன் மகிழ்ந்தாட [சிக்
லெமதா ரடியார் தமையெமைப்போற் கண்டாங் கடிக்கீழ் வீழ்ந்திறைஞ்
சமையார் பூசை புரிந்திவிற்றிக் கருத்தி னேவல் பலபுரிதல். (ருச)

இனைய பலவாய்ப் புறத்தொழின்மாத் திரையெம் முருவத் திருமேனி
தனைநோக் குபுசெய் திருத்தொண்டே சரியை தாத மார்க்கமிஃ
தினிதி னியற்று தாதரெம துலகத் திருப்ப ரெம்புதல்வ
புனித விதுமுற் றுறப்பெற்றோர் புரியுங் கிரியை புகல்கிற்பாம். (ருரு)

அமல குரவ னருள்பெற்றுங் கமையுஞ் சமய விசேடமெனு
மமல மகற்றி யருடீக்கை முறையி னமதா ரருட்குறியாம்
விமல விலிங்கம் பெற்றரிய விரைமென் மலர்பூம் புகைதீபங்
கமல மினிய நிவேதனமுற் கருதும் பொருள்பற் பலவீட்டி. (ருசு)

பூத முதலஞ் சுத்திபுரி இப் புகலு முறையா சனமூர்த்தி
யோது மூர்த்தி மானென்று வரைபா வனைசெய் தாவாகி

தேதில் விதியா லகம்புறமு மருச்சித் தேத்தி யிறுதியினில்
வீதி கோத்தி ரத்தியற்றும் விதித வோம வினைமுடித்தல். (ருஎ)

ஆய வகத்தும் புறத்திலுமன் பமைய நாளு மருவுருவத்
தூய மேனி தனைநோக்கித் தொடங்கும் வழிபா டேகிரியை
வாய வெழிற்புத் திரமார்க்க மற்றீ தாற்றும் புத்திரர்நம்
மேய சாமீப் பியம்பெறுவர் விளம்பும் யோகத்திறங் கேண்மோ. (ருஅ)

காமங் குரோத முலோபமுமோ கம்மே மதமாற் சரியமுதற்
றோமங் கொழிபு கட்டோடே தொலையத் தூரத்தி யுள்ளமுகந்
தாமன் புறுமக் கிரியைமுதிர் வாக வார்வ மேலெழலா
லேமன் னுணர்வு கீழரணி யியைதா ரகமே லரணியென. (ருகூ)

கொண்டு கடைந்து ஞானங்கி குலவ வெழுப்பி மலந்தகித்து
மண்டு மருடா ரகமாக மருவு நாடி யொருபஃதுங்
கண்டு புகுந்தாங் கோடுசதா கதியோர் பஃது மதிதேர்ந்து
விண்ட நாடி களினிடையே மின்னற் கொடிபோல் விளங்குவதாய் (சுo)

தாளி னிரண்டு பெருவிரலிற் றொடங்கி மூலா தாரம்வரை
வாளி னுருவ மிரண்டுபிர மாந்தி ரத்தின் வரையொன்றாய்க்
கோளி லாவுட் டுளையினதாய்க் குலவு மிடைபிங் கலையெனும்பே
ராளு நாடி யவையாங்காங் களவிப் பின்னுற் றதுவாகி. (சுக)

வனச முகிழாங் கதோமுகமாய் மருவுந் தகைத்தாய்ச் சுழுனைதனை
நினைபு சிவார்க்க னலவற்றை நிமிர்த்தி யலர்த்தி யக்கிரந்தி
யினையு மவிழ்த்துச் சுழுனைவழிப் பிராண னெழமூ லாதாரந்
தனில்வான் மேற்பை கீழ்சுருக்கிச் சார்ந்து துயிலுங் குண்டலிதான். ()

துயினின் றெழுந்து மேனோக்கத் துகளின் மூலக் கனலெழுப்பி
வியலிந் துருகிச் சுழுனைவழி வெளியும் பெருகி யொழுகமுத
பயமுண் டமர்ந்து மனோலயமாய்ப் பகரு மூலா தாரமுத
மியலுஞ் சுவாதிட் டானமுய மிலங்கு மணிபூ ரகநாபி. (சுங)

பிரவு மநாக தவ்விதயம் விசுத்தி தாலு மூலமொளி
பரவு மாஞ்ஞை புருநடுவாப் பகரு மாறு தாரமவற்
றுருவங் குறியக் கரங்கமல மோரா றுள்ள படியுணர்ந்து
மருவு மவ்வா திடைக்களிற்று வதன னயன்மா லுருத்திரனே. (சுச)

திகழு மாகேச் சுரன்சதா சிவனென் றிருமூ வரைமுறையே
நிகழ வழிபட் டருள்கொடுமே னெறிசென் றிதழாயிரத்தெட்டுத்
தொகுமம் புயமேற் றலங்குநடச் சோதி தனைக்கண் டுன்னிநித
மகனு மிருபத் தோராயிரத்தோ டறுநூ றுய சுவாசத்தை. (சுரு)

சங்கென் றட்பூ ரகம்புரிந்து சமனுற் றமரக் கும்பகஞ்செய்
தங்கென் றெழுப்பு மசபையுணர்ந் தரிய சிவமா ரருளான்மா
வெங்க ளியக்குந் திரோதைமல மெனுமைந் தெழுத்தின் மறைப்பிருணீத்
தங்க ளருண்மெய்ச் சிவனிருத்தவ் வைந்தோ டொருமூன் றிரண்டொ
ன்றுய். (சுசு)

குமவி முத்தி முதலாகு மனுவை மனத்தா னுறச்செபித்து
விரவி விந்து நாதமுமாய் மேவு வெளியிற் சிந்தைநிறீஇ
வருதன் வடிவஞ் சிவன்வடிவாய் வயங்க நடன குஞ்சிதத்தாட்
டிருவு மிகுநா புரவோசை தேக்கி யமர்தல் சிவயோகம். (சுஎ)

இனைய யோகாங் கம்மிருநான் கியம நியம மாசனமே
கனை*கா றகைதல் பிரத்தியா காரந் தார ணைதியானம்
புனித சமாதி யாமிவற்றைம் பொறிமுன் மனமார் சாக்கிரத்தி
னனிசெய் தவங்க ளியமமதா னனவிற் பொறிமுன் னெழிகனவில். சுஅ

சாலுந் தவநி யமங்கரணங் கலவா னனவின் கட்சுழுத்தி
மாலுந் தனியா சனமாம்வே ருக்கி மலிதத் துவமுழுதும்
பேணும் பிரம மேதானுப் பேத மறுசாக் கிரதுரியம்
பூணும் பிராணு யாமமதாம் பொருவில் பரமா யதுமறந்தே. (சுகூ)

நிகழ வருசாக் கிரதுரியா தீதம் பிரத்தி யாகார
மிகலி லகண்ட வடிவதுகண் டெங்குந் தானு யிருந்திடுதன்
மிருதா ரணையாங் காட்சியெலாங் கண்ணுய் விளங்கி யாட்சியினி
லகலா தமையு மதுதானே யரிய தியான மாகுமால். (எ0)

பால வரிய தற்பதற்தொம் பதஞ்சா ருபாதி கற்பனைகள்
சரியு முறைகண் டசிபதமாஞ் சச்சி தானந் தப்பதத்தி
னுரிய சமர நிலையுணர்ந் துறுசிற் பதம்பெற் றறங்குதலே
யரிய சமாதி யாம்யோக வட்டாங் கத்தி னடைவிதுவே. (எக)

சேர்க்கும் யோக மகத்தொழின்மாத் திரையே யருவத் திருமேனி
கோக்கிப் புரிதோண் டாயசக மார்க்க மாகு தனித்திதனை

---

* காறகைதல்—பிராணுயாமம். † எர்—எழுச்சி.

யாக்கு மவரெஞ் சாரூப மடைவ ரிவ்யோ கமுநாளெனன்
† றேர்க்கும் போத நாட்டமலா லிறவா வின்ப மின்றுமால். (எஉ)

நேச மிகுநம் மரும்புதல்வ நிகழ்த்து ஞான மதுகேட்டி
பாச ஞானம் பசுஞானம் பதிஞா னந்தா னெனமூன்றும்
பசு பாச மெனுமலந்தான் பிரியும் வகையி னொருமூன்று
மாசென் றுரைக்கு மம்மூன்றன் பெயருஞ் செயலு மறைகிற்பாம். ()

வேறு.

ஆணவங் கரும மாயையென் பனவே யன்னவற் றின்பெய ரவற்று
ளாணவஞ் செம்பிற் களிம்பினுன் மாவி லனுதியே கலந்துள தொன்று
யானவந் தருபெண் ணலியெனப் பரம்பு மாவிக டோறும்வே றுகி
§யாணவந் தருமவ் வறிவொடு தொழிலை யாவரித் தாங்ஙன நின்றே. ()

தத்தம கால வெல்லையி னீங்குஞ் சத்திக ளனேகங்க ளுடைத்தாய்ப் [யர்
பொத்துறுசடமாய்ப்ᛉபோத்திருத்துவத்தைப் புரிவதாய்விரிவ்தாம்பெரி
கைத்திடு கரும மாவிகண் மனவாக் காயத்தாற் செயுமற மறமா
மத்திறற் பாவ புண்ணிய மிரண்டு மடர்துயர் படர்சுக மளிக்கும். (எரு)

இனைய*கான் மியந்தா னிப்பவத் தியற்றப் படும்பொழு தத்துவா விட
கனிவுற வீட்டப் பட்டுயர் தூல கன்மமா யாகாமி யப்பே [மாய்க்
ரினையுறும் பவங்க டோறுமிவ் வகையே யீட்டிடப் படுபுதன் பருவந்
தனையுறு மளவுஞ் சூக்கும மாகச் சாருபு புத்திதத் துவந்தான். (எசு)

தாரக மாக மாயையிற் கிடந்து சாதியோ டாயுபோ கமதாச்
சாருமிம் மூன்றற் கேதுவாய்ச் சனகந் தாரகம் போக்கிய மென்னச்
சேருமூ வகைத்தாயாங்கபூ ருவஞ்சஞ் சிதம்பா மறங்களென் றுரைக்கும்
பேருறு மினைய சஞ்சிதத் தொகையுட் பிரிந்துபக் குவமுறப் பெற்றே.

மேலுறு முடம்பை யதுகொடே யனுப வித்திடப் படுமிரு பயனை
யேலுற வீந்து பயன்படுங் காலை யிலங்குறு மாதிதை விகமே
பாலுறு மாத்தி யான்மிக மாதி பௌதிக மென்னுமுப் பாற்றாய்ச்
சாலுறும் பிராரத் தம்மெனும் பெயர்தான் சாருமா வித்தொகு கருமம்.

---

† எர்—எழுச்சி § ஆண அம்—அன்பினழகு.
ᛉ போத்திருத்துவம்—போகநுகர்ச்சிக்கு வினைமுதலாதற்றன்மை.
* கான்மியம்—கன்மமலம்.

வீற்றவீற் றாகிச் சஞ்சித மாகா மியம்பிரா ரத்தமென் றுரைக்கு [பின்
மாற்றினின் மூன்று வகைத்தென வமையு மனையவை விளைநிலப் பயன்
பேற்றினுக்காகத் தொகுத்திடுகவையும்பிறங்குறவிளைந்திடுமவையு
மேற்றுண வாக நிகழ்ந்திடு மிவையு மென்னுமுப் பகுதிபோ லியையும்.

புகலுமிக் கருமத் திருவினை யபுத்தி புத்தியாற் புரிதலென் றிரண்டா,மி
குமவைபுடைபேர் திடும்வினை பெயராவினையெனும் விதத்தினுமிரண்
டா,மிகவரு மினைய வகைபல வமைந்த வித்தகு கான்மிய மலந்தா,னுகுத
லுற் பவித்த லுடன்பட வெஞ்ஞான் றம்பரம் பரையினில் வரலால். ()

ஆதியி றுடைத்தா யும்பிர வாக வஞ்தியா யாவியை யார்த்திட்
டோதுகா ரியவேற் றுமைகளுக் கேற்ப வுயிரவைக் குரியபல் வேறாய்ப்
போதுயோ னிகளைத் தோற்றுவிப் பதுவாய்ப் புகறருஞ் சூக்கும மாய்நம்
மேதகா ணையினு னடப்பதா மாயை விதத்தினை மேலினி.விரிப்பாம் ()

பன்னுமிம் மாயை சுத்தம் †வா லாமை பகுதியென் பெயரின்மூன் றாகு
மன்னவற் றமல மாயைநித் தியமா யருவமாய் வியாபக மாகித்
துன்னிய சடமாய்ச் சொற்பொருள் வடிவுஞ் சுத்தமாந் தனுமுத னான்குந்
தன்னிடை யுதித்தற் காதிகா ரணமாய்த் தனில்வரு பாம்பரை தன்னில்.

அத்தகு நாதம் விந்துசா தாக்கி யத்தொடு மகேச்சுரஞ் சுத்த [கோர்
வித்தையென் றிடுமைஞ் சுத்தத் துவம்ப வித்திடு முதலதா யெமக்
சத்தியாய் மயக்கஞ் செயாததா யிலகுஞ் சாற்றிய வசுத்தமா மாயை
நித்திய மாகி வியாபக மாகி நிகழ்த்திடு மருவமாய்ச் சடமாய். (அங)

பிரளய காலந் தன்னிலான் மாவைப் பிணித்திடு கருமங்கட்கிடமாய்,மரு
வுயிர் களுக்குச் சுத்தமோ டசுத்த வகைத்தனு வாதிக ணான்கும், உருமுத
னிபமாய் மயக்கஞ்செய் வதுவாய் வயங்குதன் பரம்பரை வழி த்தாய்த்
தாவரு கால நியதியே கலைதான் சாற்றிடு மாரகமே வித்தை. (அச)

வருதிறன் மானுந் தோன்றுகா ரணமாய் வயங்குமிவ் வாறுமே யாகி
விரவுறு புருட தத்துவத் தோடு வித்தியா தத்துவ மென்னப்
பரவுமிச் சிரதத் துவமெனப் படுமோற் பகுதியி னியல்பினிப் பகர்து
மாபினி னுணர்க வப்பிர கிருதி மாயை,தன் பால்வழி வழியாய். (அரு)

---

† வாலாமை-அசுத்தம்.

பூதபஞ் சகமுஞ் சுரோத்திர முதலாப் போதுஞா னேந்திய மென்னும்
போதபஞ் சகமும் வாக்குமுன் னாகப் பொலிதரு கருமவிந் தியமென்
றோதுபஞ் சகமுஞ் சத்தமுன் னாக வுறுதன்மாத் திரையென வுரைக்கு
மேதுபஞ் சகமும் புத்தியாங் கார மியைமனஞ் சித்தமென் றியம்பும்.()

இவையொரு நான்குட் கரணமு மாக விருபத்து நான்கென லாகி
யவிர்தரு மான்ம தத்துவ மாய வசுத்ததத் துவங்கடா மடைவே
பவமுற நிபமா யசுத்தமாங் தனுமுற் பவித்திடற் காதிகா ரணமாய்த்
திவளுமால் வடுக வாணவங் கருமந் திறப்படு மாயையின் செயல்கள். ()

இனிதுரை பகர்ந்தா மிவற்றொடு மாயே யந்திரோ தாயியென் றிரண்டு
பினுமல முள்வா லிவற்றுண் மாயேயம் பேசிய மாயைகா ரியமாந்
தனுவொடு கரண புவனபோ கங்க டத்துவத் தொகுதிக ளாகு
நினை*திரோ தான கரியெனு மலந்தா னிகழ்த்துமும் மலங்களை நிரையே

பாயமற் றவற்று லாந்தொழிற் படுத்திப் பாகங்கள் வருவிக்கு நமது [ர்பா
தூயசிற் சத்தி யாகுமான் மலத்தைத் தொழிற்படச் செலுத்திடு தொட
லேயநஞ் சத்தி யிதனையு மலமென் றியம்புப மைந்தவிவ் வகைய
வாயவைம் மலங்க டமையுமா செனவே ருகிடா தகமென வமர்தல். ()

முன்னவில் பாச ஞானமா மிதன்மேன் மொழிபசு ஞானத்தின் முறைகே
ளன்னவைம் மலத்து ளாணவ மல்லா வனைத்தையுங் கழற்றி வேறாகி
யின்னநா னல்லே னிவையெலாங் கீழ்நா னிவற்றின்மேற் பொருளென
வெண்ணாப், பின்னுறு முனைப்பி னமிழ்ந்துபு நானே பிரமமென் றகங்
கொள் பெற்றியதே. (௧0)

இனிவரு பதிஞா னத்தினை யோர்க யானெனு மகமிகு மிதனுற் [ர்ந்திட்
றுளிவரு பவங்க ளகன்றிடா தெனவே துணிந்தமைந் தருள்வழித்தொட
டனையநல் லருள்புக் காணவ மலமு மகன்றிடப் பெற்றிய லான்மாத்
தனையினி துள்ள படியுணர்ந் தவைய னேகமாய்த் தயங்குநித் தியமாய்.

உரைவியா பகமாய்ச் சேதன மாயொன் றுறுமலத் தடையினை யுளவாய்த்
தருபல வுடல்க டோறும்வெவ் வேறாய்ச் சார்ந்ததன் வண்ணமாய் வினை
கள், புரிபதன் பயன்க ளுகர்வதா யுணர்த்திற் போதமா மறிவிறென்
றெனரு, யரிதரி வனவாய் சிறுதொழி லினவா யமைதலி னினையவா
ன்மாக்கள். (௧௨)

---

* திரோதானகரி—திரோதானத்தைச் செய்வது.

தம்மையே பிரம மென்றுகொண் டங்ஙே தருக்குபு தம்மறி வெல்லா
மம்மவாங் காரக் களித்தரு ளாகி வாழ்வது முறைமையன் றவைதா
மெம்மையு முள்ளும் புறம்புநின் றருளு மிறைமைசால் பதியொருமுதலை
மும்மையுமுடையவாகுமென் றுள்ள மூரணுருவகை துணிந்துணர்ந்தே.

அப்பதி*யநாதி போதமே சருவஞ் ஞத்துவ நிராமயான் மாவே
தப்பற மலுத்த சத்தியே யனந்த சத்தியே சுதந்தரத் துவமே
யொப்பறும் விசுத்த தேகமே திருத்தி யெனசிவா கமமினிதோதுந்
திப்பிய குணங்க ளோரிரு நான்குஞ் செறிதர நிறைபர சிவமே. (கச)

என்னவுத் துணர்ந்தாங் கனையமெய்ஞ் ஞான மினிதுணர் ஞாதுரு வி
லங்கி, மன்னுறு ஞேய மெனும்பகுப் பொழிந்து மலர்தரு ஞேயத்தி
லழுந்தி, யுன்னுதா னதுவா யொன்றியெஞ் ஞான்று மொழிவிலாச் சி
வானந்தத் துறுத,லென்னுமித் தகைத்தா மைந்தநீ வினுய வெழிற்சிவ
ஞானமின் னதுதான். (கரு)

அகப்புறத் தொழில்க ளிரண்டுமொன் றின்றி†யறிதொழின் மாத்திரை
யானே, பகுப்புற முனஞ்சொன் முத்திரு மேனிப் பாத்ததாய் வாத்தய
ர்ந் தெங்கு, மிகப்பொலி யகண்டா காரமா நித்த வியாபக சச்சிதானந்த
சுகப்பிழம் பாய சிவனிடத் தாற்று தொண்டென வியம்புசன் மார்க்கம்.

வேறு.

என்றிவை யுபதே சித்தாங் கெம்பிரான் வடுக நாத
னன்றருள் சரியை யாதி நான்குமுய்த் துலக மோர்ந்து
நின்றிடு மாபி னின்று நின்மலத் துவம்பெற் றுய்பாக்
கின்றினி துரைத்து நின்பா லென்றெழுந் தருளி னுனல். (கஎ)

---

* அநாதிபோத முதலிய இவ்வெண்குணங்களும், முறையே தமி
ழில், இயற்கையறிவு, முற்றறிவு, இயல்பாகவே பாசங்களி னீங்குதல்,
பேரருள், அளவிலாற்றல், தன்வயம், தூயவுடம்பு, வரம்பிலின்பம்,
என வழங்கப்படும். இவற்றள், நிராமயான்மா அநாதிபோதத்துள்ளும்,
விசுத்ததேகம் அலுப்தசத்தி யுள்ளுமடங்குமாகலின் ஆறுகுண மாத்தி
ரையாகவும வழங்குப.

† அறி-ஈறகெட்டு நின்றபெயர்.

அந்திலவ் வருணி னந்தாங் காதா மிகவக் காரி
வந்துசெய்ஞ் ஞான யோகம் வயங்கவீற் றிருந்தா னங்கே
கந்தரு வோர்கள் சித்தர் கணங்கள்விண் ணவர்கண் மண்ணோர்
சிந்தையின் விழைந்த யாவுஞ் சேர்வுற வருச்சிப் பாரால். (கூஅ)

அங்கருள் வடுகன் *கூளி யருக்கறி வடுத்தாங் கிம்பர்ச்
சுங்கன்வா ரங்க டோறுஞ் சிலர்பலி தூங்க வாங்குப்
பொங்குறு மடைகொ டுப்பார் § புபுட்சுக்க ளாகி யர்நாட்
டங்குசீ சைல நின்றும் பூதர்கள் சார்ந்து போவார். (கூகூ)

இப்படி நிகழ்நா ளொன்றி லிவ்வடு கேசன் முன்னர்
வெற்புறு சிரத்தி னோடும் வியன்கரத் தசனி தாங்கி
வைப்பின்முன் கண்டி லாத மாயிரும் பூதமொன் றுங்
கப்பரன் காண வீழ்ந்த தலறிக்கொண் டவனி மீதே. (க00)

விவிதசேட் டிதங்க ளங்கு வீழ்ந்தவெம் பூதஞ் செய்ய
வவை †நமற் காரமாயத புத்திபூ ருவத்தாற் றந்த
நவமுறு வணக்க மாங்கு நவிற்றுமக் கணத்தி னம்ம
திவியதே வுருவங் கீர்த்தி சிறந்தமெய்ஞ் ஞானஞ் சேர்ந்த. (க0க)

சேர்ந்திடு மவ்வி லன்னோன் செங்காத் தசனி ஞானி
யூர்ந்தவன் றனிக்க ரத்தி லுற்றது தலையின் வெற்புத்
தீர்ந்தான் றிசையி லோர்பாற் சென்றுவீழ்ந் தமர்ந்த தாங்கே
சார்ந்திடு மனைய வெற்பைச் சயந்தவெற் பென்ப மாதோ. (க0உ)

புவ்னமுற் றடைந்து போற்றும் வடுகனப் பூதஞ் செய்த
வவயவச் சேட்டை யாய தொழிற்குட னருள்பெ ரும்பே
றிவையெனி லனையான் றன்னை யன்பின்மிக் கிறைஞ்சி னோர்க்குத்
தவமன முவப்ப நல்கும் பேற்றையார் சாற்ற வல்லார். (க0ந)

சிறந்ததே வுருவம் பெற்ற தேவனத தேவ நாத
னிறைந்தபூங் கழலிற் பல்கா னெக்குள முருக வீழ்ந்தாங்
கிறைஞ்சின னெழுந்து முன்னின் றின்பமா ருளத்த னாகித்
துறந்தவர் பரவு மன்னோன் றுணையடி துதிக்க லுற்றான். (க0ச)

---

* கூளியர்—பரிவாரர்கள். கூளியருக்குக் கொடுப்பாரென்றியையும்

§ புபுட்சுக்கள்—புசித்தற்கு விருப்புடையர்.

† நமற்காரம்—நமஸ்காரமென்னும் வடமொழித்தற்பவம்.

முறைமுறை மறைநின் றேத்து முருத்திர மூர்த்தி போற்றி
பிறையணி சடையாய் போற்றி பிரமன்மாற் கிறைவ போற்றி
விறலயிற் சூல போற்றி நவபுரி விமல போற்றி
கறையகத் திறைவ போற்றி கவின்வடு கேச போற்றி. (க0ரு)

விலக்கருஞ் சாப மென்பால் விடுத்தருள் விமல போற்றி
மலர்க்கரத் தசனி தன்னை வாங்கிய வள்ளால் போற்றி
கலக்குபே ரொலிசெய் தன்ப ரிடர்முனங் களைந்தாய் போற்றி
யலகவின் வயல்சூழ் புத்தூ ரமர்வடு கேச போற்றி. (க0சு)

என்றவன் பரவுங் காலப் பூதத்தி னுருவ மேகித்
றன்றுமங் கலமார் தெய்வத் தோற்றமெய் தியதுங் காரி
தன்றிருக் கரத்தி னேறு சார்ந்ததுந் தலைமே லொன்றி
நின்றகுன் றீசானத்தோர் நிலையிற்போய் வீழ்ந்த வாறும். (க0எ)

அத்தகு தேவ ரூப மடைந்தவ னவய வங்கண்
மொய்த்தகங் கணங்கே யூர முத்தமா லிகை முன்னாவ
மெய்த்திமிர் சுகந்த சந்தந் தொடைதிகழ் வடிவும் விண்ணோர்
சித்தர்மா முனிவ ரேனோர் திகழ்தரக் கண்டார் மன்னோ. (க0அ)

கண்டவர் யாரு மாங்கட் களிப்புற வவனைக் கூவிப்
பண்டுநீ யார்கே சத்திற் பருப்பத மசனி யங்கைக்
கொண்டதென் னிரண்டு மிங்ஙன் விண்டதென் கூறு கென்றார்
விண்டவை வினாவி யன்னா னவர்க்கிறை விடுக்கு மாங்கே. (க0கூ)

விண்டனி யரசன் மைந்தன் சயந்தனென் மேவி நண்பாக்
கொண்டகாந் தருவ ராச குமாரனை விழைந்து நேடிச்
சண்டவெற் பதனின் மேல்பாற் சத்திய கிரிக்கு தக்கி
லெண்டரு மூழ்நின் றந்த விரையவாங் கேகி னேனால். (கக0)

ஆங்கொரு குகைமு கத்தின் மனோகர மான வீணைத்
தேங்கனி பிசைமுன் செல்லச் சேயிழை யொருத்தி கண்டத்
தீங்குர லிசையுஞ் சேர்த்தென் சிந்தைநெக் குருகப் பின்சென்
றோங்கிசை யெதுகொ லென்று வுணர்வுறு தொலிப்பக் கேட்டேன். ()

கேட்டலு மிசைவாள் கொண்டென் னெஞ்சினைக் கிழித்தாள் கொங்கை
கோட்டினை யசிர்வாள் கொண்டு கிழித்தனன் கூடி வேட்போர் (க்

நீட்டினன் புறங்காண்பாக்கு நினைந்ததி விரைந்து சென்றேன்
வேட்டுவ னொருவ னுங்கென் னெதிர்புகுந் திதுவி ளம்பும். (ககஉ)

ஐயநின் னுருவ நோக்கி னரசிளங் குமா ரேதி
வெய்யமா வழங்கு மிந்த வெற்பரு குற்ற தென்கொ
லெய்யமெய் யோது கென்றா னிசைத்துமுன் னிகழ்ச்சி யாவுந்
தையறன் விழைவுங் கூற வினையிது சாற்று மன்னோன். (ககங)

கேட்டியான் மைந்த முன்னாட் கௌதமன் கிழத்தி யின்பம்
வேட்டுநின் றாதை பெற்ற விழுமமோ யுணர்கி லாய்கொ
ரோட்டல ரைம்பாற் சீதை தனைவிழை தூர்த்த னுற்ற
கேட்டினைக் கேட்டி லாய்கொள் கேண்மதி யினிதென் மாற்றம். (ககச)

களிகிளர் சயந்த வீது கௌணனுச் சிரம மன்னோ
னுளமகிழ் பன்னி கான மிசைக்கின்றா னுவந்தன் னுளே
வளமைசான் மயன விக்தான் மணந்தவம் முனிவன் கானம்
பளகறப் பயிற்று வித்தான் பழுதுநீ போத லென்னா. (ககரு)

கிராதனுங் குரைத்துச் சென்றான் கிளக்குமவ் வாய்மை வாய்மை
தராதரை யறையுங்*கீல கம்மென லாகிச் சால
விரோதமா யமைந்த வாற்றான் விழைந்தவா வாங்கட் சென்றக்
குரோதமின் முனிவன் வாழுங் குகைத்துவா ரத்தின் மாதோ. (ககசு)

அங்கையான் விபுல வெற்பொன் றெடுத்தடுத் ததனை மூடித்
துங்கநீண் மாத்தினா†லர்க் களமுறத் தொடக்கி யாங்குத்
தங்கின னிருப்ப வாற்றுந் தவமுனி வெகுண்டு நோக்கிப்
புங்கமார் சுற்பி னுளே விளித்திது புகல லுற்றான். (ககஎ)

மங்கைகே ணின்னை யானிங் கிருப்பது மதித்தி டாத
னங்கபீ டிதனு யெந்த வதமனோ நயந்து வந்தா
னங்கவன் சிரத்தி லிந்தத் துவாரவெற் பமர்க வன்னான்
செங்கையி லதன்மேற் பூட்டு மர்க்கள மிடியாய்ச் சேர்க. (ககஅ)

அவனுருப் பூத ரூப மாக்க வறிவி ழந்தாங்
கவனுறு பித்த னாக வென்றுநான் காய சாப

* கீலகம்—ஆப்பு.
† அர்க்களம்—தாழ்க்கோல்.

மவனுறச் சபித்தா னெஞ்ச மழிந்தியா னலமந் தஞ்சி
யவனுடைப் பதத்தில் வீழ்ந்தே யடிக்கடி வணங்கிப் பின்னர். (கககக)

அருந்தவ நிதியே ஞானத் தவிர்மணி விளக்கே தேவர்
மருந்தினைத் திடவா னந்த மருந்துமா முனிவர் வாழ்வே
பொருந்துமெய்க் கருணை வாரி புன்மையேற் களித்த சாபப்
பெருந்துய ரொளித்தா லென்னுப் பேதுற முனியி தோதும். (கஉ0)

இந்திர குமார நீயெஞ் ஞான்றுபோ யிதழிக் கானத்
தெந்தைசீர் வடுக நாத னிணையடி யணைய வீழ்ந்து
வந்தனை புரிதி யஞ்ஞான் றிப்பெருஞ் சாப மாறு
மைந்தறு ஞான முண்டா மற்றிது நிகழ்ந்த பின்னர். (கஉக)

போதுதி சுவர்க்க மென்று புகன்றன னவனால் வந்த
மாதுயர்ச் சாப மேற்றப் பூதசா லங்கள் மன்னு
மேதரு வெற்பிற் பன்னாள் வெந்துய ருழந்து பின்னப்
பூதசா லங்க ளோடு போந்திவண் வடுக நாதன். (கஉஉ)

பொன்னடி பணியப் பெற்றேன் புகல்கிரு தார்த்த முற்றே
னென்னுறு சாப நீங்கிற் றென்றுரைத் திருவி சும்பிற்
றன்னரு கமரர் சூழச் சார்ந்துபல் பொருளுங் கைக்கொண்
டின்னுமக் கொன்றை யங்கான் மீட்டும்வந் துவகை கூர்ந்து (கஉங)

க்ஷேத்திர பாலற் போற்றிக் கிளர்மணி யாற்செம் பொன்னாற்
சீர்த்திசேர் மயனுற் றேவ சித்தமண் டபமுன் சேர
வேத்துறு கோயில் செய்வித் திலங்கெழிற் சயந்த னென்பா
னூர்த்திதிர்த் தருள்செய் வாரி தனையிருந் தருச்சிப் பானால். (கஉச)

முக்குண வகைய வன்னம் பண்ணிய முதல வாகத்
தொக்கபல் பொருளும் வெவ்வே றளப்பில தொகுத் தமைத்து
மிக்குய சார மிரெண் விதம்பட விழைவுற் றன்பாற்
றக்கவர்ச் சனைமுன் னூலிற் சாற்றிய விதியாற் செய்தான். (கஉரு)

இருகாஞ் செவிதோ ளெற்றி யெழிற்கர மிவையோ டெட்டுந்
தரையுறப் பரவு மன்பாற் றழ்ந்தன னெழுந்து செங்கை
சிரமிசைக் கூப்பி நின்று திகழுமுன் னவன்பே ராய்ந்தப்
பரனரு ளொளிதி னல்கும் பன்னிரு நாமஞ் சொல்வான். (கஉசு)

## வேறு.

தவர்புகழு மாவதுத்தா ரணன்ரூன் முன் னூல் சாற்றுமுருத்திரமூர்த்தி தண்டபாணி, திவள்வைர வன்பூத நாதன் வேதஞ் செப்புபசு பதியோற் சித்தி தன்சீர்ப், புவிபுகழ்யோ கினிகுரவன் வடுக நாதன் போதமருள்பிரமேசன் புனித யோகி, நவிலருங்கேத் திரபால வடுகற் காக நமவெனமுன் ரெருகுதியுற நயந்து போற்றி. (கஉஎ)

அனையமக வான்சூனு மறையோ னுய வருமுனிமா கௌணன்வெகுண்டறைந்த சாபந், தனையடர வருந்துபய மொருங்கு நீங்கித் தணப்பரியபூதவுருத் தனைவிட் டேக, முனையுருவுற் றறிவெய்த வளித்த முன்னோன் முடுவலிவர் வடுகனருள் முன்னி முன்னி, மனநெகிழத் தனித்தனியங்நாம மேன்மை வயங்கவரு ணயங்கொளமுன் வழுத்துகின்ருன்.

மாவேள்விப் பிரியாங்கி குண்டசாதன் வயங்குமுருத் திரமூர்த்தி மரிக்குஞ் சீவர், பாவாதி மோசனஞ்செய் காசி பூமி பாலன்மகா பலன்கரகா பால னென்றுந், தாவாது தேவமா னுடரா பத்தைத் தவிர்த்தருளு மாவதுத்தா ரணன்ரூன் பூவின், மாவாழுஞ் சீதளியின் மேவுங் காலவைரவனை யகத்திருத்தி வணங்கி வாழ்வாம். (கஉகூ)

தானேசெ யாரவவீ ராட்ட காசத் தாலண்ட சந்ததிக டமைப்பூ ரிப்போன்,வானேந்து ஞானேந்து கண்ட மோடு மாநதியாஞ் சானவ்நான் மறைக்க பால, மூனேயுஞ் சூலமணிந் தோன்*க ராள வுருத்திரமா மூர்த்தியன்ப ருளத்தன் பூவின், மானேயுஞ் சீதளியின் மேவுங்கால வைரவனை யகத்திருத்தி வணங்கி வாழ்வாம். (கநo)

செங்கையமர் கொடுந்தண்ட தாட னுதி செய்துதைத் தியசங்கஞ் செகுக்குந் தீரன், வெங்கதிர்தீ தண்கதிரின் விலோ சனத்தான்விபுகடனவாணபுரி விறலின் மிக்கோன், கங்குல்பகற் றிவியசங்க சேவி தன்சீர்க் கடோர தண்ட பாணியலர்க் கமல வாழ்க்கை, மங்கையுறை சீதளியின்மேவுங் கால வைரவனை யகத்திருத்தி வணங்கி வாழ்வாம். (கநக)

பயங்கரமார் தொனிகடமுள் விறல தாகிப் பரவுகண்ட நாதத்தாற் பயஞ்செய் விப்போன், பயங்கரமா பாரதிரி சூலங் கட்கம் பரிசைதரன் சத்துருக்கள் பதைத்துண் மாழ்கப், பயங்காமெவஞ் சமத்தழிப்போன் பயங்காதி பைரவனுப் பட்கமலை பயிலும் வாவி, வயங்கியொளிர் சீதளியின்மேவுங் கால வைரவனை யகத்திருத்தி வணங்கி வாழ்வாம். (கநஉ)

---

* கராளம்—பயங்கரம்.

ஏக்கா லத்திலிணை யொத்துத் தோன்று மிளம்பிறைவக் கிரதந்த ளிருண்ம யம்மை, நாகசம ரூபதா னகில தேவ நயபூசி தாங்கிரிபங் கய னெஞ் ஞான்றும், பாகமுறத் தற்குழும் பூத நாதன் பதுமைசி வார்ச் சனைசெய்தடப் பாங்கர் மன்னி, வாகமருஞ் சீதளியின் மேவுங் கால வைரவனை யகத்திருத்தி வணங்கி வாழ்வாம். (கருரு)

சுராசுர ராதியள விலபல் கோடி தொகுசிவ சங்கநா யகனுற் றேற் றச்,சாவசரப் பகுப்புறுமிப் பவஞ்ச மெல்லாந் தந்துநிறீஇ யழிக்குமுதல் சைலந் தோறும், பாவுநிலை யாலயத்தோ னயன்மால் போற்றும் பராபர ன்மா பசுபதியாம் பகவன் மேவி, வரகமலை யினிதமர்சீ தளியிற்கால வைரவனை யகத்திருத்தி வணங்கி வாழ்வாம். (கருச)

மன்னுறுநல் லட்டசித்தி சமட்டி வித்தை மரபினருள் வோனன்பர் மனத்தின் வேட்கை, தன்னவளித் திடுமேன்மைக் கோம ளாங்க சுந்த ரன்மெய்ச் சிட்டரிடர் தொலைத்துப் போற்றத், தன்னில்வரு மட்டவை ரவசொரூபன் சாற்றருமந் நிரசித்தி தன்பூங் கொங்கை,வன்னிகர்மா ம கிழ்ந்தமர்சீ தளியிற் கால வைரவனை யகத்திருத்தி வணங்கி வாழ்வாம்.

பாதமலர்த் தரிசனிக டம்ம னேக பவநாசன்மலர்தாமம் பலகொண் டன்பா,லேதமறவருச்சிப்பார்க்கனேக பாக்கி யப்பிரதன் சீதளிமாட்டெ ன்று மேவு, மேதகைய பிரசன்ன யோக பீடன் வியனுறுயோ கினிகு ரவன் விரைகுழ் பூவின், மாதமருஞ் சீதளியின் மேவுங் கால வைரவனை யகத்திருத்தி வணங்கி வாழ்வாம். (கருசு)

வானிலவு மட்டகா சத்தா லண்ட மாதிரங்க ணிறைவித்தோன் வய ங்குகோள்கண், மீனினமா மாலிகா விருத னண்ட வெளிமுகட்டை யூ டுருவி விளங்கு மேன்மைத், தானவருட் சத்திமய விசுவ ரூப னவிர்தே வ வடுகேச னம்பு சாத, மானிலவு சீதளியின் மேவுங் கால வைரவனை யகத்திருத்தி வணங்கி வாழ்வாம். (கருஎ)

ஆயசபா சுபாதிகன்ம மனேகஞ் செய்யு மன்பர்குழாத் தினைப்புரப் போனறமுன் னுப, பாயபரு டார்த்ததா யகன்றன் மேனிப் படரொளி யாற்பவஞ்சமெலாம் படைக்கு மேலோன்,மேயதயா நிதிபிரமே சன்மா ல் மார்பின் வீற்றிருக்குங் கோற்றொடிதான் விழைந்து வாழும்,வாயபல வளர்திகழ்சீ தளியிற் கால வைரவனை யகத்திருத்தி வணங்கி வாழ்வாம்.

மந்திரவெந் திரதந்தி ரத்தின் சித்தி வழங்கிறைவன் றனதுபக்க மல்லாவேனே, மந்திரவெந் திரதந்தி ரம்பே திப்போன் வலமாரும் போகதண்ட வாகு மூலன், மந்திரமா தவர்மனத்த னருள்செய் கண்ணூன் மாயோகி மலர்க்கமல வனிதை வாழு, மந்திரமாஞ் சீதளியின் மேவுங் கால வைரவனை யகத்திருத்தி வணங்கி வாழ்வாம். (கஙௗ)

சானவிநீள் செய்யசடா வடேந்து கட்க கபால தான் பிரசண்டசமரந்தன்னி, லானதிறற் பகைவருக்க மனைத்துங் கொல்வோ னரியிரத்தபானமெய்த்தா ரையினூற் பீதி, தானெவர்க்குந் தருமுருவ னட்டகாசன் சகதலபா லனவடுகன் சலசை வாழும், வானிமிரு மாமதிற்சீ தளியிற் காலவைரவனை யகத்திருத்தி வணங்கி வாழ்வாம். (கஙுO)

வேறு.

என்றுசுர பதிகூறு வியம்புதுதி வரங்கேளா விமையோர் போற்றும் வென்றிபுனை வடுகேசன் விகசிதமு காம்புயனுய் விழைந்து நம்முட்கை னின்றுபுரி துதிமகிழ்ந்தோ நின்விழைவின் மேலருள்வோ நின்றன்வே நன்றுரைத்தி யென்றருளி நலந்திகழ மேலுமிது நவிலுகின்றுன். (கசுக)

சயந்தமுன்னீ யன்பினெமைச் சாற்றியவித் துதிவாங்கா தலித்துநம்மு னயந்துரிய பத்திமிகச் சிரத்தையொடு மெவன்றுதிப்பா னவிலு மன்னோன், வியந்திடுமா னந்தவனு பவனுகிச் சகலநிதி விளைவு மேவி யுயர்ந்தவனி வாழ்ந்தெமது சாமீப பதம்பெறுமீ துண்மையாமால் (கசுஉ)

அன்றியுமா றிரண்டுபெய ராலுமுறத் தனித்தனியே யருச்சித் தீற்றித் தீன்றியனல் லோமமொடு துகளறுவிப் பிரவுண்டி துலங்கவாற்றி,யொன் றுமித யத்தொடெமை யுவப்பிப்பா செவாவர்கட் குன்பே ரோங்க,மன்ற விழைந் துள்ளனபே றெவையுமொருங் களித்துமென வழங்கி னுனல்.

வேறு.

இதவசனமிதுவினவு மதிவ லாரி யெழின்மதலை யிதயமுறு முதிதனுகி,நதிமதலை மதிமுடிய வடுக நாத நலனருணின் முனமுறலு நவையருப, மதமுறமு னெழிலுரு வமருளி னுயு னடியனினி யடைவதெனினலரும் வாச,பதயுகள சபரியையு மளியு மேவு பரிசருடி யெனமுனனிபாவி னுனல். (கசுச)

உதவினவி யருள்வடுகன் சயந்த கேளோவ் வொருவருடந்தோறு மிரவி மேட மேவு, மதிபிரத மப்பிருகு வாரந் தன்னில் வானவர்சூழ் வுறப்போந்து மகிழ்வி னியிங், கதிகவுப காரணதிர வியங்க ளீட்டி யன்புமிகப் புனிதமுற வமர்ந்து பூசை, விதிமுறையிற் புரிகெனவு மபர பக்க மேவு சதுர்த் தசிதிதியில் வெள்ளி நாளில். (கசரு)

மாபின்முறை வழுவாம லெவர்க ணம்மை மனனுறுமெய் யன்பினொடும் வழுத்து பூசை, புரிவரவ ரிட்டகா மியங்கள் யாவும் புரிந்தளித்து மென்னவுநீ போற்று மந்நா, ளுரிமைபெறக் குணத்திரையந் தழுவு பூசையோதுமுறை நமக்கினிய வபிடே காதி, விரைகமழு நறுந்தூப தீபந்தூய விசித்திரபோ னகமாடா பூபஞ் சூபம். (கசசு)

தருசவைய பூபசகோ கிருத நாளு சாகபல வருக்கநிவே தனங்கற் பூர, மிகுவிளக்கா தியவில்சார்ச் சனைமுன் னாக விழைந்துபுரி குநர்க்கெவையும் விரும்பியாங்கே,நிகழ்வுறநல் குதுமெனவு முரைத்தா னைய னேசமிகு வாசவன்சேய் செடிது செஞ்ச, மகிழ்வொடுபன் முறைவணங்கி யருளி னேகி வான்புகுந்தாங் கமர்ந்தனன்பின் வருடந்தோறும். (கசஎ)

இன்றுமவன் விபுதரொடு மடைந்திங் கந்நா ளின்மறைந்தவ் விரைமலர்த்தா ளிறைஞ் சுகின்ரு,னென்றுகுறு முனியுரைப்ப முனிவர்கேளா வெர்தைகுணத் திரையபூ சனையென் றன்முன், னன்றவைநீ விரித்தருள்வா யென்ன வோது நறியகுள கிருதபல பாய சான்ன,மன்றன்மவி மாடாபூ பந்தே னேம மருவுதருப் பணமுணர்ந்த மறையோ ருண்டி. ()

ஆயவிவை நிகழ்வுறச்செய் பூசை தன்னை யறைகுபசாத் துவிகமெனக்*கன சாராதி, தூய நறுமணங்கமழ் குங்கும மாரங்கத் தூரிமுதற் சகந்தமரு மல்லிகாதி, சேயமணி யாரமுயர் கிருத தீபந் திகழ்வுறச்செய் பூசைசிரா சதமா மென்ப, ரேயபலி சகிதமுற வியற்று பூசை யியம்பிய தாமதமாகு மென்று பின்னர். (கசக)

முன்னரிய வித்தியா சித்தி தெவ்வர் முனைமுருக்கு செயமொடவமிருத்து நீக்கம், பன்னகில ரோகநிவா ரணமுன் னாய பலன்பலவு மளித்திமெய் பகர்முற் பூசை, பின்னுறைதா மதபூசை யயர்த்துஞ் செய்யார் பெரியோரெம் பிரானிதனைப் பிரித்திடாது, சொன்னதயிர் பக்குவத்தாற்பலவே ருகித்துன் னுதலா லவைக்கியையச் சொன்னதாமால். (கரு௦)

---

* கனசாரம் — பச்சைக்கர்ப்பூரம்.

சாற்றுமித னுவிட்ட சித்தி வேட்டோர் சாத்துவிக ராசதபூ சனைக ண்மேவி, யாற்றுவர்மற் றவற்றினிற்சாத் துவிக பூசையதிகமென வுரை த்தருளி யமல ஞானப், பேற்றினுயர் தவமுனிவீர் சயந்தன் முன்னர்ப் பெட்பினொடு வடுகேசன் பெயர்க ளாய்ந்து,தோற்றமிகு மாறிருபேர் பக ர்ந்துபோற்றுந் துவாதசமஞ் சரியென்னுந் துதியை மாதோ. (கநக)

எவனுறுமெய் யன்பினொடும் வடுக நாத னிலங்கெழிற்சந் நிதியினி தமேத்து மன்னோன், புவனிதனி லிட்டகா மியபல் போகம் புத்திரசம் பத்தாதி பொருந்த வாழ்ந்தே, யுவகைதரு கற்பகநாட் டரியபோக மொரு ங்குநுகர்ந் தொழிவுபெறீஇ யுவம னில்லா,நவநிரதி சயானந்தப் பெருவா ழ்வாய நற்கதிபெற் றிடுஞ்சரத நவிற்றி னோமால். (கநூஉ)

மேவருஞ்சீர்க் காசிமகத் தழலிற்றோன் றி விராடமடைந் தொலியி னிசரசாரை வீட்டித், தேவர்நாப் புரந்துசீ சைலத் தட்ட சித்தியுற நவ நாத சித்தர்க் கீந்தாங், கோவிமறை ஞமலிபூ தங்க டம்மை யொளிரிதழி வனம்புகுந்து சயந்தற் குற்ற, சாவமகற் றியவடுக னென்று மாங்கே தங்குமெனக் குறுமுனிவன் சாற்றக் கேட்டோர். (கநங)

வேறு.

மாதவனை வாமமுறு மாதவனல் வடிவாக்கி வஞ்ச நெஞ்சத்
தீதமரும் வைணவர்தந் தீநெறியை வீநெறியாச் செய்த தேவே[தெவ்வா
சீதளியெண் டிசையினுமெண் டிசையினர்தம் பெயர்த் தீர்த்தஞ் செய்த
ருதாவி னதுகேட்க விழைந்தனமென் றூர்முனிவ ரறையு மன்னோன்.

வைரவச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-க00உ.

---

## சீதளிதீர்த்தச் சருக்கம்.

தாதளிசூழ் போதலர்கோ தாவிரியின் றுவிரியின் றடத்தின் மேவி
யோதளியின் மாதருமைக் கொருபாகந் தருவோனை யொருவாப் பூசை
போதளியாற் றுதாத்தீர் புகழ்வடுகன் றகையுரைத்தும் புகன்ற வாநீர்
சீதளியி னேதுவகைத் தீர்த்தநலங் கூர்த்துணர்மின் செப்பு கின்றாம்(க)

வேறு.

நிமையென் றுரைப்ப வெல்லாந் திரண்டொரு வஃடிவ மானே
னுமமே னமுசி யென்பா னளிர்திரை நரலை சூழும்
பூமியி னொருவ னுள்ளான் பூமிசை யயனை மேனாட்
டாமரைச் சரணம் போற்றித் தனித்தருந் தவம்பு ரிந்தான். (உ)

இருந்தவத் தின்மை நோக்கி யெகின்புறத் திவர்ந்து ளார்வந்
தருந்தவ லரிய நோன்பிற் றனவன் பானல் லோகை
பொருந்தவந் துலக மீன்ற புண்ணிய னண்ணி நிற்பத்
திருந்தவங் கைகள் கூப்பி யெழுந்து சேவடியில் வீழ்ந்தான். (ங)

பலமுறை பணிந்து போற்றும் பமரசங் குலம்ப டிந்தாங்
கலமுற மடுத்துஞ் செந்தே னருட்பிர வாக மேன்மை
புலமுறக் காட்டல் போலப் பொழியுஞ்செங் கமல மேநற்
றலமென வீற்றி ருக்குந் தாதைநின் சரணம் போற்றி. (ச)

மாறுமெவ் வுலகுன் ளாரும் வாய்திறந் திசைத்த றன்ன
தாணையில் வைத்து நாளு மவரவர்க் கினிய வாணி
பேணிநன் கருளு மாதா பிராமிவெண் சலசை பாணி
வாணிக மூக்க மாலை வாணிதன் மணாள போற்றி. (ரு)

பவனமுற் றொருங்கு வாய்த்த பகவமா தகவ போற்றி
புவனகுண் டிகையங் கைய போதநால் வேத போற்றி
சுவனக மான்பி ரிதித் தொடர்பினிற் படைப்பாய் போற்றி
தவனமுற் றகற்றி யிட்ட காமியந் தருவாய் போற்றி. (சு)

என்றுநின் றிறைஞ்சி யேத்து நமுசியை யினிது நோக்கி
நன்றுள முவந்து வேதன் வரம்பல நல்கிச் சென்றா
னன்றவன் வரத்தின் பேற்றா லாற்றன்மிக் குடைய னாகி
வன்றிற லவுண னந்தோ மற்றிது புரிய லுற்றான். (எ)

உலகொரு நாலி ரண்டு மோம்புமும் பரைய டர்த்தான்
வலிமுதற் கவர்ந்தா னல்ல கண்டமிக் கியற்ற மான்று
நலிபுதம் வலிய ழிந்து நாருருச் சார்ந்து நைந்தே
யலைபவர் நற்பா லுந்தத் திருத்தலத் தடைந்திட் டாங்கே. (அ)

மாதவப் பிருகு பாங்கர் வந்தடி வணங்கித் தம்பாற்
காதரம் பெருக வந்த கவற்சியு நமுசி மேலு
மாதுயர் புரிந்த டார்க்கும் வஞ்சமு நைஞ்சு கூறி
யேதமுற் றகற்றி யுற்றார்க் கினிதருண் முனிவ ரேறே. (கூ)

எங்கள்பால் வந்த விந்த விட்டள மிரிந்தி யாங்க
டங்குரு திழந்து நீங்கும் பதங்களிற் சார்ந்து வாழு
மங்கள மருடி யென்று வணங்கினர் மீட்டுங் கேட்டுத்
துங்கநன் முனிவர் கோமான் கருணையுட் டேண்ட வோதும். (௧0)

வருதிறொண் டிசையுங் காப்பீர் மற்றவை யிழந்து நீவிர்
மருவிய வலிக ணீங்கி மானுட வடிவ மேற்றுப்
பரிவுறு மிடர்கண் முற்றும் பரிவுறற் குபாய மீண்டுப்
புரிவதுண் டஃது ரைத்தும் புந்தியுற் றுவந்து கேண்மின். (கக)

குடைந்தவர் தம்பா லுள்ள குறையெலா மிறையி லேகத்
தடிந்துளத் திட்ட மெல்லாந் தந்திடு மந்தண் வாவி
யிடந்தரு சித ளிப்பே ரேல்வைமற் றிதன்பா னீவி
ரடைந்துநும் மாசை யெட்டி னுசையி னேசத் தாடி. (கஉ)

வேறு.

மறைநடுவின் வயங்குதிரு வைந்தெழுத்தை மானதமா மகிழ்வினெ ண்ணி, யிறையவனை யுளத்திருத்திச் சிவயோக நியானஞ்செய் திருமி ஞ்ங்கே, நிறைகருணை யோடமலன் றவமுவந்தும் பாற்றோன்றி நீவிர் கொண்ட, குறையனைத்து மகற்றுபுநும் வேட்கைதரு மென்றுவிடை [கொடுப்ப வன்னோர்.

திருத்தகுமப் பிருகுமுனி பதத்திறைஞ்சி யுவகையுளந் திகழச்சென்றாங் கருத்தியுறத் தத்தமமா திரத்துறையிற் போய்மூழ்கி யமல ஞான,திருட் டினபிங் களமேனி விமலனையுள் ளிருத்தியிருட் கேத நீக்கித், தெரித்த ருளின் மன்னுவிக்கு மைந்தெழுத்தை மானதமாச் செபித்து நின்றார் ()

இன்னதிசைக் கிறையவர்மு னத்தடத்தின் மத்தியத்தி லிலங்கு கோடி மின்னொளியின் மனோகரதே சோமயமா யோரிலிங்கம் விளங்கித் தோ ன்ற, வன்னதனைக் கண்டுவகை மீதூரப் பணிந்திறைஞ்சு மவர்கட் கந்த நன்னயமா ரிலிங்கத்திற் றொருவருள் வாக்கினிவை நவிற்று கின்றான்.

இத்தடத்தின் பச்சிமதி ரத்திலெமை யெமதருளா மிமய மீன்ற
சத்தியொடு பதிட்டைபுரிந் தருச்சிப்பீர் நீர்வேட்ட சகல காம
சித்தியுறு மெனவவரு மவ்விலங்கந் தனையெடுத்தத் தீரமேல் பாற்
பைத்தநிழற் குரவமூ லத்துமைத னுருவினெடும் பதிட்டை செய்தே.

வேறு.

நிகமநற் சிவாக மத்தி நெறியினிற் றைல மாதி
யகமகிழ் படீர மீரு வாட்டிநற் கலன்கள் பூட்டி
நகைமல ரலங்கல் சூட்டி விசித்திர நாக மீட்டிப்
புகைசுடர் திருமுன் கோட்டிப் புனிதவின் னமுத மூட்டி. (கஎ)

பூசனை நிரப்பி யங்கைப் புவனத்தைப் புதிய போதை
யீசனைந் தெழுத்தை யோர்நூற் றெண்முறை செபித்துச் சாத்தி
யாசனை பூசை யாதி யவன்கையிற் றத்தஞ் செய்து
தேசனை வரும்பெற் றுய்வான் றிருமுனித் துதிசெய் வாரால். (கஅ)

எம்முல குடையாய் போற்றி யிளம்பிறைச் சடையாய் போற்றி
யம்மறை நடையாய் போற்றி யணிகொன்சூற் படையாய் போற்றி
வெம்மைமால் விடையாய் போற்றி விமலபா லுடையாய் போற்றி
கொம்மையங் குரவ மூலத் தமர்முது குரவ போற்றி. (கசூ)

மேற்றளி யமல வெங்கண் மேற்றளி கருணை நின்றன்
பாற்றளித் தாள்கென் பார்க்கப் பரிவருத் தனஞ்செய் வாய்தே
னூற்றளி மடுத்து மூழ்க வொழுகுபொன் னிதழி யானே
கோற்றளிர்க் குரவ மூலத் தமர்முது குரவ போற்றி. (உ0)

வேறு.

என்றுபல் வகையாற் றுதித்தன ரிருந்தாங் கிவ்வகை சிலபக லியை
ந்தன், பொன்றமர்ச் சனையவ் வெண்மரு முஞற்ற வொருகலை மதிவளர்
வதுபோற், சென்றுபூ சனைதாந் தொடங்குநாண் முதலாத் தெய்வத ரூப
முந்தேசு, நின்றதம் வலியுந் தினந்தினம் வளர்ந்து நிறைதரப் பெற்றனர்
முறையே. (உக)

மேற்றளி நாதன் திருமுனிவ் வாங்கள் வேண்டுவோ ரையசி தளியின், பா
ற்றளித் தனியா மூழ்குமென் றுறையும் பகருமெம் பெயர்களாம் முறை

யே, யேற்றிட வவற்றைக் காணுநர் பரிசித் திடும்மவர் பருகுநர் தோய்ந்
தோர்,கோற்ஞெடி பாக விகபர போகங் குளித்திட வருள்கென விரந்தார்.

இரந்தவா றண்ண லீந்தன மென்று ஞெண்மரு மிறைஞ்சின ரேகிப்
பரந்ததம் பதமுன் போலமர்ந் தனரப் பரமனைப் பரையையிப் பாரி, லூா
ந்தரு பச்சி மேசுரன் பச்சி மேசையென் றுயர்பெய ருரைப்ப, விரிந்த
சீ தளியின் றீர்த்தத்தின் வகையு மேன்மையு மேல்விரித் திடுவாம். ()

இந்திர னனலன் வைரவ னியம னியம்புறு நிருதிநல் வருணன்
வந்துவண் குபேரன் வனசமா ஞழி வயங்குமீ சானன்மா கௌரி
தந்தநா மத்தாற் கீட்டிசை முதலாச் சாற்றுறு முறையினிற் சமைத்தீ
சிந்துநேர் மகிமைத் தீர்த்தமீ ராறுஞ் சீதளி வாவியுட் டிகழும். (உச)

வேறு.

இந்திர திசையின் மேவு மிந்திர தீர்த்தந் தன்னின்
மைந்துறு தகரிற் பானு மருவிடு மதியின் மேவு
முந்துசித் திரைநன் ஞளின் மொழிந்தவை கறையின் மூழ்கி
யந்தநற் றீரத் தீர வாடையோ டமர்ந்து பின்னர். (உரு)

ஒல்வகை சொன்ன தான மறையவர்க் குதவி னேர்கள்
வெல்வலி யயமே தத்தின் பயன்பெறீஇ விபுதர் வேந்தன்
ஞெல்பதி யடைந்து போகந் துய்ப்பர்நூல் விசேட மென்று
சொல்பயன் றருமம் மேட மதியினிற் றினமுந் தோய்ந்து. (உசு)

சீதளி நாதன் பாத தெரிசனஞ் செய்து போற்றி
நீதியி னீட்டு செல்வத் தியன்றவந் தணர்க்கு நேர்ந்தோர்
மேதகு சுநாசி யோடு வியனரித் தவிசின் மேவி
யாதரம் பெருகப் பன்ஞ ளமர்ந்துவீற் றிருந்து வாழ்வார். (உஎ)

அக்கினி திக்கி லங்கி தீர்த்தத்தி லருக்கன் றேண்மேற்
புக்கியன் மாதந் தன்னிற் பொருந்துகார்த் திகைநன் ஞளிற்
றக்கசெங் கதிரோ னுச்சி தனிலுறு மமைய மூழ்கித்
தொக்கமூன் றைந்தே மூதல் சொலுமவற் றதிக மாதல். (உஅ)

இரணிய தான மீந்தோ னெத்துணை யிழிந்தா னேனுந்
தாணியிற் றனவா னுகிச்*சானமாங் கெய்தி வேள்வி

* சானம்—சண்டு ஞானம்.

யாணியி னழலி ஞற்று மந்தணர் சன்ம மெய்தி
மூணிய வினையி னீங்கு மொழிந்தவிம் மதியந் தன்னில். (உகூ)

அத்தரு தீர்த்தந் தன்னி லூடொரு மாடி யன்னஞ்
சத்திர மாதி யிட்ட தானமா மறையோர்க் கீந்தோன்
மெத்திய சகல பாவ விமுத்தனாய்ச் சுவர்க்க மேவுஞ்
சத்தியம் விளைந்த யாவை யவையெலா மொருங்கு சாரும். (௩௰)

வயிரவ தீர்த்த நற்று வகன்றிசைக் குடபால் வெய்ய
வயினமன் றிசைக்குக் கீழ்பா லமருமத் தடத்தி லென்று
மயாறு மன்பி னூடு மாசிரி பௌம வாரம்
வியனுறு பிருகு வாரம் விழைதக விதியின் மூழ்கி. (௩௧)

வடுகனை வணங்கி மாடா பூபமா திகணி வேதித்
தடைவினிற் பணிந்து போற்றி யந்தணர்க் குண்டி நல்கி
யுடன்முதற் றான மீந்தோன் பாவங்க ளொருங்கு நீங்கு
மிடரெலா மிரியு மன்னோ னெண்ணியாங் கியாவுஞ் சேரும். (௩௨)

இயமன்மா திரத்தின் மேவு மியமன்மா தீர்த்தந் தன்னின்
மயர்வொரீஇக் கடக நன்மா மதிமதி யிரவி யோடும்
பயில்வுறு தினத்தி லுச்சிப் பகன்மன முவந்து மூழ்கி
யியைபுறு பிதிர ரானோர்க் கியற்றுபஃ றருப்ப ணாதி. (௩௩)

அமைதரு மனுவோ டாற்றி யாம்பய கிருத குப
*சமன்வித போன கந்தா ன்றுவிலந் தணருக் கீந்தோர்
தமபிதிர் வருக்கஞ் சேர்ப்பர் சத்திய வுலகிற் றுங்க
ணிமிரிய பீடி நீங்கி நேரிய நண்ப ராவார். (௩௪)

நிருதியின் கருபத் தன்னோ னிறைந்தசீர் த்தீர்த்தத் தெய்திப்
பரிதிமா மதியி ரண்†டு பராகத்தி னன்பின் மூழ்கி
யிரணிய முட்பூ ரித்திட் டிலங்குகூன் மாண்ட மெள்ளுத்
தரைபொன்கோ கன்னி யாதி தைலநற் கடங்க ளாதி. (௩௫)

தன்றுபல் பீடை யாதி துரிசறும் பொருட்ட தாகப்
பன்னுறு மிட்ட தான மோர்ந்துணர் பனவர்க் கீந்தோர்

---

* சமன்விதம்—சகிதம்.
† உபராகம்—கிரகணம்.

சொன்னவொவ் வொன்றி னுக்குக் கோடிமா பலன்க டோய்ந்து
நன்னலந் தருமு ராரி நற்பத மடைவர் திண்ணம். (டுசு)

வருணனம் பரத்தி லப்பேர் வழங்குறு தீர்த்தந் தன்னில்
விரவுவை சாக மாசம் விசாகநாட் பருவத் தென்று
வருமுத யத்தி லாதன் மத்தியா னத்தி லாதல்
பரிவொடு படிந்தி யன்ற பொருளுயர் பனவர்க் கீந்தோன். (டுஎ)

இம்மைசெய் பாவ முற்று மிரித்துட னூறு சென்மத்
தும்மைசெய் பாவ முற்று மொழிந்திடப் பெறுத றிண்ண
மிம்மதி நான தான மேற்றமித் திருத்தத் தென்ப
செம்மைகொண் மறைய வர்க்குச் சிவிறிபா துகையி னோடும். (டுஅ)

சத்திரம் வத்தி ரஞ்சேர் ததியன முப்பலாதி
யித்தடத் தளித்தோன் வானி னின்புறீ இ*வேந்த னும்பி
னித்தமிம் மதியிற் றோய்ந்து பச்சிம நிமலற் பூசை
பத்தியிற் புரிவோன் முக்கட் பரமசா மீப மெய்தும். (டுகூ)

வாயுவி னரிதத் தன்னோன் வாரியா ரோக்கி யத்தி
னேயமுற் றவரு திக்கும் பானுமண் டலநேர் நோக்கித்
தோயுறின் வாயு ரோக முதலிய தொலையு மாற்ற
லாயது முதல காம மெண்ணியாங் கடையு முற்றும். (சo)

தனபதி வம்ப லன்னோன் சலிலத்தோ ராண்டு காறு
மனனுறத் தினமுந் தோய்ந்து மகிழ்புமேற் றளியான் றன்னை
யனுகையைப் பணிந்து தம்மா லாமுப காணத்தோடு
தினமக லாது பூசை சிறப்புறச் செய்து பின்னர் (சக)

சுவைபல தழுவு நான்கு வகையுணத் துய்த்தி டாம
லவிசப ரான்ன காலத் தொருபொழு தருந்து சீல
ரவமகன் றாண்டு மூன்று ளெண்ணிலாச் செல்வ மெய்திப்
புவனமோர் மூன்று மொவ்வாப் பொலிவொடு மினிது வாழ்வார். (சஉ)

தேற்றுமத் தனதன் றீர்த்தக் கீட்டிசைத் திருவின் றீர்த்தந்
தோற்றுவித் தவண்முன் போற்றுந் தூயதா மிதனி லன்பின்

---

* வேந்தன்—இந்திரன்.

பெற்றெடு தினமு மாதல் பிருகுவா ரந்தோ ரூத
லாற்றுற நியமத் தாடி யருச்சன மூலத் தாதல். (சங)

சககாத் தெதிரி லாத லொருப்படு முள்ளஞ் சார்ந்து
மிக்கபொன் மகளை முன்னி விளம்பவள் பீசஞ் சேரைந்
தக்க மயுத மெண்ணி நியதமா யரனை யோர்ந்தே
தக்கமா நிட்டை கூடித் திருத்தல நாதற் போற்றி. (சச)

இவ்வகை வருட மூன்று காமமிந் நெறியி னின்றோ
னெவ்வமில் காமி யங்க ளெண்ணியாங் கெய்தி யீற்றிற்
றிவ்விய ரூப ளுகிச் சிவபத மடையு மிந்நீ
ருய்வுறு மான மாத்தி ரத்துறு மொழிவி னூய்மை. (சரு)

வேறு.

இம்பருட னெளிதளிக்கு மிதனிடையோ ரிதிகாச மிசைத்துங் கேண்
மின், பம்புபொரு நைக்கரையிற் பகர்வுறுமோ ரகாமதிற் பயிலுந் தூய
ன், வம்பமரு முலைபாகன் மலர்க்கழற்கி ழிலக்குவைத்த மனத்தன் வே
ள்வி, யம்புவியிற் பலபுரிவோ னரிசன்மா வெனும்பெயரோ னந்த ணு
ளன். (சசா)

மாசறுமவ் வேதியன்றன் மைந்தனவன் கிருட்டினசன் மாவென் பேரா
னேசமுறு தாதையைப்போ னியமமுளா னூழ்வலியா னெறியி னீங்கி
யேசிடயா வருஞ்சருவாங் தியவீன குலமடவா ரிணைத்தோள் புல்லு
மாசைகொடு நிரந்தரமற் றவர்த்தழுவித் தூர்த்தர்தமு ளதிப னுனன். ()

அல்லாக்குந் நிநெறியாங் கவன்புரித லானல்லா ரொருவர்க்காக [னிற்
வெல்லார்க்கும் பெய்யுமழை யென்பதனுக் கெதிர்மறையா யிலங்கு வா
செல்லார்க்குந் தண்பெயலைச் செய்யாது மறுத்தலினத் தேய மெல்லா
மல்லார்க்கு மாண்பினின்று மாருக வற்கடமன் மருவிற் றூலோ. (சஅ)

வேமெரியிற் பூரண குதிரிரைப்பா ரெழுந்துநின்று விரிபூ வாதி
தாமேத்தல் போன்மலரா திகளுகுத்தாங் குலர்ந்துநிற்ப தருக்களெல்லாம்
வாய்மைநெறி யறமிலர்தம் வருவாயில் செல்வமென வறப்ப வாவி
நிமையிரிந் தார்க்கலது மற்றவர்க்குஞ் செய்வதெனத் திங்கள்காய்வ.

இரவியெதிர் மாத்திரமவ் வினன்சிலையோன் நிறைக்குமழ லென்னே
யிரா, விரவுமொழி யாதபூலே யிறைப்பவரு வினைமுழுது மென்றுங்

கூற்று, யிரவிதமா நிறைவனவா லேற்குநரான் றீகுநரின் றின்மையாலே
யிரவெனுமோர் பொருளிலையாங் கெனலாய தனையநா டெந்தநாளும். ()

வருந்திநெடு நாளேனற்று மாதவன்பான் மாதவன்றன் வரவு காணு
தரந்தையுறு மமையத்தாங் கிமையத்தா யுடனாக வருளிப் போந்த
கரந்தைமதி நதியணிந்த கண்ணுதலோன் றிருவெழுச்சி கடுப்ப வானிற்
பரந்தமுகி றடித்துநிரை பரப்பியந்நாட் டொவ்வொருகாற் பயிலுமாதோ.

அம்முகிலி னூடோபத் தாலளப்பி லாண்டூனக் கமையும் போலு
மிம்மழையென் றிதயமகிழ் வெய்திடுங்கா லீவாரை யிடையி னீக்கும்
வெம்மையினர் போற்சூறை விலக்கவுற லருட்காழி வேந்தர் வாக்காற்
பொய்ம்மைபுரி தேரருடைந் தாற்போல வுடையுமவ்வம் புதங்க ளம்ம.

வறந்தொழிந்த முகிலிரைந்து வந்தமைகண் டகமகிழ்ந்த மாந்த ரவ்வான்
மறைந்திடமுன் னேகையெலாஞ் சாகைநிகர் துயராக வருந்தி னூரற்
பிறந்திடுக சுதனெனவெம் பிரானுரைத்தற் குளமுவந் தெம்பிராட்டி பி
ன்ன, ரிறந்திடுக வெனமுனிவா லிசைத்திடவாங் கஞர்க்கடல்வீழ்ந் திர
[ங்கு மால்போல்.

நிறைதழலி னுட்பொதிந்து நீற்றுமற் குழைத்திடநன் னீர்பெய் யாமற்
றுறையமரும் வெண்டாளச் சுண்ணமெளி தெம்முடலிற் றுதைந்த தெ
ன்பார், வெறியபசு மெல்லிலைபா கிலையென்பா ரரிவையர்தம் மெய்யி
னூரந், தெறுவெதுப்பி னீறுகிச் செறிவியர்ப்பிற் சேறுய திறத்தையோ
ரார்.

இவ்வகையி னிடருழந்தாங் கடர்வெயிலி னிடைவெதும்பி யெவரு மே
ங்கு, கவ்வைநெடுங் கடற்புவியாள் காவலன்கே ளனேர்ந்து கவற்சி மூ
ழ்கி, யெவ்வகைய பலவளனு மென்றும்வள ரிந்நாட்டி லிந்நாள் வானம்
பெய்வகைதீர்ந் தறவறந்த பெற்றியென்னே வெனநினைந்து பேதுற்று
னல்.

பொன்னுடும் புகழ்*நாடும் பொருவில்வளம் பொலிநாடும் புன்கண்மேவி
யன்னுவோ வெனவலற யான்புரியு மரசுமிக வழகி தந்தோ, வென்னு
லென் றமரான்மற் றெவராலிங் கிருங்கொடுமை யெய்திற் றேயோ, மி
ன்னூர்செஞ்சடையமலன் மெய்யடியா ருளங்கொதிப்பவிளைந்ததேயோ.

---

* நாடும்—பெயரெச்சம்.

என்றுபல பலநினைந்தாங் கின்னலுறு மன்னன்மலரடினிதுகாப்போன்
வென்றிபுனை யகன்மார்பன் வேதியர்க ளாதியநன் மேலோர் தம்மைத்
தன்றனிமந் திரத்தழைத்தா தனத்திருத்தி மனத்தருத்தி சாரநோக்கின்
றின்றுமுகின் மழைமறுத்ததென்கொலிதுநன்கியம்புகென் றுதாழ்ந்தான்

அவணமரு மருமறையோ ரனைவருமங் கரசனெதி ரறைவா ரந்தோ
புவனிவளர் புயந்தழுவப் புன்னெறிகள் பொன்றவறம் பூப்பமேற் கொ
ண், டவனிமுழு தாசளிக்கு மறந்தருகோ லரசேயிவ் வகரந் தன்னி, லெ
வருமனத் திடையுமெணு விழிதொழின்முற் றியற்றுவனோ ரிளையனன்
[ஞன்.

யாவனெனக் கேண்மதியிவ் விரும்பதியா னொருங்குகலை யாவுமோர்ந்தா
ன், ருவிலரி சன்மாவின் றனிக்குமரன் கிருட்டினசன் மாவென்றூர்க
ளாவவிஃ திதுகாறிவ் வகரமெங்கு நிகழ்ந்திலதென் னரசு நன்றூற்
பாவியவ னிவணிரிந்து படர்கவென வுழையருமப் பரிசு செய்தார். ()

அயலெபெரும் பதியொழிந்தாங் கவனகன்று னவற்பிரிதற் காற்றுதன்
ளுன், றனையுதவு மிருவருமத் தனையனிடத் துறுகாத றம்மை யீர்ப்ப
வினைநினைபு நைந்தவனை விடாதுதொடர்ந் தாரனைய வினைசெய் பாத
கனையரசன் றுரத்தியபின் கனமெழுந்து நெடுந்தாரை கான்றதெங்கும்.

வருநதிகால் குளமோடை வாவியெலா நீர்நிறைந்த மருத மாதி
விரிநிலமா பலனளித்த வியன்பொழிலா தியசெழித்த விரவு மாந்த
ருரியமன நனிகளித்த வொருவுபுசென் மறையவனு கூழா லீன்ற
குரவரொடு மிதழிவனங்குறுகினனுத் தாத்திலங்கோர்முனிவர்கோமான்

பன்னுபெயர் குசகேசன் பரமசிவார்ச் சனைநியமம் பழுத்த சிலன்
முன்னுமுளத் தோடனையர் முன்னுறல்கண் டாங்கழைத்தம் மூவர் தம்
மை, யின்னருளான் முகமலர்ந்தாங் கியம்புவான் யாவர்நீ ரிங்குப்போந்த
தென்னகுறித் தும்பதியா மென்னவரி சன்மாமுன் னிறைஞ்சிநின்றே.

தம்மையுமன் பதியினையுந் தானுணர்த்தித் தன்மகன்பா தகத்தி னுலே
வெம்மொழித் தாசனவன் விடுத்தகலத் துரத்தியதும் விளம்பியெந்தா
யெம்மையினி தளித்தருளா லிவன்பாவ நீங்கும்வகை யியம்பியாள்கென்
றம்முனிவன் றனைமீட்டு மடிபணிந்தா னதுகேட்டாங் கறவர்கோமான்.

மறையவநின் மனக்கவற்சி மாற்றுகநின் மகன்புரிந்து வலியபாவம்
பறைவகையு பாயமொன்று பகர்துமெனப் பன்னியுணர் பறிபோ யாங்
கே, வறிதுறுமக் கிருட்டினசன் மாவினுக்கங் கருளோக்கம்வழங்கிமை
ந்தா, வறிகுதிமுன் னுளிமயத் தம்பிகையாற் பகர்ந்ததொன்றிங் கறைத
[ல் செய்வோம்.

அக்கிரிசை யாற்பாவ மனைத்துமொழிந் தாவிகளின் படைந்துவாழ்வான்
றக்கவகை முன்னியற்றப் பட்டதொரு தடமதுசீ தளிமா தீர்த்த
மிக்கயநீ சார்ந்ததனி னிலக்குமிதீர்த் தத்தளியோ டினிது மூழ்கிச்
சக்கரமாங் கெதிர்கண்டத் தடக்கரையின் மருதினையுந் தழுவி மாதோ.

பன்னருமச் சீதளியின் பச்சிமத்தி லமர்ந்தருளும் பச்சிமேசன்
றன்னைவிதிப் படிபூசித் தேழுநா ளிந்நியமந் தன்னி னின்று
னின்னதக நெஞ்சுறச்செய் நிலையினதே யெனினுமுகினிரையுண்மாய்ந்த, மன்னுமின னதினீங்கு மாறுபோ லொருங்கொழிதல் வாய்மையென்றான்.

இனையவகை முனியருள விறைஞ்சினனக் குமரனகன் றேகி யத்த
னனையொடுமச் சீதளியி னலர்மகட னான்மாபி னுடி யாங்கே, நனைய
கரு பந்தழுவி நேமிசுண்டு மேற்றளியி னுதன் பாதந், தனையருச்சித் தெ
ழுதினமுப் பொழுதினிலுந் தான் செய்பா தகநீங் குற்றான். (சுஎ)

பாதகத்தின் முத்தனும் பனவன்முது குரவரொடும் படிவர் கோமான்
பாதமுறப் பணிந்தனன்றன் பதிபுகழுந் தெரிந்தரசன் பாங்கினோர்வான்
பாதவனே ரரசேயிப் பதிபுகுந்தான் முனமகன்றோன் பயினன் மார்க்க
*பாதமுறு கிருட்டினசன் மாவென்று ரதுவினவிப் பாராள்வேந்தன்.

அவனையிவ ணழைமினென வயலினுரு வியவர்கடி தணைந்து கூவி
யெவமகலம் மறையவனை யெதிர்விடுப்ப விறைநோக்கி யென்கொ னீ
தான், பவநிறையு மபரீசுத்தன் பதிமீண்டு புகுந்ததெனப் பனவன் கூறும், புவியரசே யகமுழுதும்போக்கியர னருளால்யான்புனிதனுனேன்

என்றுகிருட் டினசன்மாச் சொலவேந்த னின்றாய்மைக் கேதே
தென்னக், கொன்றைவன மடைந்துநீர் குடைந்துமேற் றளியரன்றான்
குறுகிப் போற்றி, நின்றருளாற் பாவமிரிந் தமையுரைப்ப நிருபனந்த நி
கழ்ச்சி வாய்மை, யின்றுணரக் காட்டுதிகொ லென்றுரைப்ப மறையவனவ் விதழிக் கானில். (எ0)

அரசனெடுங் குரவரொடு மடைந்தருட்சீ தளிகுடைந்தாங் கலர்நீள்வாசக்
குரவநிழல் வீற்றிருக்கு மேற்றளியான் றனைச்சிந்தா குலத்த னுகப்

---

* பாதம்—தழுவுதல்.

பரவுமலா டிவீழ்ந்து பணிந்துரைப்பான் முனிபுகன்ற படிநின் பூசை
புரிவினெழு நாட்புரிந்து நினதருளால் வினையகன்று புனித னானேன்.

பாதகத்தின் மிகைநோக்கித் தன்பதிநின் றெனைத்துரந்த பாராள் வேந்த
னீதகத்துத் தேறான்வந் திந்நின்றான் யான்புரிவ தென்னே யெந்தாய்
மாதிரத்தார் தவத்தாலிவ் வாவியிடை யெழுந்தருளி வணங்கு மன்னோர்
காதரத்தைத் தீர்த்துவலி கொடுத்தாசை நிலையுறச்செய் கருணைவள்ளால்

மன்னுளத்தி னசங்கை மாற்றியடி யேன்வாய்மை வாய்மை யாக
நின்னருளாற் றெரித்தருளாய் நிலமதியுங் குலநதியு நிமிருங் காள
பன்னகமும் படர்சடையாய் பச்சிமநா யகிபாகா பச்சி மேசா
யென்னவடி யேயாணென் றிசைத்திரங்க வனையனன்புக் கெளியனாகி.

திருக்குரவி னமர்சருவ சான்றான சிவமூர்த்தி சித்த ரூபம்
பரித்தடிபன் னிரண்டுநிலம் பதஞ்சுட நடந்தருளிப் பரிதி நேர்பாத்
துரைத்திடுங்கே ரளவேந்தே யோதுறுமிக் கிருட்டினசன் மாவுச் சூழி
யருத்தியுறப் படிந்தெமைப்பூ சித்திரும்பா தகமுழுது மகன்றானன்றே.

ஆதலினாற் கேரளபூ பாலமறை யோருளிவ னதிக னென்றே
பேதமறத் தேறுதிசி தளிபடிந்து நமைப்போற்றிப் பெயர்ந் தூரேகி
நீதியினின் னரசியற்றி யனந்தரனம் பதம்பெருதி நீயென் றாங்கே
யாதிமத்தி யாந்தமிலா னவ்விலிங்கந் தனிற்கரந்தா னன்னோர் காண. ()

அங்கிலையிற் கேரளவேந் தம்மொழிகேட் டகமகிழ்ந்தவ் வமலற்போற்றிக்
கொன்னிகழ்சி தளிமூழ்கிப் பரிதிகண்டு மருதத்ழீஇக் குரவ மூலந்,
தன்னிலமர் மேற்றளிநா தனைவணங்கிச் சிதளிநா தனையு மேத்தி
மன்னகில பாவமுத்த னயளவி னிறியளித்து வழுத்திப் போனான். ()

ஆதலினிவ் விலக்குமிரீர் பிரயாகை யாதியின்மே லாவ மீதி [நாளுங்
னேதமில்கான் முனிவிழைந்தோர் வந்தியரா யினுமதி யொன் றெண்ணி
காதலுறப் படிந்தாழி கண்டுகரு பந்தழுவிக் கருதி ராறு
வேதியருக் குணவுதரிற் சிராயுமகப் பெற்றுவப்பார் விளம்போராண்டில்.

இனையதடந் தனிலெவர்தா மெய்தியொரு காற்படிந்தாங் கினிது மேவுங்
கனையொளிய நேமியெதிர் கலந்தனர்தம் பிதிர்களுளங் களிக்குமாற்றான்
மனம்விழைபு தருப்பணமா திகள்புரிவா ரவர்பிதிர்க்கண் மலரோ னூரி
லனவரதம் வீற்றிருந்தாங் கருஞ்சுகமுற் றடைகுவரா லறவீர் காணோ.

நாடுமிதி லிடபதுலா விருச்சிகநா னம்மதிக நயந்து நாளு
மாடியிய ருனமளிப் பவர்கங்கை காவிரிமுன் னளப்பிலாத
பீடுபெறு நதிநான தானபலன் பெறுவரினிப் பேச லென்னே
நீடுறுமிந் நீர்நான மாத்திரையே யிட்டமெலா நிறைய நல்கும். (எகூ)

இத்தகுமா தீர்த்தத்தின் கீட்டிசையி லீசதிசை மேல்பா லேவு
மெய்த்தகுசக் கரதீர்த்த மதிற்படிந்தவ் வாழிமுன்வே தியர்க ளுண்டி
யுத்தமதா னம்பிதிரர் தருப்பணமுன் னுயவன்பி னுஞற்று வோர்கள்
சத்தியமொவ் வொன்றினுக்குக்கோடிமடங் கதிகபலன் சார்ந்துவாழ்வார்

தேவரெலாம் பரவுகின்றார் மாரோக தேகியதிற் சேர்ந்து மூழ்கி
னேவருமங் நோய்நீங்கி யுத்தமனா கின்றான்மண் டலமொன் றன்பால்
வீவரிய பவித்திரனாய்த் தினம்படியு மவனுலகம் வெருவத் தோன்றுந்
தாவில்வயம் பெறுகூற்றின் றுயர்சாரான் முகுந்தபதஞ் சார்ந்து வாழும்.

இத்திகிரி புனற்கீழ்பா லீசான தீர்த்தமுறு மிதனின் மூட [னத்
சித்தரெனி னும்மொருகான் மூழ்கிடின்மெய்ஞ் ஞானநிலை சேர்வர் மீ
துத்திரநா ளலதுதனு மதிகுடைந்தப் பரற்றெழுவோ ருடல்போ மீற்றி
லெத்திசையுந் தொழச்சிவசா ரூபமுறி இச் சிவலோக மெய்தி வாழ்வார்.

தெரிசமுறு மிந்துதின மூழ்கியருச் சிக்கினுருத் திரமா லோக
மருவுவர்நன் மாககிருட் டினசதுர்த்த சியிலாதல் வயங்கு வில்லா
திரையாதல் படிந்துசீ தளியரனைத் தரிசிப்போர் சேர்வர் மோக்கம்
பரிவொடுமோர் காற்படிந்தப் பரனைவிரி வுறப்பூசை பயிற்றி மாதோ. ()

மெய்யுணர்ந்த மாமறையோர்க் கன்பினொடு மமுதளிக்கும் விரத சீலன்
செய்யமனத் தூய்மையனாய் மலமொழிந்து சிவசாயுச் சியப்பே றெய்து
மையமிலை யீதொருமண் டலந்தோய்வோ னெவ்வெவற்றி னுசைமேவுந்
துய்யமுனிவீரவைகண் முற்றுறுவ னிதன்மகிமை சொலற்பாற்றன்றே.

வேறு.

கௌரிமா தீர்த்த மீச கருபதெக் கணத்தின் பாங்க
ரவமறும் வலாரி யாசைக் கடுத்தவுத் தாத்தின் மேவு
முவமனி லதனின் மாக மதிரவி யுதிக்குங் காலைத்
திவசமுப் பதுங்கு டைந்து சீதளி நாதர்ப் போற்றும். (அ௦)

திருத்தகு விரதம் பூண்டோன் சிவபுரஞ் சேர்ந்து வாழு
மரித்திர லேப ணங்கி யாகவெம் மாது மூழ்குங்
கருத்தொடு மவளெம் மன்னை கௌரியா லோகஞ் சாரு
முரைத்திடு கொழுநர்த் தீர்ந்த கைம்மைக ளுற்றோ ராண்டு. (அசு)

நித்தலு மிதனின் மூழ்கி னேர்ந்திடு மேழு சன்மத்
துத்தம குலத்திற் றோன்றி யோதுநல் விலக்க ணங்கண்
மெய்த்தகு கொழுந ரோடும் பிரிவின்றி மேவி வாழ்வார்
வித்தமா வித்தை கீர்த்தி ஞானமுன் விழைந்த ளோரும். (அஎ)

எண்ணிய வெண்ணி யாங்கே யெய்துவர் யாவு மோர்ந்த
புண்ணிய முனிவீர் நம்மாற் புகலுறுந் தகைய தன்றாற்
றிண்ணிய விவ்வீ ராறு தீர்த்தமுந் திகழு மேன்மை
யெண்ணுசி தளியெப் பாங்க ராயினு மியைபுற் றேகி. (அஅ)

சித்தையுற் றுத லன்றி யாதலத் திரைநீர் மூழ்கித்
திருத்தல நாதற் போற்றின் மலமுத்த ஞுத றிண்ணம்
வாத்தசி தளியை நெஞ்சில் வைத்தயற் றீர்த்த மூழ்கு
நாத்தரு மிதனுக் கோது பலனெலாஞ் சார்வ ரன்றே. (அகூ)

இத்தகு சிறப்பு வாய்ந்த சிதளி யிதனை நெஞ்சில்
வைத்தவர் தரிசித் தோர்கள் பரிசித்தோர் வயங்கு மிந்நீர்
துய்த்தவர் குடைந்தோர் சீர்த்தி சொன்னவர் கேட்டோர் யாரு
முத்தரா யமலன் மேவு முதுசிவ புரத்தில் வாழ்வார். (கூ0)

என்றிவ்வா றினைய வாவி யியனலம் யாவு மோதுங்
குன்றெறி திரையி னுற்றல் குலைத்தசெங் காத்தெங் கோமான்
றன்றுணை யடிவீழ்ந் தாதி சந்திர வழுதி காதை
நன்றினி யருடி யென்றார் முனிவரர் நவிலு மன்னோன். (கூக)

சிதளிதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௬0கஙு.



# ஆதிசந்திரபாண்டியச் சருக்கம்.

———o———

வருதிர் மாதவிர் சீதளி வாவிநீர்ப்
பெருமை யாவையு முள்ளவா பேசுத
லரிதி யாவர்க்கு மாதிநற் சந்திரன்
சரிதம் யாமுணர்ந் தாங்கினிச் சாற்றுவாம். (க)

அமரர் தானவ ராதி யனேகரைக்
குமர ராப்பெறு கோதறு மாதவன்
கமல நான்முகன் கான்முளை காசிபன்
றிமிர மாற்றுவெண் டிங்களை முற்பகல். (உ)

அனைய னுற்றப சாரத்தி னுற்புவி
மனுட னுகெனச் சாபம் வழங்கின
னினைய வெம்மொழி யிந்து செவிக்கொளாக்
கனல்சொ ரிந்தென வுள்ளங் கவன்றரோ. (ங)

சாந்தம் வாய்மை யறிவு தவமுத
லேய்ந்த நற்குண மேயுரு வாயினோய்
காந்து தீவினை யான்புரி காசினுற்
றீர்ந்து மானுட னுகெனச் செப்பினுய். (ச)

அண்ண லென்குறை நோக்கி யளியனே
னுண்ண டுங்க வுரைத்த வொருசொலே
யென்ன முற்று மிரித்தெமை வாட்டுமேன்
மண்ணி லுற்பவ மானுட மென்செயா. (ரு)

இனைய வாறிங் கியம்புவ தன்றியான்
பினையி யற்றுவ தென்னைகொல் பேதையே
னனக வந்தண வாரு ளாகா
தனைய டுத்தவர் தம்மிடர் பாற்றுவோய். (சு)

வேறு.

இன்னவுற வெழுசாப மிதுமாற்றி யெனைப்புரத்தி யென்று தாழ்ந்தா
னன்னமுனி யருள்புரியு மாலவா யருணகருக் காச னுகிப்
பன்னவுறும் பெயராதி சந்திரனென் றுரைத்திடப் பூபாரந் தோளிற்
றன்னுறவைத் தவனிமுழு துன்குடைக்கீழ் சுமித்திருப்பத் தகவீர்த்
[தாள்வாய்.

வினைவழிப் பாம்பரைசந் திரமாபென் றுலகுரைப்பா னிலவ நீதான்
மனுநெறியி னரசியற்றி வருநாளின் மறைநாலு மாபி னோர்ந்து
புனிதமுறு பனவர்கையிற் பூதானம் புரிந்திடினும் புகன்ற சாப[னுனல்
வினையொழிபுன் பதம்புகுந்து விளங்குவைமுன் போலென்று விளம்பி

அன்னமுனி மொழிப்படியே யவனியிடைக்கௌரியநா டதன்பா லுண்
[மைப்
பன்னுபுகழ் மிகுமதுரைப் பதிபுகுந்து மதிகுலத்தன் பார்மூற் றூனு
மன்னனெனன நர்வடிவாய்ப் பெயராதி சந்திரனுய் வயங்க நின்று
தன்னுரிய தாசுத சகிதனு யாசுரிமை தாங்கி வாழ்ந்தான். (கூ)

மிருபாம *தார்மிகனு யவ்வாதி சந்திரன்றன் வியோம மார்க்கம் [விண்
புகுமதிதண் காத்தாற்போ லதன்கலையாய்ப் போந்துமவன் புகழி னூல்
கருபமுந்தன்பெயரிலங்கவாழ்ந்தனன்மற்றவர்க்குநிதிக்கடவுணீர்க்கோ
மகபதிக்காங் கெனச்சோழ கோனர்கண் மித்திர†சா மந்த ரானார். [ன்

இத்தகைய மூவரும் னுச்சொலிய நீதிமுறை யிரவி நேர்தோள்
வைத்தவனி மாதையுயி ரற்பமுமி னுவதனை மருவி டாமே
சித்தமகிழ் கூரவரு ளுய்த்துவள மார்குடிகள் செறிய வோவா
மெத்தியந லாறிலொரு பைத்தவள மேகவர்பு மேவி னூரால். (கக)

மேவுமிவர் மகக்குரிய வாயபல கலப்பைகளும் விழைவி னீட்டித்
தேவர்பதி யுவப்பவுன மோதுமறை நெறிக்கிரியை திகழ நாட்டி
யாவிழுது மடுத்துவல மாகநனி சுழித்திலக வனல மூட்டி
யோவிலவி மனுப்பலவு மோதிநறை வுறக்கனவி னெளிர நீட்டி. (கஉ)

இவ்வகையின் யாகமன வில்லனசெ யாநிகழு மிவர்பால் வேந்தன்
செவ்வியந லாதாமொ டெய்துபுநல் வேள்விபல செயுநீர் வேண்டிம்[திங்
தவ்விலபொருள் யாவையவை சொல்லுகென வானிறைவ தமியே மூர்ந்
கெவ்விடமும் வாறுமுறும் வையமருள் கூர்புதரு கெனமா லோர்ந்தே.

அவருரைத்த வாறுமக பதியளித்து வானடைய வனைய தேரி
னிவர்கணித்தம் வானிலிறை வனையடுத்து நீள்புவியி னேகு வார்க
ளுவகைமிக்கு மூவர்களு மாசியற்று நாளொர்பக லுரிய தேரிற்
*திவமடுத்து நாகர்நிறை சுதன்மைபுக்கு வாசவனை திரின்மு னேகி.()

---

* தார்மிகன்–தருமஞ்செய்வோன். † சாமந்தன்–சமீபித்தவன்.
* திவம்–இரண்டனுருபுவிரிந்தசுவர்க்கப்பெயர்.

இந்திரன தேவலர்கண் முந்தவிவர் மேவியவவ் விறைசமீபத்
தந்திலிடு பீடமிறை கொண்டமர்சு காசனமொ டளவ ளாவி
நந்தலில்ச லாபவச னம்பலவ லாரியொடு நவில்பு நீடு
சிந்தைகளி கூரவவ ணின்றுமகி மீளுவர்க டினமு மாதோ. [கடு]

எகியிவர் மீள்பொழுதொர் நாளரியி னேவலர்பி னிவர்கண் மேய
வாகுமணி பீடமணு காநயன கோசரமன் வழுதி பீட
மாகருமை யாயிலக வாசவச மீபமுற மருவி யோர்வின்
மோகர்மன மாய்வழுதி பீடமுறல் காணுகென மொழிதல்கேளா. (கசு)

மகபதிபின் வழுதியிவண் வரிஞெளிசெய் மறுதவிசென் மாட்டு நீவிர்
தகவிடுமி னெனவுரைசெய் தனனமுறை மறுபொழுது சாற்று மிறன்
புகுபுழைய ரிடுமனிய தவிசினரி யுடனுரைகள் பூப்ப மேவிக்
கருபமுழு தொளிசெய்தவி சவனெழலு மிருளுறுதல் காட்டி னூரால்.

விம்மிதமு ருவுரிய தன்மாபி ஞரியனை விளித்து வேந்த
னம்மமணி பீடமிது தென்னனம ராவெழலு மவித்தை மாந்தர்
தம்மனமெ னுவிருள்கொ டன்மையெவ னேவடிகள் சலித்தல் கூர்ந்த
வெம்முளயிர் தீரவருள் கென்னமுழு தோர்கு ரவனிசைக்கு மாங்கே.

வேறு.

வேந்தகே ளெந்த வேந்தர்தந் தேயம் விப்பிர சங்குல ரகித
மாந்தனி பாவ ராசியே சகித மாகின்ற தாசன்மற் றெவனோ
வேந்திசைச் சுருதி விதித்தசட் கன்ம மிசைந்தவிப் பிரகுல மில்லாப்
பாந்தளின் படத்திற் பயின்றிடும் பவன பாலனம் பரிந்துசெய் பவன்
றூன். ()

அவ்விறை மயான பாலநீ சோப மானியாஞ் சுரர்கள்பூ சுராரா [தைச்.
லெவ்*விராட் டிரந்தா னணிசெயப் படுத லில்லையோ வவ்விராட் டிரத்
செவ்விதிற் பால னம்புரி தோடத் திருந்துகூர்ங் குடாரமவ் வேந்தின்
றிவ்விய தரும விருக்கமூ லத்தைச் சேதிக்கு மென்பது திண்ணம். ()

சோழகே ளர்தம் பாலன பூமி சுருதிதேர் விப்பிர புஞ்ச
வாழ்வுகூர் தருமிப் பஞ்சவன் புரக்கு மகிசிறி தேனும்பெற் றிலதத்
தாழ்வினு லவன்செய் சுகிர்தசா லங்கள் சகலமு மலினமா யதனுற்
கேழ்விரி தவிசு மிலேகர்செய் நிந்தா கிருட்டினத் தவமடைந் தென்னு.

இவ்வகை தேவ விருடிசங் குலங் களியையுமச் சதசிலம் பகங்கண்
மெய்விரி வேந்தன் வினவுற வேந்தன் விளம்பலும் விரிபுவி வேந்த
னவ்வுரை கேளாச் சமழ்ப்புமா ஈனுரு மச்சமு மடைந்தவட் பணிந்தா
னெவ்வமுண் ணினேந்தே சவாதா ரூட னுகிமீண் டெய்தின னிம்பர்.

மீண்டிடு மாதி சந்திர வழுதி மீனலோ சனியொடு விரவிக்
காண்டகு சோம சுந்தர நாதன் கருணைசெய் தென்றும்வீற் றிருக்கு
மாண்டிரு வால வாய்கிகே தனத்தை மங்கல வணியென மருவும்[தான்.
பாண்டிநாட் டரிவை வதனமா மதுரைப் பதியிற்றன் பவனத்துட் புகுந்

அரித்திறற் றனைய னமாத்தியர் தமையாங் கழைத்தவன்பரித்தபூ பாரந்
தரிந்திட வவர்பா லிருத்திமா றருமச் சந்தனு ரூடனுய்ச் சூதன்
பரித்திர ண்டிடி யுகைத்திட வூர்ந்தப் பாகனே டுதக்கினிற் படரா
வெரித்திகழ் கிரியை யாற்றியிப் புடவிக் கின்னரு டருபவ ராய. (உச)

வேதியர் குடும்ப சபுத்திர ராக மித்திரச பாந்தவ ராகக்
கோதிரி தாரம் மிராட்டிர மதனைக் குறுகுவ ரெவ்வுபா யத்தா
லாதியே யரனே யாலவா யமுதே யங்கயற் கண்ணிபா லமர்ந்த
சோதியே சோம சுந்தரா வென்னுத் துளக்குறு சிந்தனுய்ச் சென்றான்.

மேதகு மறையோர் தன்சன பதத்தின் மேவுமா றுளங்கொடு துளங்குங்
காதர மிக்க மனத்தனுத் தாஞ்செல் கௌரியன் கண்ணுதல் சடையிற்
போதரு கங்கா தடத்தரு கடைந்தப் புனற்சக*சைகதம் போந்து
மூதகு சுவாலா வன்னிசங் காசன் முதமிகு சிடாரா விருதன். (உசு)

சத்திய ஞான னந்தவான் பொருளைத் தன்னிடைக் காண்பறக் காண்பா
வித்தக விசேட சதானந்த முனிவன் வீற்றிருந் தருள்வது நோக்கா [ன்
வத்திசை ரதாவ ரோகணி யாகி யம்முனி சமீபமுற் றரசன்
பத்தியிற் பதுமாங் கிரியினைப் பலகாற் பணிதரப் பண்ணவன் பகரும்.

வாழுக வேந்த வமைசநின் னுமை மருவுமூர் வருசெயல் யாவு
மூழினி லுரைத்தி யென்றிட வழுதி யோதினன் முற்றுமஃ துணரா
வீழுறு மனத்தோ டம்முனி வேத விப்பிர சங்கிர கணத்தி [றருளும்.
வாழிய விருப்ப முனையெனி லுனக்கொன் றுரைகுது நங் கேட்டியென்

ஆதிசந் திரபாண் டியமகி பதிநம் மாச்சிர மப்பிர தீசி
மாதிர மதனிற் பஞ்சயோ சனையின் மலியிம விரவிமா விரவி

* சைகதம்—மணற்திட்டு.

காதலிற் பயந்த கன்னியர் யமுனை கங்கைகண் மத்தியி னந்தர்
வேதியென் றுளதோர் புண்ணிய பூமி விளங்குமேழ் யோசனை விசாலம்.

அத்தலங் குரவ னுன்முன மலகி லருமக முஞற்றிடப் பெற்ற
வுத்தம தான மாஞ்சக குடும்ப வுந்த விப்பிர பிருந்த
நித்தலு நிறைந்தாங் கணிசெயும் வேந்த நீயடைந் தனையவிப் பிரர்க்குப்
புத்தியின் விழைந்து பணிதினம் புரிதி புரியுநின் றனைச்சிலர் புரிந்து.

நின்னொடு மிரதா ரூடராய் வருவர் நினதுபை திரத்தென முனிவன்
றென்னவ னுவந்து முன்னுற நமந்து திகிரியை வலவனை யாண்டு
மன்னுற நிறுத்தி யாங்கன மடைந்தம் மகியின் முன் னயன்புரி யாகந்
தன்னிலன் றமர்ந்த§விருத்துவிக் கிளாந் தாபத முனிவர்சந் ததியோர்.

அிதபூ தேவ ராகமல் குவராங் கவர்கண்மூ வகையின ராவார்
வினையறு மூல பரிடர்மா பரிடர் விளம்புறு மத்திரி பரிட
ரெனவுரை தருமிவ் வியல்புமுன் னுகை யாவையும் வினவியோர்ந்தனைய
வனகமெய்ம்முனிவர் பவனங்க டொறுஞ்சாலக்கினி கோத்திராதிகளால்

இருக்குமுற் சாகா பேதநால் வேத மெங்கணு மிசைத்திடுஞ் சீராற்
றருக்குவே தாந்த சிரவணத் தானுல் சாற்று०சங் காதவா தத்தாற்
பெருக்குறு நானு விதாகமாம் புதிக்குப் பிறங்கிய *கர்னதா ரனைநேர்
கருத்தினுற் குரவ ரதிதியர்க் கியற்றுங் கரிசறு சபரியா விதத்தால். ()

தாந்திர சிரௌத சுமார்த்தமார்க் காநுட் டானத்தாற் சகல?பூ தேதத்
தாந்திர ரதியாற் சட்கன்மா திகளா லகிலமும் விளக்குறு வரத
மாந்திர விவித யாகவிப் பிரரெம் மருங்கினு நெருங்குமா ளிகைசி [ன்
ரேந்திரங் கெழின்மா நதிதட†மடாந்த ரங்கண்மற் றியாவையும் பார்த்தா

வேறு.

உவகைவிம் மிதமீக் கூரு முளத்தனய் வளத்த வாரிப்
புவியம ரலகி லாவம் புயத்தர்வாழ் பிரம லோக
மெவமிலித் தான மென்றே யெண்ணின னுயுள் காறு
நவிலுமுத் திறத்த ராய நற்றவ ரிவர்க்கு நாளும். (கூ௫)

பணிவொடு பணிகள் பல்ல பரிந்துநாம் புரிந்திட் டாலும்
பணியவை தம்மா லெம்மூர்ப் படருமா றுள்ள மேவப்

§ இருத்துவிக்கிகள்-யாகசாதகர்கள். ० சங்காதம்-கூட்டம்.
* கர்னதாரன்-மரக்கலநடத்துவோன்.
? பூதஇதத்து எனப்பிரிக்க பூதம்—ஆன்மா.
† மடாந்தரம்-மடாலயவகை.

பணிவசித் திடுதன் மீளாப் பரகதி புகுந்தார் தம்மைப்
பணிமுடிப் பானி னீப்பப் பண்ணுநர் முயற்சி போலும். (நசு)

அரியதிச் செயலென் றெண்ணி யத்திறத் தவருண் மூல
பரிடவே தியரை மட்டு மடைந்துபைந் தருப்பை யாதி
தருதலப் பியங்க நற்*கோ தோகன மவர்பூந் தாள்கள்
வருடலென் றிவைபோ லெண்ணின் மற்றுள பணிகள் யாவும். (நஎ)

ஒவ்வொரு மனைக டோறு மொவ்வொரு வருக்கு நாளுஞ்
செய்விசா துரியத் தாலே தனித்தனி சிட னாக
வவ்வவர்க் கியையு மாற்றாற் பாரதந் திரனு யல்லு
மெவ்வமில் பகலு மாக விடையறா தியற்றி னானல், (நஅ)

ஈண்டிவ்வா றியற்று மாதி சந்திர வழுதிக் கோ
ரூண்டிடை யகன்று நீங்க வனந்தா மவன்பா லன்பு
பூண்டிடு முளத்தர் மூல பரிடவிப் பிரர்கள் போற்றும்
பாண்டிக §முபாகன் மாரம் பஞ்செய்புண் ணியகா லத்தில். (நக)

ஒருபகற் பால ராதி முதியவ ரளவா யுள்ளோர்
மருவின ரொருங்கு கூடி மாண்டரு மோர்பா லாங்க
ணாசனு மடுத்து நோக்கி யவரைவிம் மிதத்த னாகிப்
பரவுமித் தான மன்றோ பங்கய னுலக மென்றான். (ச0)

ஆபால விருத்த ராக வாங்கமர்ந் தருளும் வேத
சாபால சுவேத பூதி தாரணர் கனக மன்றிற்
காபால னருள்பெற் றுள்ளோர் வேதியர் கணங்க டம்மைப்
பூபால வதிமு போற்றிப் புவியினின் றெழாம லுற்றான். (சக)

ஆங்கனம் வணங்கி யாங்கே யவனியிற் கிடப்போன் றன்னைப்
பாங்குற வெழுப்பிக் கூப்பும் பாணிய னிற்கின் றானைத்
தேங்குறு மாசி வாக்கின் வத்திரர் திகழ நோக்கி
யோங்குநற் பணிசெய் யேது வுணர்தா விழைந்தா ரன்னோர், (சஉ)

---

* கோதோகனம்—பசுக்கறத்தல்.

§ உபாகன்மம்—சிராவணக்கிரியை.

எதினி துணர வேட்டோர் வழுதியை யினிது நோக்கி
நீதிக ழுருவி னாலே நிச்சயமாக னேயிப்
போதிலெம் மனைக டோறும் புத்திரர் சீடர் தாச
ராதியர் யாருஞ் செய்யும் பணியெலா மாற்று கின்றாய். (சங)

சிரமநற் றெண்டு நாளுஞ் செய்திடு தொழும்பர் சிந்தா
தரமெவை யவைகள் யாவுந் தந்திடார் பவ ராசி
பரசிவ னுலகரோர்ந்தப் பான்மையி னொழுகி மேன்மை
விரவுற வளித்த வேத நிந்தகர் விழுமம் போல. (சச)

புரையறு மறையோர் தம்மை யிகழ்பவர் புன்கண் போலக்
குரவரை மனித ராகக் குறித்தவர் பாவம் போல
தரமிகு மடியார் நிந்தை சாற்றுநர் சன்மம் போலப்
பிரமநா மெனவாய் பேசும் பேதையர் பாதகம்போல். (சரு)

ஞானசம் பந்த பானு வாதியர் நவின்ற வாய
தீனசம் பந்த நீங்கத் திரிமலஞ் செய்யு மாற்ற
லீனசம் பந்த விர்த்தே யிமகிரி தனையை வாம
ஞன்சம் பந்த மில்லா வடிநிழ லமர்பே ரின்பம். (சசு)

தம்மையன் பொடுநற் றீக்கை யாதிய சமக்கா ரத்தின்
செம்மைகொ ணியமா சார சீலரா யோது வாருக்
கெம்மையுந் தருவ வாகி யிலங்கருட் பாக்க டம்மை
வெம்மையூழ் வலியா லந்தோ வாரிய வேத மாய. (சஎ)

கலங்கலம் புனல்வ டித்த கழிசுவை யமுத மாக
விலங்குமெய் வேத மென்றே யெண்ணிடா தெண்ணில் காலம்
விலங்குரு தளற்றி லாழ்ந்து விழுமமுற் றுடுங்கு மாறு
மலங்கியிப் புடவி யிற்சா மானிய நூலென் றோதும். (சஅ)

அறிவிழி கயமைப் புல்ல ராஞ்சிலர் பாவம் போல
மறிமழுக் காத்தெம் பெம்மான் வயங்குபல் செயலின் மாண்பாற்
செறிதரு பாடை தம்முட் சிறந்ததென் றுயர்த்திக் காட்டு
நெறிதிகழ் தமிழ்க்குக் கூறு நிந்தகர் பாவம் போல. (சகூ)

அயனரி யிருவர் தம்மை யாற்கடி யார்க ளென்கை
நயனிறை மெய்ந்நூ லோர்ந்து நாட்டுத லொன்றோ யாண்டும்

வியனிலத் திவர்கள் பூசை செய்துமுன் வேண்டி யாங்குப்
பயனருள் சிவகோ சங்கள் பற்பல காட்டக் கண்டும். (ருo)

வங்கினி லுடம்பிற் ருங்கள் பிடித்ததே மாப தாகப்
பொங்குது ரபிமா னத்தாற் புராந்தகன் காம நாசன்
கங்கையஞ் சடில னீல கந்தரன் கபாலி சூலி
சங்கரன் றன்னோ டன்னோர் சமமென்பார் பாவம் போல. (ருக)

ஈசவத் திரங்க ளோர்ந்து ணுர்ந்தா னமா யேய்ந்த
பேசிய லீசா னத்திற் பிறந்துள காமி காதி
தேசுறு வாது ளாந்த சின்மயா கமங்க டம்மைக்
காசுளத் திழிவு கூறுங் கலதியர் பாவம் போல. (ருஉ)

முக்கண னீசா ணுதி முகோற்பன புனித மேன்மை
தக்கவைந் திருடி யோர்தஞ் சந்ததி யினராய் நாளு
மிக்குறு பரார்த்த பூசை வியனுல கெல்லாம் வாழப்
பக்கமொ டியற்று வாரை யிகழ்பவர் பாவம் போல. (ருந)

இன்னன வுந்த தத்தோ டிலங்குறு பொருள்க ணிந்தை
பன்னுநர் பாவம் போலக் குலாசல பாரம் போலத்
துன்னுபு விருத்தி யாகித் துக்கமிக் களிக்கு மன்றோ
மன்னவ நினக்கு யாஞ்செய் வனதரு வனமற் றியாவை. (ருச)

நின்மனே பீட்டம் யாவை நிகழ்த்துதி யென்று சென்ற
சொன்மனு நீதன் வாய்மைச் சுயம்பிர காச ரூபன்
றன்மனு மிடபா ரூடன் சதாசிவ னினிது மேவு
நன்மனு லயனை மீட்டு நமஸ்கெழுந் தரசன் கூறும். (ருரு)

போற்றுசீர்ப் பாண்டி நாடு புரந்திடு மாசனேகான்
சாற்றுமென் னுமை மாதி சந்திர வழுதி சோ
னேற்ற செம்பியன் சகாய மித்திர னெக்கன் ஞரோ
டாற்றிய சதம கத்தோ னவையிடை யடைந்தேன் முன்னாள். (ருசு)

வேறு.

கலங்கொள் விப்பிர சங்கமில் லாதராட் டிரநா
னிலந்த பாவினம் புரிதரு மிழுக்கின லிலேகர்

குலங்க ளாலரி சுதன்மைநற் சதசிடைக் கொடியேன்
கலங்க நெஞ்சக நிந்தைசெய் திடப்பெறீ இக் கவன்றேன். (கள)

நெருங்கு போரில்வெந் நீட்டவர் நிகர்தரக் கவியின்
றரங்கு நித்திடாச் செல்வரைப் பாடினர் தகைய
வரங்கொ டம்மர பிழுக்குறப் பெற்றவர் மான
வாங்கு நெஞ்சனாய்ச் சமழ்ப்புமீ தூர்தவி னடியேன். (கஅ)

தாங்கி ராட்டிர*தாரமென †சசிவபுத் திரர்தம்
பாங்கி ருத்துப் சந்தன ருடனாய்ப் படர்ந்து
தேங்கு விப்பிர பிருந்தபூ ரிததலந் தேடி
யாங்கு வட்டைக ளனேககா வதங்கடந் தடைந்தேன். (கசு)

திமிரம் வீட்டிய சதானந்த முனிவனாச் சிரம
மமல வம்முனி யருளினு லடிகணீ ராமரும்
விமல வுத்தம வித்தல மேன்மைகேட் டுணர்ந்தந்
நிமல னுஞ்ஞையா லாங்ஙனம் பாகுதேர் நிறுத்தி. (சுய)

ஒருவ னாகியிங் கென்றுய ரெய்திகுவா னுமையே
சரண மாகவந் தடைந்தன னடைகின்றேன் றமியேன்
கருது மெண்ணமீ ததுநும ததினமே கருணைக்
குரியு வந்தணீர் நும்மரு ளடியனேற் குளதேல். (சுக)

எனது நாட்டினுக் கெழுந்தருள் பாக்கிரு நிலத்தோர்
புனித மாதரிற் பணிவுறு பூச்சிவ ராகி
யினிது மேவுச குடும்பரா யாங்கணு மிலங்கு
மனக மாதவீ ருமைப்பணி கின்றன னடியேன். (சுஉ)

வேறு.

அருந்தவத்தீர் யானெண்ணி யாங்கருளி யளியேனுள்
வருந்துதுனி மாற்றுகிற்பீர் வழிபடுமென் மனங்கொண்ட
திருந்துசெயன் முடியாதேற் றேவசபா நிந்திதனாய்ப்
பரிந்திடுமென் னுயிர்நீக்கப் படுமென்ப துரைப்பானேன். (சுங)

பன்னாளு மசுராதி பயத்தாலே யிடர்கூராத்
தன்னொடு தன்னதெனும் துணிவின்றித் தடுமாறு

* தாரம்—உருபுவிரிந்தபாரம். † சசிவன்—மந்திரி.

மின்றுடு சதகோடி வேத்திணு திந்தையினு
மின்றுமிக் குளகிய மெனக்கினிதா மெனவுரைத்தான். (சுச)

அரசனிவை யுரைப்பளவி லந்தணருட் சிற்சிலவர்
வரைவிலரும் பெறற்செல்வ வழுதிகேள் வருந்தற்க
வுரைசெயுன தண்ணடைக்க ணுறுகின்றே முறுமெம்மை
யரியகுடிம் பங்கனொடு மடைவித்த லுனக்கரிதாம். (சுரு)

இனையதனக் கரிதாவ தெவனெனிற்கேண் மதிநின்பான்
மனனுவந்து வருமெமது வைதிகமாண் வழிக்கிரியை
யினிதியற்று காலமதொன் றினையேகா முறுமியல்பிற்
றெனவுணர்தி கணமேனு மேறுதரு முதற்கிசையா. (சுசு)

ஆதலினற் பொழுதொன்றே யருத்தியுறு மக்கருமம்
போதநெறித் தவருமே புரிந்தியற்றப் படுவதெவ
ஞேதுறமெய்ப் பிரமச்சார் புடைத்தாமக் கிரியையினை
வேதியர்க ணேயத்தால் வெருட்சியால் வெருட்சியினல். (சுஎ)

அருத்தமதி லுறுநசையா லாதல்விடு கிலர்திண்ணம்
விரித்துரைநாம் புகல்வாவேன் மெய்தளர்வுற் றுணர்வொடுங்கி
வருத்தமிகு முயிர்நீக்கம் வருமெனினும் வைதிகமாண்
கிருத்தியம்விட் டொழிதலுறார் கெழுதகுசீர் மறையோர்கள். (சுஅ)

ஆயின்மிகு புகழ்தழுவ தாஞ்செயலின் வாஞ்சையினர்
யேயவிரா சதகுணத்தர் விடுகிலர்கொ லெனினவருந்
தூயவரு ளுச்சிரமத் தொடர்ச்சியினுக் குரித்தாகப்
பாயமுன்னூ லுரைதருமப் பற்றுவிடா ரொருபோதும். (சுகூ)

சாற்றிருடி*நிபாகிச் சாபாறுக் கிரகவலி
யேற்றதிரு வாக்கினரா மினையதிறல் வேதியர்தம்
மேற்றிகழ்கித் தியமேனை மித்திகமாம் வினைகடமி
லாற்றுறுநா ளுதிக்க வடுத்திடுமே லங்கிபத்தால். (எ0)

பருவரன்மிக் குறுபாவம் பற்பலவத் தோறுமவை
விரிதிரைமுச் சிருடித்த மேதினிசா வலனுய

---

* நிபு—வசை.

நிருபனேவந் தடர்ந்தலக்க ணிறுத்துமன்ஜே விவையாவும்
பெரிதுமுளத் தடிக்கடிநீ பேணிநினைந் தோறுதியால். (எக)

தென்னவநீ யின்னவைக டேர்ந்துணர்ந்த வழிநாங்கள்
சொன்னவைக டமிழுனக்குத் துணிவுளதே லங்ஙனமை
நின்னரிய தமிழ்நாட்டி னீயழைத்துக் கொடுபோதி
யென்னமுழு துணர்மூல பரிடமறை யவரிசைத்தார். (எஉ)

வேறு.

வேந்தன்மறை யவர்வாய்மைகள் வினவாவடி யேனீ
ரேந்தும்புகழ்க் கருமந்தவ ருமைப்புரப் பேன்யா
னோர்ந்திங்கிசைத் ததுசத்திய முமர்மானதம் யாவு
நேர்ந்தெண்ணிய வாறேபுரி கின்றேனிறை தவத்தீர் (எங)

வனசந்தன மிசைகொண்டுடன் வருமின்றிர விடையே
வனசந்தன நகிலங்களை மகவின்குல முடனே
வனசந்தன மனையந்தணன் மலையுங்களை முகில்பாய்
வனசந்தன மலயங்கொளென் மகிழ்ந்தென்றிட நிணமே. (எச)

வனசந்தனமிசை-அழகிய தேர்மீது.வனசம் தனம் நகில்-சந்தனக் கோலத்தை யணிந்த சுகத்தைச்செய்கின்ற பொன்னிறத்த தேமல்படர்ந்தநகில். வனசம் தனமனை, பாய்வனவாகிய சந்தன மரங்களென்க.

வதிசந்திர முடிநின்றிழி வாமொன்றிய வேக
வதிசந்திர மெறியுந்தடம் வருநுங்களை யேக
வதிசந்திர மருவும்படி நிறுவுஞ்செயல் பாக
வதிசந்திர மணனன்றருள் வரநன்குசெய் வேனால். (எரு)

வேகவதியின் பொன் எறியுங்கரை, அவதிஎக சம் திரம் மருவும்படி, பாகவதி சந்திக்கின்ற ரமணன் என்க. ஏக என்பது ஈறுகுறைந்தது.

என்றின்னப விதவாய்மைக ளியம்பாவெழி விரத
மன்றங்களு குறுமாகினை வுற்றனது பொழுதே
நன்றுந்திடு விறற்சூதச கிதமாயது நவைதீத்
தென்றும்மரு டருமம்முனி யுழைநின்றெழுந் தன்றே. (எசு)

காயச்சரி மேலிந்திர ஞாலச்செயல் கடுப்பப்
போ⁰யச்சகன் மறையோர்களற் புதமெய்தமற் றொளிகள்
வியச்சவி யாலெண்டிசை விளக்காவிறை பாங்க
ரேயச்சக டிழியாவிரு நிலனுற்றதவ் விடையே. (எஎ)

பொற்றேரெதிர் கச்சோதமெய் போன்மாழ்கிய ரவித
னற்றேரணி மெலிவும்மதிற் பரிமுன்னா னல்க
முற்றேரணி மதுலைப்*புகுந் தனபோன்முறை யும்பார்த்
தற்றுனவ மானந்தனை யுந்தக்குட வாரி. (எஅ)

அதுபோழ்தவர் யாகாங்கியி னகல்வானமுந் தூம
மிதுவேயென முகிலும்பொரி யினமேயென மீனு
§மதியானெய்கொள் கலத்தாரவட் டகையேயென மதியும்
விதியாரவி பெறுதேவரிற் கோளும்விளங் கினவால். (எகூ)

அதிபாதிநங் கியபோன்றொளி ரர்த்தார்த்தம யத்திற்
றகமாகிய திகண்முற்றிய மறையோரவர் தாஞ்செய்
புகல்வேள்வியி னந்தத்தவ பிருதஞ்செயப் புகல்போ
னருமாதிசந் திரபாண்டிய ரதமேறினர் யாரும். (அ0)

வேறு.

பாத மேற்பணி தந்த திப்பிய தேரி லேற்றிய பார்த்திபன்
மோத மிக்கம னத்த னற்சகு டும்ப ராயருண் முந்துறு
மேத மற்றவொ ராயி ரத்தெழு நூற்றி லக்கின ராகிய
போத விப்பிர ரோடு வானெறிப் போத வுந்தினன் வையமே. (அக)

மருந்து வின்கதி விருத்த மென்றிட மனத்தி னுங்கடி தேதன
திருந்த குந்திறன் மிகுத்த சந்தன நடத்தி னன்செறு மேல்வயி
னருந்த மங்கைய ளிகர்த்த வம்பகி யடுத்த சுந்தர நாதர்தங்
கிருத்தி மந்தன பசிக்க னம்புனல் கிளக்கு மன்றலி னியுழர். (அஉ)

இலங்கு தன்னர சாட்சி மேவிய ராச தானியொன் றியம்புழர்
புலங்கொ ளுவலர் போற்று சீர்மது ராபு ரிக்கொரு மூன்றரைத்
துலங்கு யோசனை தூர மாகிய கிருத மாலிகை டென்னிய
கலங்கொள் கானமி லங்க வந்தது காவன் மாறன கூவிரம். (அங)

---

0 அச்சஅகல்—சரீரவாஞ்சை நீங்கிய. * புகுந்தபின்—ஈரிவடிவுற்றன போன்ற § மதி—வினைத்தொகை.

அன்ன போழ்துதி ளுத்த லேசன தருளி னுலத னச்சவன்
பின்ன மாகுபு *பூக தம்முறப் பேது றீஇயுள மாழ்குருத்
தென்ன னீள்கரு வரிக்கொள் யாமினி யந்த மாவதெ ரிந்துகூர்
கின்ன மேலுற வன்ன தேரினுங் கிழி ழிந்தன னவரொரும். (அச)

அச்செசா டிந்தமை நோக்கு காவல னூர்த்தி பீதிகள் கூர்த்திடப்
பொச்சை யின்னதி னேரு றுங்கொலெல னுவி போற்றுறு சீவனங்
கச்ச மற்றக வற்சி யேகுறுங் கொல்லெ னுவுலே கருத்தனுய்
முச்ச கந்தொழு சம்மி யாகநன் முனரி யெங்கனு நாடுவான். (அரு)

கட்க பாணியன் பாது கைக்கொளுங் காலன் வாவித டாகமுற்
கட்க விழ்ந்தொழு கந்த வல்லேயி னெல்லே யொல்லேயிற் கண்ணுரு
துட்கு நெஞ்சொடு நேடி யெங்கனு மோதொர் †பல்வல மாயினு
முட்கு ளிர்ந்திடு மாறு கண்டிலன் ரூவ ரோவம னுங்கியே. (அசு)

எருக்கத் தம்புலி யூரி னம்பிசொல் பாண னூர்மா பேந்திழை
பெருக்கத் தம்புலி யூரின் மன்றிறை பேர ருட்டிற னுலவ
னுருக்கத் தன்பொடு மோது பண்முறை யுள்ள வாறுணர்ந் தோதிடார்
வருக்கத் தின்னிசை முற்று ணர்ந்தவர் போல வேபயன் வாஞ்சியா. ()

o ஓதி வேறுபல் லிசையிற் றென்மொழி மறையை யும்பர்களுதன்வாய்
வேத மாசுர பேத மோடுரை வினைஞர் தாங்கொளும் விழுமம்பே
லேத மேகொடு வாடு வாரென வமரி யின்புற நகருமா
சீத வாரிம தித்து மாவிடத் தீயின் வாடிய தேவர்போல். (அஅ)

பனுவர் தாபன கமது நாட்டிடைப் பயில வாற்றுபு தேவநிந்
தனைய கற்றியின் புறுது மென்றவெண் டனேயி ழந்தன மென்னவு
முனிவர் தாம்புரி கருமம் வைகறை முடிவு ருவிடின் முனிவரோ
யெனவு மெண்ணுபு துயரின் மூழ்கினன் புவன நேடிய விறைவனே.

கலங்கு மிவ்வரு ணுேத யத்திலே காண்ட மென்னிலிவ் வேதியர்
சலங்கொ ளுனசந் த்யாநட் டானவுன் மூகர்க ளாயெனேச் சபிப்பரால்
வலங்கொள் கங்கைகா ளிந்தி மத்திய வாசர் நேசர்நல் விருடியர் [ன்.
குலங்க ளொத்தவின் னவர்வெ றுத்திகழ் தொடிய னுயினன்றமியனே

---

* பூகதம்—பூமியை அடைதல். † பல்வலம்—சிறுகுளம்.
o ஒதிவ்டுவொரென்றியையும்.

சால * பீடண நாக பூடண காம ○பேடண காரண
நீல கந்தா சோம சுந்தா நேய வந்தா பூரண
சூல பாணிய வேத வாணிய தோய வேணிய தாரண
பால லோசன †கோச ராசன பாவ மோசன ‡சாரண. (கூக)

வேறு.

அந்தோ சிவனே யெனக்கிந்த வலக்கண் வருமோ வறவர்சினம்
வந்தால் விரணம் புரையோடி வருத்தும் பதத்தின் மற்றுமொரு
வெந்தா ரிருப்புக் கோல்பாய்ச்சின் விளையுந் துயருற் றுலேவனே
யிந்தார் முடியாய் மதுரேசா வெந்தா யெளியேற் கிரங்காயோ. (கூஉ)

ஓது மறையு முணர்வரிய வொருவ வுலக சராசரங்கள்
யாதும் யாரு மாயெங்கு மிலகும் பொருளே வெளியேற்கிப்
போது மருவும் பொறுக்கரிய புன்க ணுணராய் போன்றிருந்தா
லேது மிலயால் வேறுபுக வெந்தா யெளியேற் கிரங்காயோ. (கூ௩)

செல்லார் பொழில்சூழ் திருவால வாயின் மணியே சிங்கிநகர்ந்
தல்லார் மிடற்றி னருமருந்தே யகில நாதா வளித்தமகப்
பொல்லா வினைகள் புரிந்தாலு மீன்றாள் கடியிற் புகலுண்டோ
வெல்லாம் பொறுத்தே யித்தருணத் தெந்தா யெளியேற் கிரங்காயோ.

அருளின் றாமோ நினையரணு வரற்று மடியேற் புறக்கனித்த [தோம்
றெருளின் றிகழ்ந்த சபித்தனக்கே செய்யுங் கொலையுஞ் சூழ்ந்தார்
பொருளென் றுணரா தெவர்க்கு மெட்டாப் புனித நடந்தந் தவருளத்தி
னிருவன் றகற்றி யருண்மதுரை யெந்தா யெளியேற் கிரங்காயோ.

நிமைக் குறித்தா ரறிவில்லாச் சிறுவர்ப் பயந்தோர் செறுத்தாலு
மாமப் பொழுதே யணைத்தருள்வா ரகில மாந்த ரருட்கடலே
தோமெற் குண்மை யாற்பணித்தாய் துயர மெனினு மதுதீர்த்திங்
கேமத் திருத்த னின்கடனே யெந்தா யெளியேற் கிரங்காயோ. (கூசு)

என்று வழுதி துதிகள்பல வியம்பி யெனக்கூ ழித்துயா
மன்றோ வளித்த தினியென்றோ வடியேன் புரிவ தென்றலமந்
நின்று வுழந்தா னிங்கிருந்தென் பயனென் றெழுந்தா னம்மறையோர்
முன்று வருவா னுகவவன் றீன சகித முகநோக்கா. (கூஎ)

---

* பீடணம்-பயங்கரம். ○பேடணம்-பொடியாக்குதல்.
† கோ-மலை. ‡ சாரணம்-உலகத்தைப் பஸ்மமாக்குதல்.

அந்த ராச சல்லாபத் ததிதற் பாராம் விப்பிரர்க
ளெந்த வகையுஞ் சகிப்பரிதா மிடருக் கிடனு யிறையவனல்
லந்த * பிராமி யம்மூர்த்த கிரியா பங்க மனங்குறித்தா
ருந்து மருண விம்பத்தி னுதய பதமு முடன்பார்த்தார். (கூஅ)

தம்மி லொருவர்க் கொருவரிவை சாற்று வார்பன் னெடுங்கால
மெம்மி னெருநா மியம்பாமே யெண்ணற் கரிய பணிபுரிந்தா
னம்ம தெய்வ கதியாலே யடைந்தா னிந்த மரு0த்தலத்தை
மம்ம ருளனுய் முகப்பொலிவு மாழ்கி நலிந்தான் மகிபாலன். (கூகூ)

வேறு.

இவனை யின்னவை நோக்கிநா மிவ்விடைச் சாப
நவிறல் பாதக முசிதமன் றென்றிவை நயந்தாங்
கவர்க ளோதின ரந்நிலை யக்கடத் தரசன்
றவர்கள் யாவருங் காண்புற விப்பிர சரீரி. (ச00)

தேர்த்தி வாகரா கர்ந்தியன் சிராயுள்கூர் விருத்த
† னார்த்தி ராம்பரன் பவித்திர காசமித் தவனுய்ச்
சேர்த்த தேவரு முனிவருந் தினந்தினஞ் சென்று
நார்த்த சிந்தையிற் போற்றுறுஞ் சீதளி நாதன். (ச0க)

அகில நாயகன் மதிமுடி யதனிடை யமர்நா
முகில நாயகன் கருபமுஞ் சருமமு மொழியுந்
துகில நாயக னுருபுற மேனியிற் றுலங்கோர்
நகில நாயகன் றூயகன் சீதளி நாதன். (ச0உ)

ஏன வெண்மருப் பாமையோ டெலும்நர் வரித்தோன்
மீன வொண்கண்வா மனமுழு வெலும்பதழ் வேய்ந்தே
மான வன்பர்மா லினுமுனிந் தருடால் வயக்கு
ஞான நாயகன் றூயகன் சீதளி நாதன். (ச0ங)

அடுத்து வந்தன னரசன்விப் பிரர்களாங் கணுகுங்
கடுத்த தும்பிய கந்தரங் காந்தவந் தணனை
யெடுத்த சிந்தையி னனிமகிழ்ந் தீசநந் நிபனுய்
மடுத்த கண்டிரும் பாவகை பார்த்தனர் மதித்தார். (ச0ச)

---

* பிராமியமூர்த்தம்—வைகறைக்காலம்.

0 மருஸ்தலம்—நீரற்றஇடம் † ஆர்த்திராம்பரம்—நனைந்தவஸ்திரம்.

வேறு.

வேணியை மறைத்து மலர்ச்சிகையாக்கி வியாக்கிர சருமத்தைவிலக்கிப்
பாணியி னிணைந்து தண்டெளி தூங்கும் பானிறத் துகிலரைக் கசைத்துப்
பூணர வகற்றித் தவளமுப் புரிநூல் பூண்டுமா லயன்முத லெவருங்
காணொணா வடிவங் காண்பதற்கெளிதாக் கண்டுகண்களிப்புறக்கலந்தான்

கடுக்கையால் வாங்கி யுண்டவா னளித்த கண்ணு தல்வேதிய னாகிக்
கடுக்கையார் வனத்தின் மால்விழி புனைந்தகழலிணை கன்றநேர் நடந்தாங்
கடுக்கையா னமுத கடத்தைநேர் கிடைத்த வரும்பசி யாளனே போலங்
கடுக்கையா ருலக மொருங்களித் தருளவ் வந்தண னடிபணிந் தரசன்.

பேதுறு துக்க சகிதனுந் தனக்குப் பிரத்தியக் கானந்தப் பிரத
வேதிய னாகி வருமவற் பார்த்து விளம்புவா னிங்கொர் * வே சந்த
மாதல்கா ணாமே யனார்க்கடல் மூழ்கு மற்றத்தி 0 லார்த்திராம் பரத்தோ
டேதற வருநந் நாமதா னங்க ளியம்புக வடிகளென் றிசைத்தான். ()

ஆர்த்தலை சருட்டு மாழிசூழ் புடவி யளித்திடு மாசகேட் குதிநாந்
தீர்த்தநா மப்பே ருடையமிவ் வனத்திற் சிரஞ்சக குடும்பமோ டன்பு
கூர்த்†தனு சார்சூழ்ந் திடவிருக் கின்றேங் கோணையார் பிரமமா தேயப்
பேர்த்திலங் குறுமிக் கானமீ தமைக பெட்புடைப் பந்துவர்ச் சிதனாய்.

இவனொரு தமியா யடைந்தனீ யாரை யிக்கன மக்கின விரதத்
தவிர்தர வகாலத் தடுத்திடு மிவரா ரறைகென வதுவினா யரசன்
றவர்நிறை‡குகனா விருத்தவே தியமெய் தரித்துற திருத்தலத்தவற்குத்
துவிசகி ரகண காரண முழுதுஞ் சொல்லுவா னுள்ளவா றமைந்தான்.

வாமமார் நீர்த்த நாமவே தியனான் மாமது ராபுரி யரச
னாமமே லாதி சந்திர வழுதி நான்மறை யவரிலா நாட்டை
யேமகிழ்ந் தளிக்கு மிழிபினா லமரர்க் கிறையெதிர் யான்புகுந் திருந்த
தாமமார் தவிசு களங்கமுற் றதனாற் சாற்றரும் பாபவஞ் சார்ந்தேன்.

---

* வேசந்தம்—நீர்சுருங்கிய சிறுகுளம்.

0 ஆர்த்திராம்பரம்—நனைந்தவஸ்திரம்.

† அநுசார்—பின்சரிப்போர்; அவரேவலாளரென்க.

‡ குகனா—வஞ்சனை.

அனையதிச் சுடலால் வாரண வாசி யடைந்தனன் சதானந்தர் மொழியா
லனகரா மந்தர் வேதிவே தியரை யழைத்தனன் மீண்டுசெல் லளவி
லெனதிய விரத மச்சொடிந் தவனி யிடைவிழ விவரொடு மினேந்தேன்
புனிதவெம் பெருமநனைதுகி லொடுநீ போந்தரு ளருமையென்புகல்
[வேன்.

மாதவ துவிச புங்கவ புவன வர்ச்சித ராட்டிர நகரி
வேதியர் வசிக்கப் படுவதன் றன்றோ விளம்புநீ யிங்குளே யாகிற்
சீதள வாரி பூருவ தலத்தைத் தெரித்தருள் கென்றலு மரச
காதலென் னபீட்டமுடித்தியேலதனைக் காட்டுது மென்றனன்கடவுள்

என்றருள் மாற்றங் கேட்டுள மகிழ்ந்தானெந்தைநின் னிட்டம்யாததனை
நன்றுநீயெண்ணியாங்களிக்குவன்யானவின்றதுசாதமென்றுரைத்தான்
பின்றையம்மறையோர்குழுக்கள்விப்பிரசுப்பிரியமேயிருதயம்பெருகும்
வன்றிற லரச னுடன்சிவ மறையோன் வந்தன னவ்வன நாப்பண் ()

சென்றவட் புகுந்த வேதிய வடிவன் சிரண பன்னபூரணமாய்த்
துன்றிய வனந்த மீனமாதியவாய்த் தோற்றுபல் சலசரங் களிறு
னின்றுநோக் குருக் கறிவுறுத்தகைத்தாய் நிகழ்த்துமப்பிரியநல்குவதா
யன்றமைந் திருந்த சீதளி நாமத் தாவிநீர் காட்டின னுங்கே. (ககச)

கண்ணுதல் காட்டக் கண்டிடு மறையோர் காவலன்குல மூழ்கி [ன்னிப்
யெண்ணிவந் தடைந்தோர்க் கேலான் செல்வ மென்னவுங் கற்புடைக்க
பெண்ணலம் வாளா கழியவோர் வரனைப் பெறுதமர் பெய்வளையெனவு
மண்ணலந் தீர்த்த நண்ணிய திறங்கண் டவலமுற் றழுங்கினர் மாதோ.

கண்டது சிவத்து விசன் மலர் மந்த காசமு காம்புய னுகி
மண்டனை நோக்கு பார்வைய னின்று மலர்பிர ணவமனுச் செபித்துக்
கொண்டுபோ தாள வாகினி தனையக் கோட்டத்தி னழைத்துநாற் றிசையு
மண்டுபு மேற்கொ ளப்பிர வாக வாரியை யந்தவா வியின்கண். (ககரு)

தனகர பல்ல வத்தினு லமைத்துத் தகைந்துதா பித்தன னடங்கி
யினகர தான சங்ககல் லார விமாம்புய சைவலத் தோடு
மனகரம் மியசு விலநனி விருத்தி யாயவக் கங்கையிந் தனல
தினகர நயன வேதிய னடிபூ சிப்பவள் போன்மென விரிந்தாள். (ககசு)

## வேறு.

இன்ன வற்புத மேன்மைகண் டிந்துவின்
மன்னு வப்பெனும் வாரிதி மூழ்கினன்
துன்னு விப்பிரர் யாவருஞ் சொல்லரு
மன்ன யத்தபே ரானந்த நண்ணினர் (கசஅ)

தீர்த்த நாமப் பெயர்கொளச் செம்மன்மு
ளோர்த்த வுட்டுவி சோத்தம ருட்சில
ரார்த்த குஞ்சி யவிழநின் றாடுவார்
பார்த்தி றைஞ்சுபு பாடுவ ரோர்சிலர். (கசகூ)

கைத்த லத்தொடு கைத்தலங் கொட்டுவார்
மெய்த்த லத்திற் புளகம் விரவுவார்
முத்த வேணுதண் டேந்துபு முன்னெறிந்
தூத்த ரீயம்விண் வீசுவ ரோர்சிலர். (கஉ0)

மன்னு குண்டிகை வானெறி வார்சில
ருன்னி யுன்னி யுவகையின் மூழ்குவா
ரின்ன தீர்ந்தன மென்றரி ணைத்ததோ
றன்னை விண்ணெறிந் தேற்பர்தங் கைச்சிலர். (கஉக)

முந்த வானின் முடுக்கு தருப்பையை
யந்தி லங்கையி னூற்றுவ ரோர்சிலர்
சந்தி கால நியமந் தவறிலே
மிந்து சேகர னின்னரு ளீதென்பார். (கஉஉ)

தீர்த்த நாமன் செயகிளைந் தேத்துவா
ரார்த்த வோசையி னண்டம் பொதுப்பபாற்
சேர்த்த தேனுகா தேனெனச் சிதவி
நீர்த்த வாத தடத்தி னிலாவுறும். (கஉஙு)

ஆறி ரண்டு தறையு மடைந்தனர்
வீறு தண்புன லேய்ந்தனர் வேதியர்
கூறு மன்புடை வேந்தங் குடைந்தன
னேறு வேலை யருணாறு மெய்தினன். (கஉச)

வேறு.

சீதளியே யங்கிகுண்டஞ் செங்கமல மங்கியளி திகழுந் தூமம்
வேதியரோ புகலிருத்து விக்கிகள்செய் குரவரென வேந்தன் றூனே
யோதுபரி மேதவினை யுஞற்றுவிக்குங்கருத்தாவென் றுரைப்பச்சூழ்ந்தா
ராதரமாக் கொணர்வானி லனுகினன்கீழ்த் திசைப்புரவி யணித்தேர்ச்
[சூரன்.
ஆதவனு தியர்முனிவ ரமரர்களுக் கருக்கியமுன் னுய செய்தார்
வேதமலர் தருகாயத் திரியொடுமைந் தெழுத்துளத்தான் மௌனமேவி
யோதியிவை முதலானி கோத்தமகன் மம்முழுது முஞற்றி ஞர்பின்
பாதியுடற் பாவையுருக் கரந்துதரா சுராகிருதி பரித்து வந்த. (கஅசு)

தன்னிகர்விப் பிரசிவனே யரசொமெத் தராசுரர் சூக்குமஞ்சார் நோக்கா
லன்னிலையின் னவனென்ன வாய்ந்துணர்ந்தா ரனந்தரமவ் வந்தணாளர்
தென்னவன்முன் னருள்வடிவாய் நின்றருள்வே தியனுய சீதளீசன்
பன்னுறும்யா வருங்காணச் சானவிதண் சசாங்கமதி பரித்தவேணி. ()

சிலாசனத்தன் றிரிநயனங் கபாலகர நாற்புயமுன் றிகழ வாய்மைப்
பலாசனத்த வுமைசகித ஞயிடபா ரூடனுய்ப் பாவுதேவர்
* கலாசனத்த தவமுனிவர் சேவிதனு யலகில்சிவ கணங்கள்சூழ
೦மலாசனத்தமுறத்தோன்றிநின்றருளக் கண்டரசன்மறையோர்யாரும்.

கண்டளவே கரைபுதண்டா காரமெனக் காறலையிற் கலப்ப வீழ்ந்து
மண்டனிலெட் டங்கமுற வணங்குபுபன் முறைமுறையின் வலியநீல
கண்டனைய கண்டனைமான் கையனையெம் மையனைவான் கதிர்வெண்
[டிங்கட்
டுண்டனையத்§துண்டனைப்பைந்தோகையனையீகையனைச்சோதிதன்னை

கனத்தானைக் களனுவா கனத்தானை யினத்தானைக் கருணையன்பர்
மனத்தானைச் சந்திசைக மனத்தானைச் சினத்தானை வயச்சூலானை
யனத்தானை வாமகர வனத்தானை முனத்தானை யருள்செய்கொன்றை
வனத்தானை முடியின்மதி வனத்தானை மேன்மேலும் வணங்கினுரால்.

களன்கனத்தானை ஆவாகனத்தானை என்க. கருணையன்பர் என்பது, இனத்தான் மனத்தான் என்னு மீரிடத்துஞ் சென்றியையும் நடுநிலைத்தீபகம். வாமகர வல் நத்தானை என்க.

---

* கலாசன்னத்த எனப்பிரிக்குக. ೦ மலாசு--மலஆசுனெப்பிரியும்; குளாம்பல்போல. § துண்டு--பங்கு.

ஒருவிடைமே லமர்ந்திருவே றுருவாய்மும் மலமகற்றி யோது நாலாம்
பாநலமேதந்தருளுமைந்தெழுத்தை யாறமையப் பகர்வாருள்ளம்[றேன்
விரவியெழு மெண்குணனென் பானுருவ னுங்கவர்முன் வெளியி னின்
றிருவடியிலிறைஞ்சுநரின் பத்தழுந்த வருணோக்கஞ்செய்தான்மன்னோ.

இறையிடபத் தெழுந்தருளி யிலங்குதிரு வெழுச்சியுரு வெழிலைநோக்கி
நிறைமகிழ்ச்சி யுளங்கொள்ளா நீருருவாய்ப் புறம்பொழியு நீர்மைத்தாகச்
செறியருவி விழியொழுகச் செங்கரங்கண் மேற்குவியச் சிந்தை செந்தீ
யுறுமெழுதா யுருகமொழி தழுதழுப்ப நின்றுதுதித் துவகை கூர்வார். ()

திவளுமிள மதியரவு தேங்கொன்றை நதிமுதல திளைக்க வாய்ந்து
கவினிலகு வித்துரும மொத்திலகு செஞ்சடையின் காட்சி போற்றி
குவலயமெல் லாந்தழைப்ப விரவிமுன மரவிந்தக் கொள்கை போல
வவரவர்தம் பயனடைய வருள்பொழியுந் திருவதனத் தழகு போற்றி.

மும்மலமே முக்குணமே முக்கரண முக்குற்ற மூன்று பற்றே
மும்மனமே முப்பகையே முப்புரமே மூன்றவத்தை மூன்று புத்தி[றே
மும்மைவினைமுதலவற்றின்முரண்சாய்த்தின்புறற்கேதிம் முழுநீறென்
மும்மையுலகுணர்த்தவணி முக்குறிவெண்ணீற்றுநுதன்முதுசீர்போற்றி.

ஆருயிர்கட்கிடரிருணீத்தவிரொளியெங்கணும்பரப்பியருளும்வாய்மைச்
சீருறுமுச் சுடர்நயனத் திறல்போற்றிமறைமலருஞ் செவ்வாய்போற்றி
காருருவா யரிவெதும்ப வடர்ந்துலக மொருங்கவியக் கனன்ற கோற
வீருறுவெந் நெருப்படங்கி நிலவுதிரு மணிமிடற்றி னிலைமைபோற்றி.

மேருமலை யுளநாணித் தலைகுனிந்து சிலையாக வீறு தோளு
மாருமுந்நூ லக்கடுக்கை யலங்கல்சா ரக்கடுக்கை யணிந்த மார்புஞ் [சங்
சாருமினென் றொலித்தழைத்துத் தானிசமென் றழலேந்திச் சார்ந்தாரச்
தீருமினென் றளித்தருள நேற்றுறுநாற் றிருக்கரவண் சீரும் போற்றி.

கதழுழுவை யதளுடுத்த கவினிலகு திருவரையின் காட்சி போற்றி
புதர்நிறைந்து விதிதொடர்ந்து போதநிலை தனிற்படர்ந்த புனித சீல
குதயலய மொன்றுமின்றி யொருநிலையாய் நிரதிசய வுலவா வின்ப
விதமயமா யலகிலர்வீற் றிருப்பவிரி திருப்பதத்தி னெழிற்சீர் போற்றி.

பவளமலை தனிற்படர்ந்த பனிபோலத் திருநீறு பரவு மேனித்
திவளுமெழி னலம்போற்றி சிதளிநா யகனெனுமா திருப்பேர் போற்றி

தவளமலே தருமாது தருமாதி வளர்த்தருளுந் தளிர்க்கை யன்னே
துவளுமிடைச் சிவகாம சுந்தரிசே ரிடப்பாகத் தோற்றம் போற்றி. ()

என்றிவைமுற் பற்பலவா யிறையவனு மறையவருஞ் சீத ளீசன்
றன்றனிமான் மியங்கடமைத் தருவேத சாரகீர்த் தனங்க ளாலு
நன்றிதரு சாமகா னங்களினு லுந்துதிக ணவின்ற பின்னர்
மன்றநிறை யன்புளத்தின் மல்காதி சந்திரப்பேர் வழுதி மாதோ. ()

வேறு.

ஏக னுயரன் சந்நிதி நின்றவ் விறைவ னேருற லாற்சுப வாக்குண்
டாக லும்மிட பாருட னுகி யம்பி०கான்வித னுய்விபு வாய
மாக மாரிர*தாட்சபங் கத்தால் வருந்து மேல்வையு தகமளித் திடர்கூர்
மோக மாற்றிய சீதளி நாதன் முளரி யம்பத முதமிகத் துதிப்பான். ()

பொன்னி சேர்வாத் தாற்றல மீதப் பொறியை முன்கொடு திருத்தல
மெனவுந், தென்ன லந்தைதா னன்னவள் வசிக்குந் திறத்திற் சீதளி
யெனவுமர்ச்சனேயா, னின்ன பேர்திருத் தலத்திறையெனவு நிகழ்த்து
வார்புத ரருட்டிற னுணர்ந்தேன், பன்னு சீதளி நாதவி போகின் பங்க
[சாதசிற் பதம்பணி கின்றேன்.

அண்ண லேகநித்தி யாணிக வித்தி யாசம் விப்பிர சிவர்க்குறச் சிறுநீர்
நண்ணேர் பல்வல மாயினு நாடி நணுகு ருதுள நவியுமிவ் விபினத்[னே
தெண்ணிவேதிய னுயடுத் தெழினீரேல்வைகாட்டியென்னிடர்கடிந்தரு
பண்ணு சீதளி நாதவி போகின் பங்க சாதசிற் பதம்பணி கின்றேன்.

சென்னி கோளர் தம்மொடு முன்னிந் திரச பா†கத னுகிய வேல்வைத்
துன்னு விப்பிர ரகிதபூ பால தோடத் தாலவ மதிப்புறத் துயர்ந்தே
னென்னே யாள்பசு பதிதயா நிதிம கேச முற்றுணர் வியாபக யாண்டும்
பன்னு சீதளி நாதவி போகின் பங்க சாதசிற் பதம்பணி கின்றேன்.

இந்து பானுகு சலம்வனி யனில மேக பம்மிய மானனென்ண் மூர்த்தி
மந்த்ரயோகசு தற்பரமுனிவோர்மறைமுன் னூல்களினுலகண் ணியனே
தந்த்ரகாம முப்புர தக்க நாச சக்க ராதியர் போற்றுறு சரண
பைந்தண் சீதளி நாதவி போகின் பங்க சாதசிற் பதம்பணி கின்றேன்.

---

० அன்விதம்—சகிதம். * அட்சம்—அச்சு. † கதன்—தென்றவன்.

தரும தாரக சுகன்மயா கிகட்குத் தருபொன் ஞட்டுறு போகதா யகவ
தரும தன்மவி வேகிக*ணிதனந் தன்னி லவ்வவ பலன்றரு தாணு
கரும சாதசு பலனுல கினர்க்குக் கடிதி னீந்தருள் பவதன்மா கரனே
பரம சிதளி நாதவி போஙின் பங்க சாதசிற் பதம்பணி கின்றேன்.

அரியை யாதிய வமரர்க ளானீ யலகிoஞளினு நோக்கவு மரியை
யுமி லேன்விழி காணவந் துதக முதவு தீர்த்தநா மப்பிர போஙின்
றரிச னத்தன வாதவின் புற்றேன் றைவி கத்தரு மப்பலனிதுவோ
பரவு சித்ளி நாதவி °போஙின் பங்க சாதசிற் பதம்பணி கின்றேன். ()

சம்பு சாருவ சுராசுரர் முனிவோர் தங்க ளாலடிக் கடிதுதித் திடுவோய்
வம்பு ஞற்றிய தக்க%பூ தாத்து வரங சித்திட முனிந்தருள் வரங்
னம்பு யார்ச்சித பதத்தினிற் றுருவ மாக வென்மனம் பதிதர வருள்சேர்
பம்பு சிதளி நாதவி போஙின் பங்க சாதசிற் பதம்பணி கின்றேன்.

வாம மேவுமை தனகடbகாடான் விதாலிங் கனமுற மகிழ்தரு மகேச
சோம நின்மல சானவி சடில சுவர்ண சந்நிப சுவன்னக தாம
காம நாச†வு தாசன வரிண காம்பு சாதவித் தலத்தமர் பாம
§பாம சிதளி நாதவி போஙின் பங்க சாதசிற் பதம்பணி கின்றேன்.

என்றிவ் வாறிறை துதித்திட வெந்தை யினிது வந்தனன் றிருச்செவி
சாத்தி, நன்று பார்த்திப வெந்தெந்தச் சமய நம்மை யந்நிய விடயத்தி ன
டவா, தொன்று மன்பொடு கருதுகின் ருய்நீ யோது மப்பொழு துன்
ஞனத் தபிட்ட, மென்ற யாவையு மளிக்குது நின்ஞு லியம்பு மித்துதி
[யார்தின மிசைப்பார்.

அவா சோரதுர்க் கதியமdசாச னத்தை மேவில ரானந்த மேல்கொண்
டிவர்சு சந்ததி யலகில செல்வ மிட்ட காமியம் யாவையும் பெறுவர்
திவிய நம்பத நிச்சய மாகச் சேர்வ ரிங்கிதி லையமொன் றிலையென்
றெவருமின்புடன்வினவியவுரைத்தானிமயமின்புணர்திருத்தளிநாதன்.

---

* நிதனம்–முடிவு. o தாள்–முயற்சி.

% பூதாத்துவரம்–முன்னடந்தயாகம்.

b காடான்விதாலிங்கனம்–இறுகத்தழுவல்.

† உதாசனன்–அக்கினி. § பாமம்–பிரபை.

d சாசனம்–ஆணை.

வேறு.

எதுபொழுது தேவசங்க சேவிதனு யேற்றி னிமகிரிசை யிடத்தமா விருடிகண மேத்த, வதிகசிவ கணஞ்சூழ வெழுந்தருள்சி தளியா னருளுருவ மிருவொருவ வமர்ந்துதெரி சித்தா, ரதுபொழுது மூலபரி டத்துவிசர் முதத்தா ஞங்குதனித் தனி⁵டன சாமகா ஞதி, விதமருவு மார்ப்பினராய் நதியிதழி மதியம் விரவுமுடி யானையின துதிகள்விளம் பினரால்.

திருமருவு மணிமார்பத் தரிபிரம ஞர்பூ சிதாங்கிரிபங் கேருகனைச் சிவனையவ்வி யயனை, யருண்மருவு சங்கரனைப் பிரமதா திபனை யனங்கர்பல கோடிகுழு மினங்கணிக ராகா, வுருமருவு சுந்தரனை யிந்துபூ டண்னை யோதுபுவ னேசுரனைச் சதாசிவனை யாவுந், தருமருவு சதாம்பிகாப் பிரியநா யகசீ தளியானை யளியானைச் சரணமடை கின்றேம். (கஙஉ)

மேதகுசிற் சொருபனையீ சனையனு மயனை விளம்பரிய வுதாரகீர்த் தியனையுக்கி ரனைவான், மீதிலகு சோமவிம்ப நிபானனனை யரனை விரவுயிர்க ளெவைக்குமன்ன தானமருள் பரனைக், கோதில்கரு ணாநிதியைத் தூநிதிய வீதி கோத்திரச சாங்கசர பதங்கவிலோ சனனைக், சாதமருள் சதாம்பிகாப் பிரியநாயகசீ தளியானை யளியானைச்சரணமடைகின்றேம்.

அரைதிகழும் பாவியாக் கிரசரும தரனை யச்சுதவல் லபனையிட பத்துவசு கானை, விரைகமழுஞ் சாதகும்ப சங்காச தீர்க்க வேணியனை யிந்தமர தாங்கினிதா ரணனைக், கரையிலிட ருவணைபுவி யினர்க்கியற்று மந்தகாசுரசூ தனனையுவ கைம்முனிவற் றிடுநே, சரையருளுஞ் சதாம்பிகாப் பிரியநா யகசீ தளியானை யளியானைச் சரணமடை கின்றேம். (கஙச)

மேயப்ர பாலவை ரவாட்டசே விதனை விளம்பனந்த ரூபனையே சனையனீ சுரனைப், பாயசுதா பசுமசந்த லேபனனை மிருது பாடிதனை பீடில்புரப் பகைஞனையின் படியார், தோயவரு ணீலகோ மளசைல ராச சுதைவதனும் புயபார்க்க ரனையருணன் மேனித், தாயினல சதாம்பிகாப் பிரியநா யகசீ தளியானை யளியானைச் சரணமடை கின்றேம். (கஙரு)

¹பவன பதியாதி சந்திரம ³*சா நீதமகி சுராசிரய நிமலவிக்கி ரகனைத்தாபதனு மிருகண்டு வால்விளைந்த சேன சாபவிமோ சனையதர பல்லவசோ பிதனை, மாபலன்மிக் கருள்பாக்கத் திரிசையுல கவர்க்கு வருத்துனசீ தளிபுனித கிருத்தியனை மேருச், சாபகர சதாம்பிகாப் பிரியநா யகசீ தளியானை யளியானைச் சரணமடை கின்றேம். (கஙசு)

---

*ஆசித—கொண்டுவோரப்பெற்ற.

பன்னகவி ராசவரப் பிரதவருண் மேனிப் பணைமகுட நாககண பூடண
னை முனிவோ, ருன்னதரும் போற்பவபூ சிதலிங்க வாமத் துறமகியை
யுண்டவனைக் கொண்டவனைப் போதிற், பொன்னிமனை ரதப்படியே
புரிந்தளிப்பான் கௌரி புனிதநடங் காட்டியருள் புண்ணியனை யாருந்,
தன்னிகரில் சதாம்பிகாப் பிரியநா யகசீ தளிய:னை யளியானைச் சரணம
[டை கின்றேம்.

சீசரசி னெழுந்தலவு சீதளா னிலத்தாற் செய்கௌரி நடசிரம முத்த
னையுத் தமனைத், தேசவிரும் பல†ராச விருக்கவனுந் தாத்திற் றிப்பியசி
கேதனம்விற் றிருப்பானை விருப்பா, னைசைமிகு சிவதேவ தாங்கிணி
மாதடத்தி னுமாசகலீ லகனையெவர்க் கும்வினையி னுஞற்றுஞ், சாசன
னைச் சதாம்பிகாப் பிரியநா யகசீ தளியானை யளியானைச் சரணமடை கி
[ன்றேம். (க௫௮)

காமினியச் சிவகாம சுந்தரியை யிடப்பாற் கலந்தவனைச் சலந்தரனைக் க
டிந்தவனைப் படிந்து, *பூமினிய லம்பரோ ததிபான நிசியம் புதநிபகந்
தானைமழுக் கரனையரி புரனை, ‡யாமினிய பதிகோடி நிகர்பூதி மேனி
யிலங்குபாண் டரனையருள் வரனைநதி தரனைத், தாமினிய சதாம்பிகாப்
பிரியநா யகசீ தளியானை யளியானைச் சரணமடை கின்றேம். (க௫௯)

என்றினைய வாறுவகை மீக்கூரு மிதயத் தினராக மூலபரி டத்துவிசர்
யாரு, நின்றுதுதித் திடலுநவ புரியிலனவரத நிவாசர்சீ தலாகதமானவரா
தியோர்க்கு, நன்றுவரப் பிரதனுஞ்சீ தலத்தைநினைப் பளவே நவில்சரு
வகாமதா யகனுமா யிலகு, வென்றிதரு சீதளிநா யகனுரைப்பா னீவீர்
விளம்பியவித் துதிவரத்தின் மிகவுமுள மகிழ்ந்தேம். (க௬0)

நமதுதிருத் தலவாச விப்பிரர்காள் கேண்மி னமையிவணீர் துதித்திடுமி
வ் வட்டகமா றதினை, யமையுமுளத் தொடுமெவன்மூன் றினம்படன
ம் புரிவா னனையனிம்மை தனிலிட்ட காமியங்க ளனைத்தையுங், கமைவி
னுகர்ந் தினிதிருந்தே யம்மையினம் பதத்திற் கலந்திருக்கும் பெருவாழ்
வு பெருவனென வருளி, யெமையளிக்கும் பரங்கருணைத் தடங்கடலெ
ம் பெருமா னெழின்மறையோ ரவர்க்கினருள் புரிந்தனனவ் வேல்லை.

வேறு.

மந்திரமா தனுவரனைப் பார்த்நாதி சந்திரனிம் மாற்றங் கூறு
மிந்தனிவேணியரீமுன் ருத்திரங்கொண் டொருபுருடனியக்க முன்னின்

---

†ராசவிருக்கம்—கொன்றை. * பூமியின் அம்பரமாகிய உததியைப் பானித்த நிசிபோன்ற அம்புதம் என்க. அம்பரம்—வஸ்திரம். அம்புதம்—மேகம். ‡ யாமினிபதி—சந்திரன்.

தந்தவழியேநடிக்கும்பாவையின்பாலொருவரம்வேட்டவன்கேட்டாங்கு
நந்தலிலா நின்மாயா வசமாகிப் பலபுவன நடன மாற்றும். (கசுஉ)

*அிதமிலே யான்மலியு மான்மவர்க்கத் தொருவனா யளப்பில்கோடி..
தநுவின்வினை வழிப்புகுந்தாங்கிடருழந்து நின்னருளின் றன்மையாலிம்
மநுடதனு வினைப்பரித்து வந்தபா தந்திரனென் மாட்டு வேட்டுப்
புநிதமலர் வாய்மலர்ந்தென் னாற்புரியுஞ் செயலொன்றுபுகன்றாயன்றே.

தாதையர்க ளனையர்தமில்விழைந்தொன்று வினவிலவர்தம்பாற்கொண்ட
காதல்வெளிப் படவிதனை நீபுரியிற் றருதுமெனக் கழறு மாபோ
லாதரமொ டாதேய மாமெவைக்கு மாதார மாகி யாண்டு
மேத்கநின் றருள்பரமவடியேன்பால்வினவியதென் விளம்புகென்றான்.

அதுவினவு மானருளா மாசனினா லானீத ராய வேத [தேரு
முதுமறையோ ருடனெமையா யிரத்தெழுநூற் றொருவரொனா முறைநீ
மதிகொடுபூ தானமுமத் தொகையீந்து மனைமுதல வயங்க வாற்றிச்
சதமகனிந் தனையொழிகென் றருளவினா யாசனிவை சாற்றுகின்றான்.

இந்திரன்மா லயன்முதலா மெண்ணரிய சுரர்க்குமர சீயு மெந்தாய்
வந்தெளிதி னெனக்கெதிர்நின் றியான்றருபூ தானமுநீ வாஞ்சிப்பாயே
லந்தமிலா நின்கருணை மறைமுதற்பல் லளவைகளி னடங்கு மோநின்
சிந்தனையிங் கிதுவாகி லென்போல வரியதவஞ் செய்தார் யாரே. (கசுசு)

காதரமார் நயனகௌ ரீசதிருத் தலவாச கௌரி மாவட்
†காதரமார் திருநடன விப்பிரர்தஞ் சாபவெந்நோய் கவற்று மென்னுங்
०காதரமா ரளியனுளங் கலங்கனார்முன் கலங்கவரு கருணி நாகக் [டோ
§காதரமா விடனெவர்க்கு மளிக்குமொரு வெளிக்குமிடங் காண்பாருண்

மேதகைய தன்பரிச மாத்திரமே காத்திரசு வேத மாற்றி
யேதறுமின் புதவுமிளந் தென்றல்வியர் வுற்றனில மிரப்ப துண்டோ
வோதுறுபல் லண்டமொருங் குண்டகிரம் பாவங்கி யுதர மேய
வீதிகோத் திரஞ்சொலிப்ப வடதமா ரிடத்தேனும் விழைவ துண்டோ

---

* அிதம்—அநியதம். அது ஈண்டு அளவின்மை.

† காதரம்—விருப்பம்.

० காதரம்—அச்சம்.

§ காத அர என்க.

அகிலபுவ னத்தினும்யா வர்க்குநிய மக்கின்றி யமையா தாகிச்
சகலவுயிர் வருக்கமெலாந் தட்பமுறத் தாகவிடாய் தணிப்ப தாகி
யுகமுடிவின் மிகவிரிந்தெவ்வுலகமுந்தன் னுட்கொள்பெருக் குடைய தாகி
நிகழ்புவனந் தனக்குருப்ப முற்றொழிப்பா னிரந்திடுமோர் நெறியுமுண்
[டோ

பல்வளனுந்தன் னிடையுற்பவிப்பித்தாங்கெவர்க்குமருள்பண்பே பூண்ட
செல்வநிறை வசுந்தரைக்கும் பசும்பொனுறக் கொடுத்திடுதல் செய்வாரு
ண்டோ, வில்வரைய நின்னருளால் வில்வரையா தகிலமெல்லாம் விளக்கு
மேன்மை, யெல்வளரு மல்லவற்கு மெல்லவற்கும் வில்லொருத்த ரீவ
[துண்டோ.

எவருக்கும் புனல்வழங்கு மழைமுகிலும் புனல்வேண்ட வீத லுண்டோ
தாவகற்றும் பெருங்கடற்குங் குறைவுள தாய்க் குறைநிரப்புந்தகையருண்
டோ, யாவருக்கும் பிணியகற்று மமுதினுக்கு நோய்மருத்தொன் றிடு
வாருண்டோ, மேவெவர்க்குங் கொடுத்திடுநீ யான்கொடுப்பக் கொள்வது
[நின் விளையாட் டன்றோ.

என்றாச னியம்புதலு மீவானு மேற்பானு மேற்கின் றோர்க்கு
நன்றுதரு பைம்பொருளு நாமேயாங் கௌரியமு னவின்ற வாறே
துன்றியபூ தானமெமக் களித்தியெனவிளம்பியருள் சுரந்துதாவுந்[றே.
கன்றிளமான் காத்தேந்துங் கண்ணுதலோ னருட்குறியிற் கரந்தா னன்

வேறு.

விரைக்கொ ணீத்த வேணியா, னருட்கு றிக்கு ளாயபி
றுருக்கு மன்பொ டுவகைமேற், றரிக்கு மாதி சந்திரன். (௧௭௩)

திருத்த லேசர் செப்பியாங், கருத்தி கூர்சி வாகமந்
தெரித்து ணர்த்து சிற்பநூ, னிரைத்தொ லாழி நீந்தினோர். (௧௭௪)

ஆய கம்மி யர்க்கொணுத், தேய மிக்க சிதனி
நாய னார்க்கு நாடுநர், பாய சிந்தை பார்வைகள். (௧௭௫)

மீண்டி டாவி தம்பிணித், தாண்டு தம்வ யஞ்செயுங்
காண்ட குங்க ருப்பவின், மாண்ட வத்த மண்டபம். (௧௭௬)

மாத ரார்மா மண்டப, மாதி யாக வமர ரூர்
மீது சார்வி மானமோ, டோது மும்ப ரூறப்பெலாம். (௧௭௭)

கறையி லாட கங்கிளிச், சிறைசொல் சாத ரூபந்திண்
ணறிய சாம்பு நதமெனு, மறுவி னன்கு வகையவாம். (களஅ)

சாத கும்பந் தன்னைமிக், கோத னற்க ணேடவைத்
தேத கட்டி னெங்கணுங், கோத றக்கு யின்றரோ. (களக)

கலைஞர்க் குள்ளங் கவற்றுறு, விலைமிக் கேறு வேதியக்
குலனிற் கூறு மணிகொடத், தலனிற் ருப னஞ்செயா. (கஅ0)

கேழ்கெ ழுந்நி கேதனம், வாழ்ம திக்கொ டாற்றியங்
கேழ்பொ ழிற்கு மேணிபோற், சூழ்ம திற்ரெ குத்துமேல். (கஅக)

பெருகொ ளிச்செய் பிரதமா, வரணத் தீசன் மாதிரத்
திரணி யத்தி னியற்றினன், றெரிம ணிக்கொள் சிற்சபை. (கஅஉ)

வேறு.

இருமை யாகுமா வரணத் தீசனு, * ரரித மேவிய வமலை யம்பிகை
கிரிசை வாழுநி கேதனம்பல,வுரைசெயங்கமோ டொளிர வாற்றினன்.

தேசி னன்னசே திமத்த தென்பிர, தீசி யாசையிற் செய்ய காரிவா
ழாசி லாலய மாட கத்தினற், காசில் காசினற் கவின வாற்றினன். ()

தென்னி லங்குமிச் சினக ரம்மெலா, முன்ன ருள்ளன வேனு மொய்
[யொளிப்
பொன்னின் மாமணியாற்புதுக்குவித்,துன்னரும்பலபணியுஞற்றினன்.

மாதர் சூழ்பரி வார தேவர்தஞ், சேதி மங்களுந் திகழ வாற்றியிவ்
வாதியாகவா வரண மேழுமெண், மாதி ரங்களின் வயங்க வாற்றினன்.

உலவையொன்றனீளொகாமுந்திரண்,டலர்பதத்தன்மூன்றம்பகத்தனுன்
மலர்மறைக்கண மைந்து ளாறுசேர்ந், திலகெ ழூச்சியோ ரெவர்க்கு மெ
[ட்டொணு.

நிலையி னிற்பினு நவபு ரிக்கணேர்ந், துலகு பத்திநின் றுய்ய மேவுகைக்
கலைய ரன்சிவ காமி சண்டனேந் தலைவ ருந்திர தம்மைந் தாற்றினன்.

சலசைமேவுசி தளிப்பைஞ் சூழியைக், கலச மாநகிற் கௌரி யாதியாக்
குலவு மாதிரு குணித ராதிநாட், டலைமை சாலபி தானத் தாற்றிய.

பன்னி ரண்டெனப் பரவு தீர்த்தமு, மன்னு தண்டுறை வயங்க வாற்றுபு
சொன்ன நீடுசோ பான மேனைய, துன்னுகுழைலாந்துலங்க யாத்தனன்

* அரிதம்—திசை.

சைவ மாதவர் தாவி லாகமத், துய்வ ழிக்கணின் றுயர்ப ரார்த்தமா
தெய்வபூசையான்மார்த்தஞ்செய்துசெய்தைவிகத்தர்வாள்சதனமாலைகள்

எழு நூறுமே லெண்ணு மாயிரம், வாழி யந்தணர் மதிய மாற்கரு
ளாழி யான்றளிக் கவாசியாசைவி, லூழினத்தொகை மனையு ளுற்றினன்.

கோதி லேனைமுக் குலத்தி னோர்கள்வாழ், மாதர்நீடுப வனத்தனுள்ளது
மோது மேனகிழ் மயக்கி னுற்றுள, சாதி யாகர நியம சாலமும். (௧௧௯)

பொதியின்மன்றநீள்பொங்கர்நந்தனம்,கதிர்*செயோதிமங்கழகமாவணம்
புதுநிலைக்கொடேர்பொழிலுய்யானங்களெதிமடாலயமேல்வைவாவிகள்

தெற்றியம்பலஞ்செல்லுறங்குபொற்பொற்றையன்னகோபுரங்களாதியா
வெற்றிறங்கொண்மாககரிக்கேய்வன,முற்றுமுற்றினுனுவணை மோகுற.

இன்ன வாறெலா மியைத்த னந்தா, நன்ன ராகமத் தொடர்பு நாடியே
சொன்னவாளியஞ் சுபமு கூர்த்தநா, டன்னின் மேவுசீ தளிய ரற்கரோ.

வேறு.

கரையற்றிடுநீள்○கலப்பைப்பொருளினிரைபற்பலவுநிமிரக்கொணர்வித்
தரைமுற்றையுமோருணர்விற்பெருகாசிரியத்திறலோர்சிவவேதியரால்.

சாற்றும் பெருமா சாந்திச் செயலாங்,கேற்றங்கொளுமாறிம்பர்த் தலமுந்
தோற்றந் தாமரர்சுவர்க்கத் தலமும்,போற்றும்பரிசாற் புரிவித் தனனால்.

அதுமுற் றியபின் மறையோர்க் கமைத்த, புதுமைச் சதனந் தொறுமப்
[புனிதர்
வதிவுற் றிடுதா பனமாண் செயலும்,விதியிற் புரியா விழைவுற் றனனால்.

மறையோ ருணவு மாகே சுரர்நந், நிறைபூ சனையு நிகமா கமஞ்சொன்
முறையிற்புரிந்தான்முதமேவுளமோ,டறைபூ ரியதெக்கணை தந்தனனால்

அந்நாண் முதலா வாசந் நகரிற், றன்னு காமாய்ச் சமைவுற் றுளநீள்
பொன்னூர் மணிமா ளிகையிற் பொலியப், பன்னூன் மருவாப் பகர்நூன்
[முறையே.

* செய் ஓதிமம்—செய்குன்று.
○ கலப்பை—யாகபூஜாத்திரவியங்கள்.

கோலெண்டிசைசெங்கோல்சென் றுலவ, ஞாலம்புரவாஞாலஞ்சடைகோ
பாலன் காகா பாலன் புரிகா, பாலன் னுமையும் பாலன் புரமும். (உ0உ)

கோபாலன்—கண் நுதலன். புரிகாபாலன். செய்கின்ற காபால மெ ன்னுங் கூத்துடையான். உமையும் பாலன் புரமும் என்பதில் பாலன் நடுநிலைத் தீபகம்.

நவமாபுரியன்னவமாருருவன்,னவையுங்கடந்தோனவையும்பயில்வோன்
புவனம் முடியன் புவனம் முழுதார், பவனென் றிலுஞ்சேர் பவனன்
றெனுமுன்.

நாகப் பணியன் னுகப் பணியன், மாகண் ணுளனுர் மாகண் ணுளனுர்
வேகத் தபனன் வேகத் தபன, னேகத் துடையா னேகத் துடையான்.

நா கப்பு அணியல் நாகப்பணியன், மாகண் உளன் நார்மா கண்ணுள ன்ஆர்வேகு அ தபனன் வேகதபனன் ஏகு அத்துஉடையான்.ஏகத்து உ டையான் என்க. கண்—இரக்கம். கண்ணுள்—கூத்து. தபனன்—அக்கினி சூரியன். அத்து—செந்நிறம். ஏகத்தன்மையின் நீங்கான்.

தளியா ரருட்சீ தளிநா யகற்கா, ளளியோ டானீ யவிழா வார
மொளியார் பக்க மாசோற் சவமுற், களிகூர் தருமா கவினப் புரியா.

சாற்றுந் தகைவைசாகம் மதியிற்,போற்றும்புணர்தத் திருநாட்புனைசெய்
தேற்றின் றுவசமேற்ரு விதியின்,வீற்றெண்டினவிம் மிதவுற் சவமும்.

நவமா தினமா ரதவுற் சவமுஞ், சிவமா ரொருபான் றினமே தகைய
கவினுர்தீர்த்தோற் சவமுங் களிகூர்,புவிவான் பாவப் புரிவித் தனனல்.

வேறு.

சுநாசிருனுவின் றுன்பறுத்தி ன்பமே,யநாளி னல்கியவாவதுத் தாரணன்
பனுக பூடணன் காரி பைரவன்,னெனுவ முத்தெம் பிரான்வடுகேசனே.

தாரை சித்திரை மாதஞ்சயித்திரத்,தாருமானியத் தான்ற பொருட்குவை
சேர நல்குபு செல்வச் சிறப்புறச், சாரு மன்பிற் சபரியை யாற்றினுன்.

கௌரி மாவுட் களிப்பமுற் காணுறக், குவலை யத்தர் குளிப்ப வருட்கட
னவிலுமைந்தொழினட்டநவிற்றியாங்,கவிர்சபேசனுக்காதிரைவின்மதி.

ஆனி யுத்திர மாதி நினேற்சவ, மேனை மூர்த்திகட் கேயும் விழாக்களு
மேனி லத்தின் விதித மதியெனு, மான மிக்க வழுதி யியற்றினுன்.

திருத்த லத்தம லன்முனஞ் செப்பியாங், கருத்தி யோடெழு நூற்ரு
ன் றடுக்குமா, யிரத்தொ கைக்கொள்பூ தானமு மீந்தன, னுரைத்த வம்ம
[றை யோர்க்கு மொருவற்கும்.

இன்ன வாறிவை யாதி யியற்றியத், தென்ன ஞதரச் சீதளி நாதனுர்
மன்று கோயின் மூன் றங்கம் வயங்கிய, நன்ன ராகம நீதி நடாத்துபு.

உரிய காலங்க டோறு முளநிறை, பரிவு கூரப் பணிந்தப் பரமனே
விரியு மாமறு நூனெறி மேதினித், தெரிவை யாதாத் திண்புய பூதரம்.

தன்னில் வாழ்வுறத் தாங்கின னிம்பரின், மன்னி நாள்பல வாழ்ந்தனன்
[மைந்தனைப்
பொன்னின்மாமுடிசூட்டுபு பூதர,மன்னவன்புயத் தாற்றவளித்தனன்.

மாநிலத்தை விடுத்து மறைமுனி,தானளித்தமுற் சாபந் தணந்துபோ
யானை டுத்த கமலத் தமலனுர், கான டுத்த மலர்க்கழல் கைதொழா.

அன்ன சீதளி நாத னருடாத், தன்ன வாழ்பதந் தன்னின் மருவுபு
வென்ன வாழ்வு மிதற்கிணை யின்றென, மன்னி வாழ்ந்தனன் மாமதி
வேந்தனே.

வேறு.

பூதலமு மீதலமும் போற்றுறுமிச் சீதலத்தின் புராணந் தன்னைக்
கோதறமெய்ம் மாதவனுங் குறுமுனியன் புறுமுனிவர் குலவு காதன்
மீதெழமுற் றோதுதலும் வினவுமவர் மனமொழிமெய் வேறின் றாகி
மேதகைய வாதாமே விளங்குருவா யுளங்குளிர்ந்தார் விழிநீர் பெய்தார்.

விழியொழுகு மானந்த வெள்ளமதி னுள்ளுடலம் விரவ நின்றூர்
பொழியமுத மழலைமொழிப் புனிதைசிவ காமிநடம் புரியெம் மீசன்
வழியருணன் மலரடிகண் மனத்திருத்திச்சிரத்திருகை வயங்கச்சேர்த்தி
மொழியமுதுண் டமரொன்பேர்முகமெனறவடைந்துபா முத்தானேனும்.

மலையமலை சிலையமலை மன்னமலை துன்னமலை மலயக் கோமா
னிலையமலை யிலையமுறுத் தின்னருளே மன்னுயிர்க்கீந் திடச்செ யீச
னிலையமலை தலையொழிகென் ருமுனிவர் மனனுவந்துநின் றுபோற்றுங்
கலையமலைத் தெழுமடிகேள்சுரோத்திரத்தினேத்திரமுங்களித்தல்வேட்
[டேம்.

மலையமலையானது, சிலை அமலைக்கு மன்னுடைய அமல் ஐ துன்
னு அ மலையேயாம். மலயக்கோமான், இலயத்தை மன்னுயிர்க்கு
அலை இலயமுறுத்து இன்னருளீந்திடச் செயீசனேயாம். (இதுவே)
நிலை (இதில்) அ மலைதலை ஒழிக என்ருமுனிவர்.....போற்றும் அடி
கேளென்க. இலயம்-ஒடனம். அலை-ஒற்று இரட்டிக்காமல் நின்
றது. இலயமுறுத்து-கெடுத்து. அ-இரண்டும் சுட்டு. கலையம்-
கலசம். அலைத்து-உடைத்து.

எனமுனிவ ரிறைஞ்சியினி தியம்புமொழி யெழின்மலயத் திறைவன்
னனியுவகை யுளந்துரப்ப நற்றவத்தீர் நமதுளமு நயந்தவாறே [கேளா
யினிதுரைத்தீ ரெனத்தவத்தே ரிவர்ந்துவிசும்பாறாக வெழுந்துபோந்தம்
முனிவரொடு நவபுரியின் முன்னுபுசீ தளியின்முறை மூழ்கி னானல்.

அனந்தரமக் குறுமுனியோ டுறுமுனிவ ராலயத்து ளணைந்து போய்த்தா
மினந்தரமுன் கேட்டுவகை யெய்துமுரைப் பொருள்வெளியி னெதிரே
மனந்தழலி னெழுதாக மலர்விழிநீ ராறாக மாறாதோடக் [கண்டு
கனந்தருமா மிடற்றனைய சீதளிநா தனைப்பணிந்து கரைந்து போற்றி.

உரியசிவா கமமரபா லுடையானை யிடையாமெய் யன்பி னோடு
மரியவுப காரணமெலா மவணீட்டிச் சபரியைநன் றாற்றி யந்நாட்
பிரியமுள நிறையவுப வாசிகளாய் வீற்றிருந்து பிற்றை நாளுந்
துரியநிலை கடந்தபரஞ் சோதிசீ தளிநாதற் றொழுது முன்போல்.

பூசனைநற் றைலமுதற் பொற்பமரும் பற்பலமாண் பொருளி னாட்டித்
தூசணிபைந் தொடைநறிய தூபமொளிர் சுடர்வகைய சொன்றி யாதி
யாசகல வணிந்துவளைத் தமுதுசெய்வித் திம்மரபி னாற்றி யாவு
நேசமுறச் சமர்ப்பணஞ்செய் தங்கணெதிர்நின் றுதுதி நிகழ்த்துவாரால்.

திருக்கைலைதனிலிடப்பாற்செல்விநடம்வினவனி சேர்ந்து நோற்றீண்
டிருக்கவெதிர்போந்தவள்பேரிலயமகிமாதவன்முன்னிமையோர்காணக்
கருக்கழலும் பிருகுமுனி கட்செவிமுன் னேருவகைக் கடலின் மூழ்க
வுருக்கமுள நிறைந்தவடா னுவந்தருளப் புரிந்தருளு மொருவ போற்றி.

கண்டிடுமால் பின்றனிப்பாற் கடலினெழுந் தஞ்சலித்த காட்சிநோக்கிப்
பண்டிவனேற் றமர்ந்திருந்தபதுமைமுனம்புதுநடஞ்செய்பரமபோற்றி
திண்டிறல்சேர் பரியங்க சிவயோகஞ் செய்வடுகச் செம்மற் கந்நா
ளண்டர்நிறை சீதளிப்பா லனம்புரியுங் கனம்புரிந்த வரசே போற்றி.

சீதளியெண் டிசையினிலுந்திசைபாலர்தினைத்திழந்ததிறன்முற் சேர்ந்து
காதரமற் றுலகளிப்பக் கருணைபுரிந் தருணயனக் கடவுள் போற்றி
யாதிசந்தி ரப்பெயரி னவனிபன்றே ரச்சிறுவித் தவனை யீண்டு
பாதியற வெதிர்தகைந்து பணிபுரிவித் தருள்புரிந்த பகவ போற்றி.

பெருகுதவப் பிருகுமுனி பிரியாம லருகமர்ந்து பேணி நாளு
முருகுமனத் துடன்பூசை யுவந்துசெய நிவந்தமருமொருவ போற்றி

திருமணஞ்செய்வித்தரிதன் றிருத்தளியுத்தரத்திருப்பச்செய்தாய்போற்றி
யருமுனியை யிகழ்ந்தமணிப் பிரகாசற் கருளுருவ மளித்தாய் போற்றி.

அரசன்வெகுண்டகாமதிலடையாமலகற்றுவிப்பவனருண்மூழ்கும்[ற்றி
புரைகொள்கிருட்டினசன்மாப்புனிதமுறீஇப் புகுதவருள்புரிந்தாய் போ
பரவரிய சிதளியெம் பரம்பரனே நிரம்பருள்பா லிப்பாய் போற்றி
விரவுமலர்க் குழலிசிவ காமசௌந் தரியொருபால் விமல போற்றி.

என்றினைய துதிகள்பல வியம்பிமுனி வரர்யாரு மிறைஞ்சி யன்பு
துன்றுமுளஞ் சிதளியான் றுணையடிக்கீழிருத்துபுபின்றொலைவில் சீர்த்தி
மன்றன்மலர்ப்பொழின்மலயமாதவனைவணங்குபுதம்வனத்திற்சென்றார்
பின்றனியக் குறுமுனிதன் பெயரிலங்கு சிவலிங்கப் பெருமான் பாதம்.

தனையுமருச் சனைபுரிந்து தன்மலய மலையதனிற் சார்ந்தா னென்று
வினையறுநைமிசமெனும்பேர்விபினமதிற்சூழ்ந்திருந்துவிரும்பிக்கேட்ட
முனிவருளங் களிதூங்கி முதமிகுமற் புதமடைய முதிர்பே ரன்பாற்
புனிதநிறை சூதமுனி புகன்றுரைத்தான் றிருப்புத்தூர்ப் புராணமீதே.

வேறு.

மாதிருப் புத்தூர் வாழி மன்னிரு தீர்த்தம் வாழி
சீதளிநாதர் வாழி சிவகாம வல்லி வாழி
யாதர வடுகன் வாழி யகம்படித் தொண்டர் வாழி
யோதுமிப் புராணம் வாழி யுலகெலா மென்றும் வாழி. (உகூஉ)

ஆதிசந்திரபாண்டியச் சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கங உரு.

திருப்புத்தூர்ப் புராணம்

முற்றிற்று.

---

